கழக வெளியீடு: கநூ௦கூ

# தமிழக சாவகக் கலைத் தொடர்புகள்

ஆசிரியர்:

நுண்கலைச் செல்வர்

திரு அ இராகவன்

பாளையங்கோட்டை.

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.

திருநெல்வேலி-6. : : சென்னை-1

1967

# முன்னுரை

சாவகம் இயற்கை வளம் வாய்ந்த எழிலிற் சிறந்த நாடு. அந்நாட்டுமக்கள் அழகும் அன்பும் ஆண்மையு மிக்கவர்கள். அவர்கள் நல்ல சமயப்பற்றும் நுண்ணிய கலையுள்ளமும் வாய்ந்தவர்கள். இந்தியாவிற்கு அடுத்த படியாகச் சைவசமயம் பௌத்தநெறி ஆரியமதம் அங்கே தான் அரசுகட்டிலேறி ஆட்சி செய்தது. அதனால் சாவகம், சுமத்ரா பாலி போன்ற தீவுகள் சேர்ந்த தொகுதி இந்தோ னேசியா என்ற பெயரைப் பெற்றது போலும்.

சாவகத்தில் எண்ணற்ற இந்து நாகரிகச் சின்னங்கள் என்று கூறப்படுவன பல உள்ளன. காடுகளிலெல்லாம் அழிந்து கிடக்கும் மாடங்களும், மடங்களும், கோயில்களும் இன்றும் காணக்கிடக்கின்றன. ஜோஜா (Djcoja) நகரத்தின் கிழக்கு எல்லையில் ஜகோர்த்தா (Djocjakarta) சாயிரா கர்த்தா (Soerakarta) குடியிருப்பு மனைகள் தனித்தனியே பிரிந்து கிடக்கின்றன. அங்கு முந்திய காலங்களில் குரு மார்கள் வசிக்கும் இடங்கள் தனியாக இருந்தன. அந்நகர் ஒரு விரிவான கோயில்களின் நகராக உருவம் பெற்று ஒளிர்ந்தது. சோரோ கெடாக, பெரம்பானன் (பிரமவனம்) சம வெளிகளில் எண்ணற்ற கலைச்சின்னங்கள் மூலைக் கொன்றாகப் பரந்து கிடக்கின்றன. அவைகளிற் பல பழைய கட்டிடங்களின் அழிபாடுகளேயாகும். ஒரு காலத்தில் இவைகள் குப்பைமேடுகள் போல் எண்ணி அலட்சியப் படுத்தப்பட்டு வந்தன. இன்று அந்த எண்ணங்கள் மறைந்து விட்டன. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னே பல

ஐரோப்பிய அறிஞர்கள் இவைகள் குப்பை மேடுகளல்ல; அரிய கலைக்கருவூலம் என்று கண்டு களித்து ஆய்ந்து அதன் பெருமையை உலகிற்குப் பறைசாற்றினர். இப்பொழுது இந்தக் கோயில் நகரம் மீண்டும் தன பழைய சிறப்பைப் பெறக்கூடும் என்ற நம்பிக்கையை உண்டு பண்ணும் நிலையில், இன்று பெரம்பானன் போரோபுதூர் இருந்து வருகின்றன. அழிபாடுகளைப் பார்க்க நீளத்தில் ஒன்றரைமணி நேரமும் அகலத்தில் ஒருமணி நேரமும் நடந்து ஆகவேண்டும். அப்பொழுதுதான் அதனுடைய சிற்பச் சிறப்பையும் கலை நுணுக்கத்தையும் தெரிந்துகொள்ளமுடியும். இந்த அரிய கோயில்கள் ஒன்பதாவது, பத்தாவது நூற்றுண்டுகளில் உருவாக்கப்பட்டனவாகும். பழைய மாதரம் * (1) என்ற வலிமை வாய்ந்த இந்து ஆட்சி மத்திய சாவகத்தில் மலர்ந்திருந்த இந்தக் கட்டிடங்களின் திருப்பணிகள பத்தாவது நூற்றுண்டின் முற்பகுதியில் நின்று போய்விட்டன. அடிப்படையிட்ட அரிய திருப்பணிகள் பல முற்றுப் பெறுமலே அரைகுறையாய் நின்றுபோய்விட்டன.

பெரம்பானன் சமவெளியின் வடக்குப் பகுதியில் தெற்கிலிருந்து வடக்கே இருகூறுக ஓபக் ஆறு இறுதிவரை ஓடுகிறது. அங்குக் கலைகளின் தெற்குவரிசையின் முன் ஆறு வந்து சேருகிறது. ஆற்றின் ஒருபக்கம் தெற்கே சோரோகிடாக் சமவெளி காணப்படுகிறது. இந்தச் சமவெளியில்தான் சாவகத்திலுள்ள சைவசமயப் பிறப்பிடத்தின் மேம்பாட்டு நிலை காணப்படுகிறது. நகரின் வடக்குப் பகுதி, ஒரு விதிவிலக்காக இருக்கிறது. அங்குப் பௌத்த சமயச் சின்னங்கள் காணப்படுகின்றன. பெரம்பானன்

---

* Not to be confused with the later Mataram with which the East India Company came into contact.

சமவெளியில் இப்பொழுது காணக் கிடக்கும் அழிபாடுகள் உள்ளத்தைக் கவர்வனவாக இருந்தாலும் அவை மறு மலர்ச்சி பெறச் செய்ய முடியாதவாறு சிதைந்து சீர்குலேந்து கிடக்கின்றன. மிகத் தென்கோடியில் அழிபாடுகள் காணப் படினும் முன்னுளில் எழுந்த கோயிலின் பெரும்பகுதியின் உருவை இன்று காண முடியும். சிறிது காலத்திற்கு முன் பெரம்பானன் கோயிலின் சிலபகுதிகள் புதுவாழ்வு பெற்று எழுந்தன.

மத்திய சாவக ஆட்சியின் அழிவிற்குக் காரணம் திட்டவட்டமாகப் புலப்படவில்லே. அங்குள்ள அழிபாடுக ளுக்கும் ஆட்சியின் வீழ்ச்சிக்கும் தொடர்பு உண்டு என்று கூறமுடியவில்லே. கோயில் கட்டி முடிப்பதற்கு முன்-இடை நடுவில் உள்ள பகுதிகள் எக்காரணத்திலுலோ நிறை வுருமல் அரைகுறையாக விடப்பட்டுள்ளன என்று நன்கு தெரிகிறது. கோயிலின் சுவர்கள்மீது சாந்து பூசப்பட வில்லே. நுண்ணிய அலங்கார வேலேப்பாடுகள் எதுவும் தொடங்கியிருந்தது என்று கூறுவதற்குரிய அடையாளங் கள் எதுவும் காணப்படவில்லே. நிலநடுக்கமே பெரம்பானன் கோயிலின் சிதைவிற்குக் காரணமாக இருக்கும் என்று நம்பப்படுகிறது. மேற்பூச்சுப் பூசி, வேலேகள் அரைகுறை யாக இருக்கும்பொழுது நிலநடுக்கம் இக்கோயில்களே எளிதில் சாய்த்திருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகிருர்கள். பழைய நிலநடுக்கத்தில் வீழ்ந்து விடாது எஞ்சிய சில பகுதிகளும் 1867 ஆம் ஆண்டில் எழுந்த பெரிய நிலநடுக்கத்திஞல் அடியோடு சரிந்து வீழ்ந்துவிட்டது. இன்று சாதாரண மாகப் பார்ப்பவர்கள் கண்களுக்கு ஒரு பெரிய கற்குவிய லாகத் தெரிகிறதே யொழிய வரலாற்றுப் புகழ்பெற்ற பழம் பெரும் நாகரிகத்தைப் பிரதி பலிக்கும் சிற்பக் கருவூலமாகத்

தெரியவில்லை. சிலர் அங்கு வீழ்ந்து கிடக்கும் கற்களை எடுத்துக்கொண்டு போய்த் தங்களின் சொந்த வீடுகளுக்கோ குளங்களின் படிகளுக்கோ உபயோகப்படுத்தி வருகின்றார்கள்.

இவ்வாறு அங்கு வீழ்ந்து கிடக்கும் கற்களை எடுத்துச் சுவர்கள் கட்டப்பட்டிருப்பதைக் கண்டு கலைஞர்கள் வருந்திக் கண்ணீர் விட்டுள்ளனர். இந்தப்போரோபுதூர் பெரம்பானன் ஆகியவைகளின் அழிபாடுகளைப் பற்றி ஐரோப்பிய அறிஞர்கள் கூடத் தவறான முடிபிற்கு வந்துள்ளார்கள். இது தனிப்பட்ட ஒருவரின் வீடு அன்று. பொதுச் சொத்து. இதனை அரசாங்கமே மறுமலர்ச்சி பெறச் செய்திருக்க வேண்டும். முன்னர் அழியாது எஞ்சிநின்ற பகுதிகள் இப்பொழுது அழிந்து போய்க் கொண்டிருக்கின்றன. அறியா மக்கள அவைகளைப் பெயர்த்து வேறு இடங்களில் பொது மேடைகளும், சுற்றுமதில்களும் கட்டிப் பயன்படுத்தும் "திருப்பணி" இன்னும் நடந்து கொண்டே இருக்கிறது. நீண்டகாலமாக இக்கலைச் செல்வங்களைப்பற்றிப் பெரும்பாலோர்க்குத் தெரியாது. 1867 ஆம் ஆண்டுக்குப் பின்னர் தான் பெரம்பானன் அழிபாடுகள் ஐரோப்பிய அறிஞர்கள் கண்களுக்குப் புலப்பட்டன. அதைப்பற்றி உலகக் கலை மேதைகள் அக்கறை செலுத்துமாறு பல கட்டுரைகளும் நூல்களும் வெளியிடப்பட்டன. உலந்தா அரசாங்கப் புதை பொருள் இலாக்கா இங்குள்ள அரும்பெரும் கலைக் கருவூலங்களை எடுத்துத்தனது நாட்டிலுள்ள லெய்டன் நகரத் தொல் பொருள் காட்சிச்சாலையில் பாதுகாத்து வைத்திருக்கின்றது. பிரஞ்சு நாட்டிலுள்ள தொல்பொருள் காட்சிச்சாலையிலும் இங்கிலாந்து நாட்டிலுள்ள தொல்பொருள் காட்சிச் சாலையிலும் ஓரளவு இங்குள்ள கலைப்பொருள்கள் சேர்த்து வைக்கப்பட்டுள்ளன.

இந்தோனேசிய அரசாங்கம் இதைப்பற்றி அதிக அக்கறை செலுத்தவில்லை. இந்திய அரசாங்கமோ, இந்தியக் கலைஞர்களோ இதைப்பற்றிக் கடுகளவும் கருதிப் பார்க்கவில்லை. தமிழ் நாட்டு அரசாங்கத்தினர்களும் தமிழறிஞர்களும் சாவக நாட்டிற்கும் நமக்கும் என்ன தொடர்பு? சாவகக் கலைகளைப்பற்றிச் சாவக மக்களும் சாவக அரசாங்கமும் அக்கறை எடுக்க வேண்டுமே யொழிய நமக்கென்ன? என்று அலட்சியமாய் இருந்து வருகின்றார்கள்.

தமிழ்நாட்டு மக்களின் நிலைகண்டு நாம் வருந்தாதிருக்க முடியவில்லை. சாவக நாட்டு மக்கள் இந்திய மக்களின் மண உறவுகொண்ட மக்கள். அங்கு அழிந்து கிடப்பது இந்தியக்கலை என்று சிறிது காலத்திற்கு முன்பு வங்க மக்கள் உணர்ந்து வங்க நாட்டில் இந்தியக் கழகம் (Greater India Society) என்று ஒரு கழகம் கண்டு பல கட்டுரைகளும் நூல்களும் வங்கத்தில் வெளியிட்டார்கள். சொற்பெருக்குகள் நடந்தன. கவியரசர் தாகூர் போன்றவர்கள் சாவகம் சென்று திரும்பினார்கள். அதற்கப்பால் அந்த உணர்ச்சியும் மங்கி மறைந்துவிட்டது.

தமிழகத்தில கலைக்கழகம் கண்டு இந்திய அரசாங்கத்தின் ஆதரவோடு இந்தியக் கலைகள் நிலைபெற்ற நாடுகளோடு பண்பாட்டுத் தொடர்பு கொள்ளவேண்டும். இந்தியக் கலை வளர்ந்துள்ள நாட்டினர்களை நமது நாட்டிற்கு அழைத்து இங்குள்ள கலைச் செல்வங்களைக் காட்டி அவர்களோடு நல்லுறவை வளர்க்க வேண்டும். வெளிநாடுகளில் அழிந்து கிடக்கும் கலைச் செல்வங்களைப் பாதுகாத்தல் செய்ய அந்த நாட்டின் அரசாங்கத்தையும் தூண்டவேண்டும். மறுமலர்ச்சி செய்ய முடியாதவைகளை இந்திய நாட்டிற்குக் கொண்டு

வந்து இவைகளை இங்குப் புதுப்பிக்கவோ அல்லது காட்சிச் சாலையில் இடம் பெறவோ செய்யவேண்டும்

இந்திய மக்களும் சிறப்பாகத் தமிழ் மக்களும் தங்கள் வாழ்வில் ஒவ்வொரு கோணத்திலும் எத்தனை எத்தனையோ கலைகளைக் கண்டார்கள். கலைகளைக் கடவுளாகக் கருதி, கண்ணெனக் கொண்டு கவனமாக வளர்த்து வந்தனர். தமிழகமாகிய தாயகத்திலும் தாங்கள் குடியேறிய சேயக மாகிய சாவகம் போன்ற நாடுகளிலும் அற்புதமான சிற்பச் சிறப்புமிக்க பெருங் கோயில்களை அமைத்தனர். ஒப்பற்ற திருஉருவங்களைக் கல்லில் செதுக்கினர் - உலோகங்களில் வார்த்தனர். ஆடவல்லவனுக்கும் அழகிய திருஉருவம் அமைத்தனர். பல்வேறு விதமான சிவலிங்கங்களை உரு வாக்கினர். கொற்றவைக்கும் சிவனுக்கும் திருமாலுக்கும் நான்முகனுக்கும், புத்தனுக்கும் போதிசாத்தவனுக்கும் உயர்ந்த உருவங்களைப் படைத்தனர். கல்விக்கும் காத லுக்கும் வீரத்திற்கும் அழகிற்கும் கூட உருவங்கள் கண்டனர்.

கற்றோர்களும், கலைஞர்களும் கௌரவிக்கப் பட்டனர். அவர்களின் சிந்தனைகளுக்கு நிறைந்த வாய்ப்பு அளிக்கப் பட்டது. மன்னர்களும் மக்களும் அவர்களுக்கு உதவினர். அற்புதமான பொற்புறும் சிற்பங்கள் பல உருவாயின.

எத்தனை எத்தனையோ எழில்மிக்க பெருங் கோயில்கள் - விண்ணையெட்டும் விமானங்கள். விதவிதமான தூண்கள் : விசாலமான நீண்ட பிரகாரங்கள் ; காலங்களைக் காட்டும் கவின் பெறும் போதிகைகள், அழகிய கும்பபஞ்சரங்கள், மாடங்கள் ஆகிய அனைத்தும் நமது நாகரிக முதிர்ச்சியின் பயனை எழுந்தனவாகும்.

தமிழகத்தில் தமிழையும் தமிழ்க்கலைகளையும் பாண்டியர்கள் பண்டு தொட்டு வளர்த்து வந்தனர். அப்பால் சோழர்களும் சேரர்களும் இறுதியில் பல்லவர்களும் வளர்த்துத் தமிழ்க்கலையை மிகவுயர்ந்த நிலைக்கு இட்டுச் சென்றனர். காஞ்சியும், தஞ்சையும் மதுரையும் மாமல்லபுரமும் மட்டுமல்ல சாவகத்தில் பெரம்பானனும், போரோபுதூரும், கம்போசகத்திய அங்கோர் வாட்டும் தமிழகர்களின் பெருமைக்கு—இந்தியர்களின் சிறப்பிற்கு அழியாச் சின்னமாக இலங்குகின்றன.

நம் நாட்டுச் சிற்பங்களும் — ஓவியங்களும் அழகின் பிரதி பலிப்பாக மட்டுமன்றி மக்களின் நன்னெறியை வளர்க்கும் சட்டங்களாகவும் திகழ்கின்றன! வரலாற்றைக்காட்டும் ஒலிகளாகவும் அல்லவோ இலங்குகின்றன!

பொதுவாக இந்தியாவும் சிறப்பாக நமது தாயகமாகிய தமிழகமும் ஆட்சி முறையிலோ, ஆன்மீகத்துறையிலோ, வாழ்க்கை வழியிலோ, நனிமிக்க நாகரீக வாழ்விலோ, ஆழ்ந்த அறிவு ஒளியிலோ அளப்பரும் ஆற்றலிலோ ஆண்மையிலோ நிலைபெற்ற கலையின் பெருமையிலோ தரணிக்கோர் வழிகாட்டியாக விளங்குகிறது. அஃது ஈழம், சாவகம், மலையம், சிங்கபுரம், சுமத்திரா, பாலி, கமமோசகம், போர்டையோ, சம்பா போன்ற நாடுகளிலே நமது கலைக்கும் வாழ்விற்கும் பண்பிற்கும் அளித்த மகோன்னதமான நிலையை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் உடல் சிலிர்க்கிறது; உள்ளத்தில் உவகை எழுகிறது; பெருமிதத்தால் நந்தோள்கள் உயர்கின்றன.

எனவே வாழ்வில் உயர்ந்து விளங்கிய நாம் உலகிற்கு வழிகாட்டி வந்த நாம் ஏன் வீழ்ச்சியுற்றோம்? தாழ்ச்சிபெற்

றோம் என்பதைச் சிறிது சிந்திக்க வேண்டும். பழம் பெருமையை எண்ணிப் புகழ் உரைகளைக் கூறிக் கொண்டிராது வரலாற்றில் நாம் கண்ட படிப்பினைக் கேற்ப வாழ்க்கையைத் திருத்தி நமது நாட்டைப் பாதுகாக்கவும் நமது மொழியை, கலையை, நாகரிகத்தை, பண்பாட்டை வளர்க்கும் புதுக் கலைகளைக்கொண்டு நமது நாட்டை வளர்க்கவும் தூண்ட வேண்டும் என்ற நோக்குடன் இந்நூலைத் தமிழ் மக்களிடம் சமர்ப்பித்துள்ளேன். இந்நூலைப் படிப்பதின் மூலம் எழும் உணர்ச்சி நமது மொழியையும் கலையையும் வளர்க்க உறுதி யெடுக்கும் உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து உந்தும் பெரும் மூச்சாக இருக்கவேண்டும் என்பது எனது அவா.

"கலைக்கூடம்"
61, பெருமாள் வடக்குத்தெரு
பாளையங்கோட்டை

அ. இராகவன்.

# பதிப்புரை

தமிழர் பண்பாடு என்பது தனித்திலங்கும் பண்புடையது. தமிழர் எங்கெங்கு உள்ளாரோ அங்கங்கு இதைக் காண இயலும். 'திரைகட லோடியும் திரவியந் தேடு' என்பதற்கொப்பப் பொருளீட்டுவான் வேண்டிப் பல்வேறு நாடுகளுக்குத் தமிழர்கள் சென்று அங்கங்குக் குடியேறியுள்ளனர். பெரும்பாலும் கீழ்த்திசை நாடுகளான பர்மா, மலேயா, இலங்கை போன்ற நாடுகளிலும் சிறுபான்மையாக ஆப்பிரிக்கா போன்ற இதர நாடுகளிலும் தமிழர்கள் குடியேறியுள்ளனர்.

தமிழர்கள் தாம் குடியேறிய நாடுகளிலெல்லாம் தம் தமிழ்ப் பண்பாட்டை, கலையை, சமயத்தைப் பரப்பியுள்ளனர். தமிழ்ப் பண்பாடு சிறந்து விளங்குவதற்கு ஒரு காரணம் திருக்கோயில்கள் என்று புகலலாம். கோயிலையொட்டிச் சிற்பக்கலை, கட்டிடக்கலை, நாட்டியக்கலை, கூத்து, இசைக் கலை போன்ற பல கலைகள் வளர்ச்சியடைந்துள்ளன. சமயப் பற்றும் கலைப்பற்றும் மிக்க தமிழர்கள் தாங்கள் குடியேறிய நாடுகளிலும் தாங்கள் வழிபட்ட கடவுளுக்குக் கோயில்கள் எழுப்பினர். அங்கெல்லாம் தமிழர்களின் கட்டிடக்கலையும் சிற்பக்கலையும் வேரூன்றி வளரத் தொடங்கின.

சாவகத்தில் தமிழர்கள் ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்குமேல் வாழ்ந்து வருகின்றனர். எனவே தமிழர் பண்பாடு அங்கு மிகச் சிறப்பாகப் பரவியுள்ளது. அங்குள்ள போரோபுதூர், சாண்டிகலசான் போன்ற இடங்களில் காணப்படும் எண்ணற்ற இடிபாடுற்ற கோயில்கள் தமிழர்க

ளும் சாவக மக்களும் சேர்ந்து இந்துமதக் கடவுள்களான சிவன், திருமால், துர்க்கை, பிள்ளையார் போன்றவர்களுக்கு எழுப்பப்பெற்ற கோயில்களே.

இந்நூல் தமிழகத்திற்கும் சாவகத்திற்குமுள்ள கலைத் தொடர்புகளை விளக்குவது. 'தமிழர்கள் எங்குச் சென்ருலும் அங்குள்ள மக்களோடு பாலில் சீனி கரைவதுபோல இரண்டறக் கலந்து வாழ்ந்தவர்கள். பிறசமயங்களோடு தம் சமயங்களையும் இணைத்துச் சமயப் பூசலின்றித் தம் வாழ்க்கையை அமைத்துக்கொண்டவர். தம் சமயம், பண்பாடு, கலை முதலியவற்றை அந்தந்த நாட்டுப் பண்பாடு, கலை ஆகியவற்ருேடு ஒன்றுவித்துப் புதிய பண்பாட்டையும், கலையையும் உருவாக்கியவர்' என்பதை இந்நூல் நன்கு விளக்குகின்றது.

இந்நூலை இயற்றியவர், நுண்கலைச் செல்வர் திரு. அ. **இராகவன் அவர்கள்.** சாவா, சுமத்திரா, மலேயர், இலங்கை போன்ற பல நாடுகட்கும் சென்று அங்குச் சிறிது காலம் வாழ்ந்தவர். தமிழர் பண்பாடு, கலை பற்றிய ஆராய்ச்சியில் நீண்டநாட்களாக ஈடுபட்டுப் பல ஆராய்ச்சி நூல்களை எழுதியுள்ளவர். பழைய நாணயங்கள், சிற்பங்கள் போன்ற கலைப் பொருள்களைத் தொகுத்துப் பாதுகாத்து வருபவர். இந்நூலை வெளியிட எமக்கு வாய்ப்பளித்தமைக்கு அவர்க்கு எம் நன்றியுரித்தாகுக.

தமிழர்தம் மேன்மையைப் புலப்படுத்தும் இந்நூலை அனைவரும் படித்துப் பயன்பெறுதல் வேண்டுமென்பதே எம் அவா.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# தமிழக – சாவகக் கலைத் தொடர்புகள்

## 1. இந்தியாவும் இந்தோனேசியாவும்

பண்டைக்காலத் தமிழர்கள் வாழ்ந்த தமிழகம் அல்லது லெமூரியாக் கண்டம் என்று கூறப்படும் பெரிய நிலப்பரப்பு இன்றைய கன்னியா குமரிமுனைக்குத் தெற்கே பூமியின் நடுக் கோட்டை அடுத்து ஆப்பிரிக்கா முதல் சாவகம், சுமத்திரா, முதலியவைகளை உள்ளடக்கிக் கொண்டு நியுகெனியாவரை பரவி இருந்தது. அதன்பின் தமிழர்கள் ஐயாயிரம் ஆண்டு களுக்கு முன்னர் இமயந்தொட்டுக் குமரிவரை பரந்து கிடக்கும் பாரத பூமியை ஆண்டு வந்தார்கள். அயல் நாட்டி லிருந்து வந்த ஆரியர்களின் ஆக்கிரமிப்பால் தமிழர்களும் அவர்களின் இனத்தவர்களான திராவிடர்களும் பாரத நாட்டின் வட பகுதியினின்று தென்பகுதிக்கு நெருக்கித் தள்ளப்பட்டார்கள்.

திராவிடப் பெருங்குடி மக்கள் சிந்து, கங்கை, பிரமபுத் திரா போன்ற ஆற்று வெளிப்பகுதி (பிரதேசங்)களில் நல்ல விளைநிலங்களை அமைத்துக்கொண்டும் நாடு, நகரங்களை அமைத்துக்கொண்டும் சீரும் சிறப்புமாக வாழ்ந்து வந்தனர். அவர்கள் மிகத் தொன்மையான காலத்திலேயே நிலத்தைக் கடக்க வண்டிகளையும், கடல், ஆறு முதலிய நீர்நிலைகளைக் கடக்க மரக்கலங்களையும், படகுகளையும் பெற்றிருந்தனர். 'திரை கடலோடியும் திரவியம் தேடு' என்னும் முதுமொழிக் கேற்ப ஆழ்கடல்களைக் கடந்து வணிகம் நடத்தவும் தெரிந்

திருந்தனர். அவர்தம் கவின்மிகு கட்டிடங்களையும், படிமங்களையும், அணிகளையும், மணிகளையும், பானை சட்டிகளையும் நகர் அமைப்புத் திறனையும் கப்பல் கட்டும் திறமையையும் இதற்கு முன் மெய்ப்பிக்க முடியாதிருந்தது. ஆனால் சுமார் 36 ஆண்டுகளுக்கு முன் கண்டுபிடிக்கப்பட்ட சிந்துவெளி நாகரிகத்தின் பலனாக ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் வளர்ந்திருந்த திராவிட நாகரிகம் இதுவென உலகம் உணரும் நிலைமை எழுந்துவிட்டது.

நனி சிறந்த நாகரிகம் வாய்ந்த திராவிட மக்கள் காலக் கோளாறினால் ஆரியர்களால் தென் இந்தியாவிற்குள் விரட்டப்பட்டாலும் தென் இந்தியாவில் சிறு சிறு நாடுகளை அமைத்துக்கொண்டு அவைகளைத் திறமையுடன் ஆட்சி புரிந்து வந்தனர். நாளடைவில் தம் ஆண்மையையும் ஆற்றலையும் படைகளையும் ஆயுதங்களையும் செல்வங்களையும் பெருக்கிக் கொண்டு மண்ணாசை கொண்ட ஆரியர்களை வடக்கில் வெகு தூரம்வரை விரட்டி அடிக்கத் தவறவில்லை. ஆனால் இந்தியாவினின்று விரட்டி அடிக்கவில்லை. பின்னர்த் தங்கள் நாட்டிற்கு அருகிலுள்ள ஈழம், அந்தமான் நிக்கோபார் முதலிய தீவுகளில் குடியேறியும் வணிகம் புரிந்தும் வந்தனர். ஆழ்கடல் கடந்து, பர்மா, கெடா மலைநாடு, சிங்கபுரம், தாய்லந்து, கம்போடியா, சாவகம், சுமத்திரா, சம்பா, போர்னியோ போன்ற இடங்களுக்கெல்லாம் போந்து வணிகம் புரிந்து வந்ததோடு அங்குக் குடியேறவும் முற்பட்டனர். அங்கு அவர்கள் தங்கள் நாட்டின் நாகரிகத்தையும் விளை பொருள்களையும், சமயத்தையும் கலைகளையும் பண்பாட்டையும் பரவச் செய்வதில் பெரிதும் அக்கறை கொண்டனர். அவர்கள் கடல் கடந்து ஆயிரக்கணக்கான கல்தொலைவு பயணஞ் செய்வதில் எண்ணற்ற துன்பங்களும் ஆளிழப்பும் பொருளிழப்பும் ஏற்பட்டாலும், மனந் துஞ்சாது பல நாடுகளுக்கும்

போய் அந்நாட்டு மக்களின் மொழிகளைப் பயின்று அவர்களோடு நல்லுறவு பூண்டு பண்டமாற்று வணிகம் நடத்தியதோடு அவர்களுள் ஒரு பகுதியினர் பிற நாடுகளில் நிலைத்த குடிகளாய் நிலைபெற்றனர். தாங்கள் சென்ற இடங்களிலெல்லாம் தங்கள் சமயத்தையும் கோயில்களையும் நிலைநாட்டினர். பிற நாட்டு மக்களைத் தாராளமாகத் தங்கள் சமயத்தைத் தழுவும்படி செய்தனர். சைவம் தமிழ்நாட்டு மதமன்று. அனைத்துலக மக்களின் மதம் என்ற உண்மையை நிலைநாட்டினர். தமிழர்களைப் போல் திராவிடப் பெருங்குடி மக்களாகிய ஆந்திரர்களும், கலிங்கர்களும், வங்கர்களும் கடல் கடந்து வெளிநாடுகளில் குடியேறி ஒருவருக்கொருவர் பூசலின்றி ஒற்றுமையோடு வாழ்ந்து வந்தனர். வட இந்தியாவில் ஆரிய மதத்திற்கு எதிராக எழுந்த பௌத்த மதமும் திராவிட மக்கள் வாழ்ந்த பகுதிகளில் பரவி அம் மக்களிடத்தில் பெரிதும் செல்வாக்குப் பெற்று வளர்ந்து வந்தது. பௌத்தம் சைவத்தோடு போரிட்டு அதை வீழ்த்த முனையவில்லை. திராவிடக் குடிமக்கள் எப்பொழுது கிழக்காசியாவிலுள்ள தீவுப் பிரதேசங்களில் குடியேறினர் என்று இன்று நம்மால் திட்டவட்டமாக வரையறுத்துக் கூறமுடியவில்லை. ஆனால் சில அறிஞர்கள் கிறிஸ்து பிறப்பதற்கு 600 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இந்தக் குடியேற்றம் நிகழ்ந்திருக்கலாம் என்று கருதுகின்றனர். கி. மு. 600 இலிருந்து கி. மு. 325 ஆம் ஆண்டுகளுக்கு இடையேயுள்ள காலத்தில்தான் கிழக்காசியாவில் திராவிடக் குடிமக்கள் மிகத் தீவிரமாகக் குடியேறி இருக்கலாம் என எண்ணுகின்றனர்.

இற்றைக்கு 1800 ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழர்கள் இலங்கையில் குடியேறத் தொடங்கி இருக்கலாம் என்று கூறுவதற்கேற்ற சான்றுகள் இன்று கிடைத்துள்ளன

இலங்கையில் சுமார் 1500 ஆண்டுகளுக்கு முன்னர் வெளியிடப்பட்ட பழம் பாண்டியர்களின் நீண்ட சதுரக் காசுகள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. கி. பி. முதலாம் நூற்றாண்டில் தென் அன்னம் என்னும் இடத்தில் ஓர் இந்து ஆட்சி ஆரம்பமாயிற்று. அந்தப் புதிய ஆட்சிக்குச் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ள காவிரிப்பூம்பட்டினத்தி லுள்ள சம்பா (Chamba) என்ற தெய்வத்தின் பெயர் இடப்பட்டுள்ளது. இஃதன்றி ஒருசிலர் கம்போசகத்தில் (Cambodia) புகுந்து அங்குத் தங்கள் நாகரிகத்தையும் சமயத்தையும் நிலை நாட்டினர். சாவகத்திலும் சுமத்திராவி லும் திராவிட நாகரிகத்தை அறிவுறுத்தும் வண்ணம் 600க்கு மேற்பட்ட கட்டிடங்கள் கட்டப்பெற்று இன்றும் அவைகள் இலங்குகின்றன. இஃதன்றிக் கடாரம், மலைநாடு, சிங்கபுரம், தாய்லந்து, போர்னியோ, பாலித்தீவு போன்ற எல்லா நாடுகளிலும் திராவிடர்கள் குடியேறித் தங்கள் சமயத்தையும் நாகரிகத்தையும் கலைகளையும் நன்கு நிலைநாட்டி யுள்ளனர். வின்செண்ட் ஸ்மித் என்னும் வரலாற்றாசிரியர் திராவிடர்கள் எப்பொழுது சாவகத்தில் குடியேறினர் என்பதை ஆராய்ந்து சீன நூல் ஒன்றிலிருந்து ஒரு சான்று காட்டியுள்ளார்; அஃதாவது, "சீன நாட்டில் குவாங் - வ - டி (Kwang - wa - Ti) என்னும் மன்னர் மன்னன் ஆட்சி செலுத்திய காலத்தில் சாவகத் தீவில் இந்துக்கள் குடி யேற ஆரம்பித்தார்கள் என்று அந்நூலில் கூறியிருப்பதை நாம் நம்பாமல் இருப்பதற்கு வழியில்லை" என்பதே அவரது கருத்து. (இக்காலம் கி. பி. 75ஆம் ஆண்டாக இருக்கலாம்.)

கிழக்காசியாவில் முதன்முதலாகக் குடியேறியவர்கள் தமிழர்களும் அவர்களின் உறவினரான ஆந்திரர், கலிங்கர், வங்கர்கள் போன்ற திராவிட மக்களுமேயாவார்கள். அதற்குப்

பின்பே சில குசராத்தியர்கள் குடியேறினர். அதன்பிறகு தான் பௌத்தமதம் சென்றது. கி. பி. 13, 14 ஆம் நூற்றுண்டில் கிழக்காசியாவில் இஸ்லாமிய சமயச் செல்வாக்கு எழுந்தது. அதுவரை கிழக்காசிய மக்களின் வாழ்க்கை முறையையும், இலட்சியங்களேயும், பண்பாட்டையும், ஒழுக்கத்தையும், ஆன்மநெறியையும் திராவிட நாகரிகமே உருவகப்படுத்தி வந்துள்ளது என்பதில் எவரும் எள்ளளவும் ஐயம் கொள்ள இடமில்லே. இந்நாடுகளின் கலேகளேயும், நாகரிகங்களேயும், சமயங்களேயும் பற்றி நீண்ட காலமாக ஒன்றும் தெரியாமல் இருந்து வந்தது. ஆனுல் உலாந்தா, பிரஞ்சுப் பேரறிஞர்கள் செய்துவந்த முயற்சிகளின் பலனுக ஓரளவு உண்மை புலனுகியுள்ளது. பேராசிரியர் பால்பெல்லியட், எச் - கெர்ன், பேராசிரியர் சில்வெயின் லெவி, சர் ஸ்டாம் பேஸ்ட் ராவ்லெஸ், டாக்டர் ஜே-பிஎய்ச்-வோகல், டாக்டர் எம். ஈ. லுலியஸ் வான்கூர் முதலியவர்களின் அரிய ஆராய்ச்சிகளே நாம் பெரிதும் பாராட்டிப் போற்ற வேண்டும்.

ஈழம், மலேநாடு, சிங்கப்பூர், கெடா, தாய்லந்து, கம்போடியா, சுமத்திரா, பாலி, சம்பா, போர்னியோ, லாவோஸ், பிஜி, நியுகெனியா போன்ற பல்வேறு நாடுகளில் தமிழர்கள் குடியேறியுள்ளார்கள். ஆனுல் அவர்கள் குடியேறிய எந்த நாட்டிலும் மண்ணுசை கொண்டு அந்நாட்டை ஆள எண்ணியதில்லே. அங்குத் தங்கள் எண்ணிக்கையைப் பெருக்கி ஆட்சியைக் கைப்பற்ற எண்ணியதும் இல்லே; கைப்பற்றியதும் இல்லே. ஆனுல் தமிழர்கள் குடியேறிய நாடுகளில் தங்கள் சமயம், கலே, நாகரிகம், பண்பாடுகளே வளர்த்தனர். அந்நாட்டு மக்களுடன் இரண்டறக் கலந்தனர். இதற்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டாகச் சாவகம் விளங்குகின்றது. ஆனுல் சீனர்களும்-ஏன்? வேறு சில இனத்தவர்களும் சில நாடுகளில் குடியேறித் தங்களின் எண்ணிக்கையைப்

பெருக்கி ஆட்சியைக் கைப்பற்றிப் பிற நாட்டினரையும் தங்களுக்கு முன் குடியேறிய இனத்தவர்களையும் அந் நாட்டின் பூர்வக்குடிகளையும் விரட்டி அடித்து வருகின்றனர்.

## இந்தோனேசியாவும் - சாவகமும்

தென்கிழக்கு ஆசியாவின் வளமிக்க நாடுகளில் இந்தோனேசியாவும் ஒன்று. இந்தோனேசியா எனப்படும் நாடு சுமத்திரா, சாவகம், மதுரை, போர்னியோ, டைமோர், பாப்புவா, செலிபிஸ், மோலக்கஸ், பாலி, பிளோரில் முதலிய 2000 தீவுக்கூட்டங்கள் சேர்ந்ததாகும். இஃது எரிமலைகள் மிகுந்த நாடாகும். இதன் பரப்பு டச்சு நியுகெனியா உள்பட 7,35,267 சதுரமைல்களாகும். இதனுடைய மக்களின் தொகை கிட்டத்தட்ட 10 கோடியாகும். இத்தீவுகள் பூமியின் நடுக் கோட்டுப்பகுதியில் வரிசையாக அமைந்து, மலேயாவி லிருந்து ஆஸ்திரேலியா வரை போகக்கூடிய ஓர் அகன்ற வழிபோல் நிலப்படத்தில் காணப்படுகின்றன. இதனுடைய இன்றைய தலைநகரம் ஜகார்த்தா என்பதாகும். இஃதன்றி ஜோக்கியோகார்ட்டா, சுரபாயா,பாண்டுங் போன்ற பெரிய நகரங்களும் இந்தோனேசியாவில்உண்டு.

### வரலாறு

சாவகநாடு பண்டைக்காலத்தில் இன்றைய இந்தியா விற்குத் தெற்கே இந்து மகாசமுத்திரத்தில் - பூமியின் நடுக் கோடு வரை பரவிக்கிடந்த ஒரு மாபெரும் நிலப்பரப்பாகிய தமிழகம் அல்லது லெமூரியாக் கண்டத்தின் ஒரு பகுதியாகும். கடல்கோளால் இந்நிலப்பரப்பின் பெரும்பகுதி அழிந்தும் சிறுசிறு தீவுகளாகச் சிதறுண்டும் போயிற்று. அவ்வாறு சிதறுண்ட தீவுகளில் சாவகமும் ஒன்று. இந்தச் சாவகத் தீவில் மனித இனத்தின் முன்னோர்களாகிய முதல்வர்கள்- அஃதாவது ஆதம் ஏவாள் ஆகியவர்கள் தோன்றின

என்று அறிஞர்கள் கூறுகின்றார்கள். சாவகத்தில் கிடைத்த பாறைகளின் நடுவே பாறையோடு பாறையாகக் காணப்படும் பாஸில் என்ற எலும்புக் கூடுகளின் படிமானங்களிலிருந்து இஃது உறுதிப்படுத்தப்படுகிறது. இப்பொழுது இந்தோனேசியாவில் வசிப்பவர்களின் முன்னோர்கள் மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர்கள் என்றும் கி. மு. 1000 ஆண்டுகளுக்கு முன்பு அங்குக் குடியேறியவர்கள் என்றும் கூறப்படுகிறது. கி. மு. 100ஆம் ஆண்டிற்கு முன்பே தமிழர்களும் இந்தியர்களும் இங்குக் குடியேறியுள்ளனர். தமிழ்நாட்டுக் கப்பல்கள் கெடா, மலையம், சிங்கபுரம், ஸ்ரீவிசயம், சாவகம், கம்போசகம் முதலிய நாடுகளுக்குப் பெருமளவில் சென்று வந்தனர். தமிழர்கள் ஜாவாவை, சாவகம், சாவகத்தீவகம், யவத்வீபம் என்றும் சுமத்திராவை சிரிவிசயம், சொர்ணத்வீபம் என்றும் அழைத்து வந்தனர். கி. மு. 3ஆம் நூற்றாண்டிலே சுமத்திராவில் தமிழர் நாகரிகம் தழைக்க ஆரம்பித்தது; அங்குப் பலர் குடியேறினர். வட இந்தியாவிலிருந்து இங்கு மக்கள் குடியேற ஆரம்பித்தனர். தமிழர்கள் விருப்பம்போல் இங்கு வணிகம் செய்யத் தடையேற்பட்டதனால் 11ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மகா இராசராச சோழன் காலத்தில் இளவரசன் இராசேந்திர சோழன் தலைமையில் மாபெரும் சோழர் கடற்படை தென்கிழக்காசியாவில் பல நாடுகளிலும் புகுந்து வெற்றிவீரர்களாக ஆங்காங்குள்ள மன்னர்களோடு நட்புறவுகொண்டு தமிழர்கள் தங்குதடையின்றி வணிகம் புரியவும் குடியேறி வாழவும் வழிவகைகள் செய்தனர். இங்குத் தமிழர்களின் நாகரிகமும் பண்பாடும் கி. பி. 1300ஆம் ஆண்டு வரை வளர்ந்து வந்தன. 14ஆம் நூற்றாண்டுவரை சைலேந்திரப்பேரரசு வளர்ந்து பக்கத்திலுள்ள பல நாடுகளையும் தன் ஆட்சிக்குள் வைத்திருந்தது. சோழர்களின் படை

யெடுப்பால் சைலேந்திரப்பேரரசு வீழத்தொடங்கியது. இவ்வாட்சி 14ஆம் நூற்றாண்டின் இறுதிவரை இருந்து மறைந்ததாகச் சீன வரலாறுகள் கூறுகின்றன. இங்கு 2ஆம் நூற்றாண்டில் தேவர்மன் என்னும் அரசன் ஆண்டு வந்தான். 5ஆம் நூற்றாண்டில் பூரவர்மன் ஒரு கால்வாயை வெட்டினான். 8ஆம் நூற்றாண்டில் சஞ்சயன் மரபினன் ஒருவன் ஆண்டனன். அவன், சிவன் பிரமன் திருமால் ஆகிய மும்மூர்த்திகளுக்கு ஆலயங்களையுங் கட்டினான் என்று கல்வெட்டுச் சான்றுகள் கிடைத்துள்ளன. இச் சஞ்சயன் மரபினர் கி. பி. 879 முதல் 927 வரை ஆண்டு பிரம்பானனில் சிவலாயத்தை எழுப்பினர். சிவன், நான்முகன் திருமால் கொற்றவை (துர்க்கை) குடமுனி (அகத்தியன்) போன்ற தெய்வங்களுக்குக் கோயில் கட்டினர். சிவதாண்டவத்தில் 32 முத்திரைகளும் இராமகதைச் சிற்பமும் உண்டாக்கினர். 12ஆம் நூற்றாண்டில் தமரும வமிசனின் ஆட்சி எழுந்தது. 13ஆம் நூற்றாண்டில் இராஜசன் மரபின் ஆட்சி ஆரம்பித்தது. 14ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பிரதராஜன் ஆட்சியில் பல பௌத்தக் கோயில்கள் தோன்றின. 15ஆம் நூற்றாண்டில் இஸ்லாமிய ஆட்சி தலை எடுத்தது.

16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் போர்ச்சுகேசியர் ஆட்சி துவங்கியது. அப்பால் 1619ஆம் ஆண்டில் உலாந்தா கிழக்கிந்தியக் கும்பினி ஆட்சி மலர்ந்தது. போர்த்துக்கேசியர் ஆட்சி புகைந்தது. 1950ஆம் ஆண்டில் இந்தோனேசியக் குடியரசு மலர்ந்தது. சுதந்திரமான மக்கள் ஆட்சியே இந்த மாநிலத்தில் இன்று நிலவிவருகின்றது.

1966ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் இந்தோனேசிய அரசாங்கத்தில் எழுந்த கம்யூனிசப் புரட்சி அடக்கப்பட்டது. அங்குள்ள தலைவர் சுகர்னோவின் ஆட்சிக்கு முடிவேற்பட்டு

அங்கு மக்கள் ஆட்சி மலருந் தருவாயிலிருக்கிறது. அங்கு நல்ல குடிமக்களின் சமதர்ம ஆட்சி நிலவ வேண்டுமென்று இந்தியாவும் அண்டை நாடுகளான கம்போசகம், மலேசியா, தாய்லாந்து, சிங்கப்பூர் முதலிய நாடுகள் விரும்புகின்றன. இன்று இஸ்லாமிய சமயப்பற்று மிக்கவர்களின் கையில் ஆட்சி சிக்கியுள்ளது.

தமிழர்கள் கி. பி. முதல் நூற்றுண்டிலிருந்தே இலங்கை, பர்மா, மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து, கம்போசகம், சம்பா (அன்னும்), இந்தோ சைன, இந்தோனேசியா முதலிய நாடுகளில் குடியேறத் தொடங்கினர்கள். அவர்கள் எங்குச் சென்றாலும் வணிகத்தில் கண்ணும் கருத்துமாயிருந்தார்களே யொழியச் சென்ற நாடுகளில் பெரும்பாலோரைக் குடியேற்றவோ அல்லது தமிழக மன்னர்களைக் கொண்டு படையெடுத்து வரச்செய்து அவர்கள் தயவில் தங்கள் கையில் ஆட்சியைக் கைப்பற்றிக் கொள்ளவோ வேண்டும் என்று என்றும் கனவுகூடக் கண்டதில்லை. தமிழர்களிற் சிலர் வணிகத்தின் பொருட்டுச் சென்ற நாடுகளில் நிலைத்த குடிகளாய் வாழ்ந்து வருவது உண்மை. அவர்களும் அந்நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றி அந்நாட்டை அடிமைப்படுத்தி ஆள எண்ணவில்லை. தமிழகத்திற்கருகிலுள்ள சிறு தீவாகிய இலங்கையைக்கூட அவர்கள் கைப்பற்றி ஆளவேண்டும் என்று எண்ணியதில்லை. ஆனால் கலிங்கத்தினின்று குடியேறியவர்களாகத் தங்களைக் கூறிக் கொள்ளும் சிங்களவர்கள், தமிழர்களோடும், வேறுபல இனத்தவர்களோடும் கலந்து தாங்கள் பெரும்பான்மையோர் என்று கூறிக் கொண்டு இலங்கையின் பழங்குடிகளையும் தமிழர்களையும் சிறுபான்மையினராகச் செய்து இலங்கையின் ஆட்சியைத் தம் ஆதிக்கத்தில் வைத்துக் கொண்டுள்ளார்கள்.

அதே போன்று சிங்கப்பூரிலும், மலேசியாவிலும் பிறவிடங்களிலும் சீனர்கள் பெரும்பாலோர் குடியேறி ஆட்சி பீடத்தில் அமர்ந்தும், ஆட்சியைக் கைப்பற்றிச் சூழ்ச்சிகள் செய்தும் வருகின்றார்கள். தமிழர்கள் எந்த நாட்டிலும் பெரும்பாலோர் குடியேறி அந்நாட்டாட்சியைக் கைப்பற்றிக் கொண்டார்கள் என்ற கெட்ட பெயரை இதுவரை பெற்றதில்லை. அவர்கள் அரசியலில் அக்கறை இன்றி இருந்ததனால் இலங்கையினின்றும் பர்மாவினின்றும் இலட்சக் கணக்காய் விரட்டப்படுகின்றனர். இன்னும் பல நாடுகளில் அவர்கள் அவல நிலையில் கவலையில் மூழ்கிக் கிடக்கின்றனர். கோடிக்கு மேற்பட்ட எண்ணிக்கையுள்ள தமிழர்கள் கிழக்காசியத் தீவுகளான மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து, கம்போசகம், சம்பா, லாவோஸ், இந்தோ - சைனா, இந்தோனேசியா, போர்னியோ, பிஜித்தீவு, தென்ஆப்பிரிக்கா, மோரேசியஸ் போன்ற நாடுகளில் கவலைக்குள்ளாகும் நிலையில் இருந்து வருகின்றனர். அங்குக் குடியேறிய பிற இனத்தவர்கள் எரிமலை வெடித்தாற் போன்று கிளம்பி ஆட்சியைக் கைப்பற்றித் தமிழர்களைத் தாய் நாட்டிற்கு விரட்டி விடுவார்களோ என்ற அச்சம் இருந்து வருகிறது. இந்திய அரசாங்கம் இதைத் தட்டிக் கேட்க முடியாவிட்டாலும் விரட்டப்பட்டு வருபவர்களை வரவேற்றுப்போற்றத் தயாராக இருக்கிறது என்பதில் ஐயமில்லை.

தமிழர்களுக்கு அல்லது இந்திய மக்களுக்கு எத்தனையோ இன்னல்கள் நேரலாம். அதைப்பற்றி நாம் அதிகம் கவலைப்படவில்லை. ஆனால் அவர்கள் எந்த நாட்டிலும் இழிவு தரும் முறையில் நடந்து கொள்ளவில்லை. இந்தியர்கள் சூழ்ச்சி முறையினாலோ ஆட்சி வலிமையாலோ பிற நாட்டை அடிமைப்படுத்தி அந்நாட்டைச் சுரண்டி-

வாழ்கின்றார்கள்; இந்தியர்கள் நாட்டாசை கொண்டவர்கள் என்ற பெயரை எடுக்கவில்லை. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்தே தமிழர்கள் பண்பாடு மிக்கவர்களாய் வாழ்ந்து வருகின்றார்கள். கிழக்காசியாவில் இலட்சக் கணக்கான மக்கள் குடியேறி அந்த நாட்டைத் தாய் நாடாகக் கொண்டார்கள். அந்த நாட்டில் தங்கள் சமயம் பண்பாடு, நாகரிகம், கலை முதலியவைகளைப் பரப்பினார்கள். தாங்களும் தங்களின் கலை, பண்பாடு, நாகரிகம், சமய முதலியவைகளும் அந்நாட்டு மக்களோடும் சமயத்தோடும் பண்பாட்டோடும் இரண்டறக் கலந்து இன்று இரண்டையும் தனித்தனியாகப் பிரிக்க முடியாத வண்ணம் கலந்து விட்டார்கள். இஃது இன்று சாவகத்தில் காணக்கிடக்கும் மறுக்க முடியாத உண்மை. தமிழர்களைச் சாவக மக்களினின்று இன்று பிரித்துக் காண எவராலும் முடியாது. ஆனால் வரலாற்றிலேதான் இந்த உண்மையைக் காணமுடியும். அதோடு சாவகத்தின் பல்வேறு மூலை முடுக்குகளிலும் தமிழர்கள் அல்லது பாரத நாட்டு மக்கள் பாலில் சீனி கரைதல் போல் அந்நாட்டு மக்களோடு கலந்துபோன தன் அடிச்சுவடுகளை இன்று காணமுடியும். எத்தனையோ மாறுதல்களுக்கும் அழிபாடுகளுக்கும் ஆட்பட்ட போதிலும், ஆயிரம் ஆண்டுகளைக் கடந்த போதிலும் நம் கலைகளும் தெய்வங்களின் உருவங்களும் பெயர்களும் இன்னும் தம்மைச் சுட்டிக் காட்டி நிற்கின்றன.

சாவக நாட்டில் இஸ்லாம் வளர்ந்து நிற்கிறது; பௌத்தமும், சைவமும் அழித்து விடப்படவில்லை என்றாலும் வீழ்ச்சியுறும் நிலையிலே யுள்ளன. என்றாலும் சாவக மக்கள் இஸ்லாமியர்களாக இருந்தாலும், பௌத்தர்களாக இருந்தாலும் சைவர்களாக இருந்தாலும் அவர்களிடம்

இன்னும் இந்தியக்கலையும் தமிழர் பண்பாடும் மறையவில்லை. எல்லாரிடமும் பரவலாகக் காணப்படுகின்றன. அவர்களிடம் சமயவெறியும் சாதிப் பூசலும் எழவில்லை. இந்தோனேசிய மக்கள் இன்னும் மதவெறிக்கு ஆட்படவில்லை. அவர்களிற் பலர் இன்னும் பாண்டியர் குடும்பம் பல்லவர் குடும்பம் சோழர் குடும்பம் என்றே சொல்லி வருகின்றனர். *அவர்களின் ஊர்ப் பெயராகிய மதுரையும் நாகபுரமும் பிறவும் இன்னும் மாற்றி யமைக்கப்படவில்லை. மேலும் சாவகத்தில் பரவிய சைவம் தமிழ் நாட்டுச் சைவம் இங்குப் பரவிய பௌத்தமும் கூடத் தமிழ் நாட்டிலிருந்து சென்ற பௌத்தமேயாகும். அதனல் அங்குள்ள மன்னர்கள் பாண்டியன் பெயரையும் பாண்டிய நாட்டுக் கொடிகளையும் ஏற்றுக்கொண்டிருந்தனர்.†

---

* In Sumatra are found certain names of tribal subdivisions which are unmistakably South Indian, and specially Tamilian names such as Cholia Pandia Maelayala and also Pallava as well as Tekan (or Tekkanam or Deccan)— —Early Tamil cultural influences in South East Asia S. J. Gunasegaran M. A. (Lond.)

† Java has had continuous contact with South India in later times. The Chola Empire in the 10th and the 11th centuries had close association with Java and Javenese culture was further influeneed by Tamil Culture after the Cholas defeated the Sailendras of Java. Bhikkhus from Kanchipuram praise the Javanese ruler Hayam Wuruk in the 14th century Jayanagara adopted the characteristic Pandyan title Sundarapandya at his coronation in the 14th century and adopted the Pandyan emblem of the two fishes for his seal. —Early Tamil Cultural influences in Suoth East Asia by S. J. Gunasegaran M. A. (Lond.) 1958—P. 14.

## 2. கடல்கடந்த இந்தியக் கலைகள்

கிழக்கிந்தியத் தீவுக் கூட்டங்களில் சாவகம் மிகத் தொன்மையும் திண்மையும் வாய்ந்த நாடாகும். மிகத் தொன்மைவாய்ந்த நாடான திராவிடம் ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பே சாவகத்தோடு அரசியல், சமூகக் கலைத் தொடர்புகளைப் பெற்று வளர்ந்து வந்துள்ளது. சாவகம் நிலவளமும் நீர்வளமும் இயற்கை வளமும் பெற்ற நாடாகும். மக்கள் அழகும் பண்பும் வாய்ந்தவர்கள். இந்நாடு பொதுவாகப் பாரத நாட்டோடும் சிறப்பாகத் தமிழ் நாட்டோடும் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக நெருங்கித் தொடர்பு கொண்டு தமிழர் வளர்த்த பௌத்த, சமார்த்த, சைவசமயக் கோட்பாடுகளை ஏற்றுக் கொண்டது. அதனால் இங்கு வட இந்தியக் கலையும் தமிழகக் கலையும் இணைந்து வளர்ந்தன. இன்றும் தமிழ்நாட்டுப் பாணியையொட்டிய எண்ணற்ற கட்டிடங்களும் சிற்ப வடிவங்களும் ஒளிவீசிக் கொண்டிருக்கின்றன.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே தமிழர்கள் இங்கு ஆழ்கடல்களைக் கடந்து கலம் ஏறிச் சென்றுள் ளார்கள். எண்ணற்ற தமிழர்களும் வட இந்தியத் திராவிட மக்களும் அங்குக் குடியேறிப் பாலில் சீனி கரைவது போல் இங்குள்ள மக்களோடு இரண்டறக் கலந்துள்ளார்கள். திராவிடக் கலைகளும் ஆங்குத் தனித் திராவிடக் கலையாய் மிளிராது சாவகக் கலைகளோடு கலந்து ஒருகலப்புக் கலையாகவே இலங்குகிறது. ஆனால் சாவகக் கலை பெரிதும் திராவிடக் கலை அம்சம் பொருந்தியதாக இருக்கிறது என்பது எவரும் மறுக்க முடியாத உண்மையாகும். பரத

நாட்டியமும் பாவைக் கூத்து என்று கூறும் பொம்மலாட்டமும் (நிழற்படக் காட்சியும்) கூட இங்குத் திரிபுற்று வளர்ந்துள்ளன.

பிரஞ்சு, உலாந்தா நாடுகளிலுள்ள தொல்பொருள் ஆராய்ச்சி நிபுணர்கள் மலேசியா, இந்தோசீனம், இந்தோனேசியா முதலிய நாடுகளில் பண்டைக்காலத் திராவிடக் குடிமக்கள் குடியேறிச் சமயப்பணி, கலைப்பணி, மொழிப்பணி ஆகியவைகளைத் திறம்படச் செய்த வரலாற்றைப் பூமியை அகழ்ந்து பார்த்தும் பழஞ்சாசனங்களைப் படித்துப் பார்த்தும் கலைகளையும் சிற்பங்களையும் மொழிகளையும் நுணுகி ஆராய்ந்துணர்ந்தும் பல நூல்களும் கட்டுரைகளும் எழுதியுள்ளார்கள். தொல் பொருட்காட்சிச் சாலையில் பல பழம் பொருள்களைச் சேகரித்துப் பாதுகாத்து வந்துள்ளார்கள்.

## தமிழர்களும் சாவகமும்

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் வணிகத்தின் பொருட்டுச் சாவகம் போந்துள்ளனர். அங்கு நிலைத்த குடிகளாய் வாழ்ந்து எண்ணற்ற மக்கள் சாவகத்தில் குடியேறி அந்நாட்டுமக்களோடு இரண்டறக் கலந்து உள்ளனர். சாவகத்தில் குடியேறிய தமிழ்மக்களுக்கும் வணிகம் நடத்தி வந்த தமிழ்மக்களுக்கும் அந்நாட்டுமன்னர்கள் இன்னல் விளைவித்ததனால் தமிழ்நாட்டு மன்னர்கள் பல் வேறு காலங்களில் தம் கடற்படையின் துணைகொண்டு அங்குப் போந்து போரிட்டு வெற்றிமாலை சூடி அம்மன்னர்களிடம் திறைபெற்று வந்தனர் என்று சில வரலாற்றாசிரியர்கள் கருதுகிறார்கள். சில ஆசிரியர்கள் தமிழரசர்கள் எந்த நாட்டின் மீதும் எக்காரணம் கொண்டு படையெடுத்துச் சென்று வெற்றிபெற்றாலும் அந்நாட்டைத் தம் ஆட்சியின்

கீழ்வைத்து அடிமைப்படுத்தி ஏகாதிபத்திய வெறிகொண்டு ஆளவில்லை என்றும், தோல்விபெற்ற நாட்டுமன்னனிடம் திறைபெற்று மீண்டதுண்டு என்றும், தோல்விபெற்ற மன்னன் மகளை மணந்து அவள் வயிற்றில் பிறந்த மகனுக்குப் பட்டஞ் சூட்டி அவனிடமிருந்து திறை பெற்று வந்தது உண்டு என்றும் கூறுகிறார்கள். தமிழரசர்கள் கிழக்கு இந்தியத் தீவுகளில் உள்ள கடாரம் (கெடா), காழகம் (பர்மா), கடாஹம் (சுமத்திரா), கற்பூரம், சாம்பவம், சாவகம் (ஜாவா), மலைநாடு (மலேயா), சிங்கபுரம் (சிங்கப்பூர்) போன்ற பல நாடுகளை வென்று திறைபெற்று வந்தனர்; ஆனால் எந்த நாட்டுமன்னன் புதல்வியையாவது மணந்து அவள் வயிற்றில் பிறந்த மகனுக்குப் பட்டமளித்துத் திறைபெற்று வந்தனர் என்று தெளிவாகக் கூறக் கூடிய சான்று ஒன்று கூடக் கிடைக்கவில்லை என்று கூறுகின்றனர்.

மலைநாட்டில் (மலேயாவில்) சோழர்களின் புலிக் கொடியை நேற்றுவரையிலும் பயன்படுத்திவந்துள்ளனர். சுமத்திராவிலும் கடாரத்தி(கெடாவி)லும் பாண்டியர்களின் இருமீன்கள் பொறித்த கொடி பயன்படுத்தப்பட்டு வந்ததும் நன்கு ஆராயத்தக்கது. மேலும் சில சாவகமக்கள் தங்களைப் பாண்டியர் குடும்பம், பல்லவர் குடும்பம், சோழர் குடும்பம், மலையாளி குடும்பம் என்றும் கூறிக் கொண்டுமிருக்கின்றனர். இதனை உறுதிப்படுத்தும் முறை அங்குப்போந்து வரலாறுகளையும், கலைகளையும் மக்களின் வாழ்க்கை முறைகளையும் மொழிகளையும் நன்கு ஆராய்ந்த அறிஞர்கள் தங்கள் நூல்களிலும் கட்டுரைகளிலும் சான்றுகள் காட்டியுள்ளனர். சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றுத் துறைப் பேராசிரியராய் இருந்த திரு. கே. ஏ. நீலகண்டசாஸ்திரி அவர்கள், இந்திய அரசாங்க வெளியீடொன்றில் இதனை ஆதரித்து

எழுதியுள்ளது நமக்கு நல்ல எடுத்துக்காட்டாக மிளிர்கிறது.*

அனைத்துலகப் புகழ் பெற்ற கலைமேதை ஆனந்தக் குமாரசுவாமி அவர்கள், "மத்திய சாவகத்தில் ஏழாம் நூற்றாண்டில் எழுந்துள்ள நாகரிகச் சிறப்பிற்குச் சான்று அங்குத் திகழ்ந்த இந்தியக் கலைகளே ஏற்ற எடுத்துக் காட்டுகளாக மிளிர்கின்றன; இந்த அபிவிருத்திகள் அனைத்தும் தென்னிந்தியாவிலிருந்து நீண்டகாலமாக நடைபெற்று வந்த குடியேற்றத்தின் நற்பலன்களே யாகும்" என்று முடிவு கட்டியுள்ளார்.† மேலும் சாவகத்தில் இன்று காணப்படும் தொழிற் கலைகள் எல்லாம் மூலவேரினின்று துளிர்த்த வகைகள் என்று கூறுவதில் எள்ளளவும் ஐயமில்லை. பொதுவாக இந்திய மக்களும் சிறப்பாகத் தமிழ் மக்களும் சாவகம், கம்போசகம், தாய்லாந்து, சுமத்ரா, மலேயா முதலிய கிழக்கு

---

*"Some tribes among the head - hunting Dyaks in the wilds of Sumatra still call themselves Pandya, Chola Pelavi and Maleyala. The great Sailendra rulers of Java and Sumatra who ruled a vast maritime empire from the seventh to the thirteenth Centuries with their Capitals at Srivijaya, modern Palembang in Sumatra and Kadaram (Kedeah) to the north of Penang had the double - fish for their emblem like Pandyas of the extreme South of India." Indian influence in the far east - by Prof K. A. Neelakanta Sastri M. A. Page - 22.

†" More extensive evidences of Indian culture are found in middle of Java in the seventh century. This development may have been the result of long continued or of renewal immigration from South India"—History of India and Indonesian Art - by Ananda Coomaraswamy.

ஆசிய நாடுகளின் கலைவளர்ச்சிக்கு ஒப்பற்ற பணியைச் செய்துள்ளனர்.

நுண்ணறிவும், திறனும், உறுதியான உள்ளமும் வாய்ந்த முற்காலத் தமிழர்கள் கலங்கள் கட்டி ஆயிரக் கணக்கான கல் தொலைவிற்கு அப்பாலுள்ள தீவுகளுக் கெல்லாம் போந்து தம் வணிகப்பண்டங்களை அங்கு விற்று - அஃதாவது பண்டமாற்றுச் செய்து வந்தனர். ஐம்பெருந் தமிழ்க் காப்பியங்களுள் ஒன்றாகப் புகழ்ந்து கூறப்பெறும் மணி மேகலையில் சாவக நாட்டிலுள்ள நாகபுரம் என்னும் பட்டினம் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் பூமிசந்திரன், புண்ணிய ராசன் போன்ற அந்நாட்டு அரசர்கள் பெயர்களும் குறிப்பிடப் பட்டுள்ளன. தமிழகத்திற்கும் சாவகத்திற்கும் நீர்வழிப் போக்குவரத்துக்கள் நிகழ்ந்து வந்துள்ளன.

மாநீர் வங்கம் வந்தோர் வணங்கிச்
சாவக நன்னாட்டுத் தண்பெயல் மறுத்தலின்
ஊனுயிர் மடிந்த துரவோ யென்றலும்
அமரர்கோ னாணையி னருந்துவோர்ப் பெறாது
குமரி மூத்தவென் பாத்திர மேந்தி
அந்தநல் நாட்டுப் புகுவதென் கருத்தென
வங்க மாக்களொடு மகிழ்வுட னேறிக்
கால்விசை கடுகக் கடல்கலக் குறுதலின்
மாலிதை மணிபல் லவத்திடை வீழ்த்துத்
தங்கிய தொருநாட் டானாங் கிழிந்தனன்
இழிந்தோ னேறின னென்றிதை யெடுத்து
வழங்குநீர் வங்கம் வல்லிருட் போதலும்''

(மணிமேகலை 14 : 73 - 85)

என்று மணிமேகலை கூறுகிறது.

இஃதன்றி, மணிமேகலை சாவகம் போந்து அங்கு ஆட்சி நடத்திய ஆபுத்திரனோடு மணிபல்லவம் வந்து அங்கே தீவதிலகையின்மூலம் காவிரிப்பூம்பட்டினம் கடல் கொள்ளப்பட்டதையும் மாதவியும் சுதமதியும் அறவண அடிகளோடு வஞ்சிநகர் சென்றதையும் அறிந்து அங்கிருந்து விண்வழியாக வஞ்சிநகர் போந்ததும் மணிமேகலையில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

இதனை ஆதரித்து அறிஞர், முதலியார் சி. இராச நாயகம் அவர்கள் பண்டைய யாழ்ப்பாணம் என்னும் நூலில், "கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் தென் இந்தியாவில் உள்ள பாண்டிய நாட்டினின்று கப்பல்கள் சாவகம் சுமத்திரா முதலிய நாடுகளுக்கு யாழ்ப்பாணத்திலுள்ள துறைமுகத் தின் வழியாகச் சென்றன. இதற்குச் சான்று மணிமேகலை போன்ற தமிழ் நூல்களிலும் காணக்கிடக்கின்றது." என்று குறிப்பிட்டுள்ளார்.*

திரிதிரதயா என்னும் பிராமணன் கம்போடியாவி லிருந்து 800 கிளிங் குடும்பங்களோடு சாவகம் போந்து பிரமாரி காளி என்ற சாவகப் பெண்ணை மணந்து அந் நாட்டிற்கு அரசனானான் என்று அந்நாட்டுப் பழங்கதைகள் கூறுகின்றன. சாவகத்தின் முதல் மன்னனுக்குச் சிர்மாறன் என்று பெயர். இந்தப் பெயர் சாவகத்தின் அரச பரம்பரை தமிழர்களோடு நெருங்கிய சம்பந்தம் உடைய தென்பதை நன்கு விளக்குவதாக இருக்கிறது. சாவகத்திலுள்ள பெரோக் என்னும் மக்களிடையே இன்றும் திராவிடக்

* Ancient Jaffna by Mudaliar C. Rasanayagam C. C. S. P.126 - 127.

குடும்பப் பெயர்கள் வழங்குகின்றன என்று அறிஞர் ஆர் பானர்ஜி கூறுகின்றார்.*

சாவகத் தீவில் காணப்படும் திருக்கோயில்களுள் பல சிவனுக்கு உரியன. சாவகமக்களின் அமரமாலை என்னும் நூல் மிகத் தொன்மை வாய்ந்தது. அது அந்நாட்டு மக்கள் வழிபட்ட தெய்வங்களைப் பற்றிக் கூறுகிறது.† அந்நூலின் மூலம் சாவகத் தீவினர் சிவபெருமானையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபட்டார்கள் என்று தெரிகிறது. சிவன், ஈஸ்வரன், குரு என்னும் பெயர்களால் அவர்கள் வழிபட்டு வந்திருக்கின்றனர். சுமத்திராவிலே லாரா பொங்ராங் என்னும் இடத்தில் பல ஆலயங்கள் அழிந்து கிடக்கின்றன. அதன்நடுவில் பெரிய சிவன் கோயிலும் திருமால், நான்முகன் கோயில்களும் எதிரே நந்தியின் ஆலயமும் காணப்படுகின்றன. இஃதன்றி மங்கைபங்கன் திருவடிவமும் தென்படுகின்றது. கணபதியின் வடிவங்கள் பல இங்குள்ளன. இவைகள் எல்லாம் தமிழகத்தில் உள்ள கோயில்களில் காணப்படும் படிமங்களை யொத்ததாகவே காணப்படுகின்றன.

---

* "Dravadian Tribal names are still to be found among the Bataks India and the Pacific world; Kern recognised long ago that the earliest Indian Colonists of Sumatra were of Dravidians origin. Before the spread of Malaya in different parts of the archopaelago, the Dravidian element was supreme. The Austric People of Cambodia mixed with the Dravidian and founded a powerful Kingdom long ago". ...Prehistoric Ancient and Hindu India-by R. D. Banerji P. 30.

† Ancient Indian Colonies in the Far east Dr. R. C. Mazumdar.

இங்குச் சைவர்கள் வணங்கும் சிவன், நான்முகன், திருமால், அகத்தியர் (சிவகுரு), கணபதி, முருகன் முதலிய சிலைகளோடு (இலட்சுமி) திருமகள் சிலையும் கிடைத்துள்ளன. திருமகள் சாவகமக்களால் நிலம் செழிப்புறச் செய்யும் தெய்வமாகவும் செல்வந்தரும் தெய்வமாகவும் எண்ணி வழிபடப்பட்டு வருபவளாகும். இங்குக் கிடைத்த திருமால் (விஷ்ணு) சிலை எழில் மிக வாய்ந்தது. கி. பி. ஏழாம் நூற்றாண்டில் செய்யப்பட்டது. இதில் தெளிவாகப் பல்லவர் பாணி தென்படுகிறது என்று அறிஞர்கள் மொழிகின்றார்கள். இங்குப் பல்வேறு காலங்களில் செதுக்கப்பட்ட பல வெண்கலப்படிமங்களும் பல்வேறு காலங்களில் செதுக்கப் பட்ட சிலைகளும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இங்குக் கண்டெடுக்கப்பட்ட சிறந்த சிலைகளில் சிவனுடைய கழுத்திற்கு மேற்பட்ட சிலை உருவம் மிகச் சிறப்பானது. அழகுமிக்கது. இது லோகாஸ்வரர் சிலை உருவம் என்று கூறப்படுகிறது. இது அழகு மிக்கது. தமிழர்களின் கைவண்ணத்தின் கவின் மிக்க சிறப்பிற்குச் சிறந்த எடுத்துக் காட்டாக மிளிர்கின்றது. இப்பொழுது ஜகர்ட்டா தொல் பொருள் காட்சிச்சாலையில் உள்ளது. இது, இளவரசர் தும்ராங் (Dumrong) என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது. இந்தச் சிலையின் அமைப்பைப்பற்றி அறிஞர் கோடெஸ் என்பவர் புகழ்ந்து பின்வருமாறு கூறியுள்ளார். "இது இந்தியச் சிற்பச் சிலை வடிவுகளில் கீர்த்திமிக்கது. இந்தச் சிலையுருவின் சித்தரிப்புத்தரம் அறியாதவாறு சிதைந் துள்ளது. இதன் ஆடைகள் அதிகச் சிறப்பானவை. உயர் குலத்துக்குரியவைகளைத் தாங்கிய நிலையிலுள்ள திரண்ட தோள்கள், அருளொழுகும் அமைதி நிலவும் அழகிய முகங்கள்" சாவகத்திலும் சுமத்திராவிலும் தமிழகக்கட்டிடக் கலையும், சிலை, படிமக் கலைகளும் புத்துருவில் மறுமலர்ச்சி

யுற்று விளங்கியதைப் போல் பாலித் தீவில் சைவமும் கலைகளும் சிறப்புற்றிருந்தாலும் தமிழரின் நாட்டியக்கலை மிகச் சிறப்புற்றுச் சாவகப் பண்பாட்டோடும், நாட்டியத் தோடும் கலந்து செழிப்புற்று வந்திருக்கிறது.

சோழ மன்னர்களின் கல்வெட்டுக்கள் சிலவற்றிலும் சாவகம் குறிப்பிடப்பட்டுள்ளது. லெய்டன் சாசனம் என்ற இராசராசசோழனின் சாசனத்தில், கடாரத்தரசன் (கெடா மன்னன்) சூளாமணிவர்மனாலும் அவன் மகன் மாறவிஜயோத்துங்கவர்மனாலும் நாகப்பட்டினத்தில் கட்டப் பெற்ற ஒரு பௌத்தவிகாரம் கி. பி. 1006-ஆம் ஆண்டில் கட்டுதற்குத் தொடங்கப்பட்டது. அதற்கு இராஜராஜப் பெரும் பள்ளி என்று பெயர் வைக்கப்பட்டது. இதற்கு இராஜராஜன் ஆனைமங்கலம் என்னும் ஊரை நிவந்தமாக அளித்தான் என்ற குறிப்புக்கள் காணப்படுகின்றன*

இராசராச சோழன் சங்கிராம விசயோத்துங்க வர்மனை வென்று ஸ்ரீவிசயம், பண்ணை, மலையூர், மாயிருடிங்கம், இலங்கா சோகம், பப்பாளம், இலிம்பங்கம், வளைப்பந்தூர், தக்கோலம், தமாலிங்கம் இலாமுரி தேசம், நக்கவாரம் கடாரம் முதலிய இடங்களைக் கைப்பற்றினன் என்று அவனுடைய மெய்க்கீர்த்தி கூறுகிறது. செப்பேடுகளில் வரையப்பெற்றுள்ள வடமொழிப் பகுதியில் கூறும் கடாரம் என்பது பத்துப்பாட்டுள் ஒன்றாகிய பட்டினப்பாலையில் குறிப்பிடும் காழகம் எனப்படும் இடமேயாகும். இது கடாரம் என்பது உரையாசிரியர் நச்சினார்க்கினியர் கருத்து என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள். இராசராச

* The Larger Leiden Plates of Rajaraja I; Ep. Ind. Vol XXII No. 34.

சோழன் மகன் இராசேந்திரன் தலைமையில் சோழக் கடற் படை கடாரத்தையும் மலைநாட்டையும் வென்றமையால் வெற்றியின் நினைவுக் குறியாக இராசேந்திர சோழன் கடாரம் வென்றான், மலைநாடு கொண்டான் என்ற பட்டங் களைச் சூட்டிக் கொண்டதோடு கடாரம் வென்றான், மலைநாடு கொண்டான் என்ற பெயர்கள், பொறித்த இரு பொற் காசுகளை வெளியிட்டுள்ளான். இப் பொற்காசுகள் கிண்ணம் போல் உட்குழிந்ததாக இருக்கின்றன. இந்தக் காசுகள் அவன் கிழக்கு ஆசியத் தீவுகளில் அவன் பெற்ற அரிய வெற்றிக்கு எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றன. கடார வெற்றி இராசேந்திர சோழனின் வரலாற்றில் குறிப்பிடத்தக்கதாக ஒளிர்கிறது.* இராசேந்திர சோழன் அடியில் வரும் நாடுகளை வென்று அங்குப் புலிக்கொடி உயர்த்தியுள்ளான். அவை வருமாறு :

## ஸ்ரீ விசயம்

ஸ்ரீவிசயம் என்பது சுமத்திரா என்று கூறப்படும் சொர்ணத் தீவத்திலுள்ள பாலம்பாங் என்னும் நாடாகும். இது கி. பி. எட்டாம் நூற்றாண்டு முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரையில் சிறந்து விளங்கியதோடு தமிழகத் தோடு வணிகத் தொடர்பும் கொண்டிருந்தது.

## பண்ணை

பண்ணை சுமத்திரா தீவின் கீழ்க் கரையில் உள்ள ஊராகும். இஃது இப்பொழுது பனி அல்லது பனை என்று அழைக்கப்படுகிறது.

---

* **பிற்காலச் சோழர் சரித்திரம்—டி. வி. சதாசிவ பண்டா ரத்தார் பக். 169.**

## மலையூர்

மலையூர் சுமத்திராவின் கீழ்க்கரையில் இருந்த ஊர் என்று சிலரும் மேல் கரையில் இருந்த ஊர் என்று சிலரும் கூறி வருகின்றனர்.

## இலாமுரி

இலாமுரி சுமத்திராவின் வடபகுதியில் உள்ள நாடாகும். இதை மார்க்கபோலோ லம்பிரி எனவும் அராபியர்கள் லாமுரி எனவும் கூறி வந்தனர்.

## மாயிருடிங்கம்

மாயிருடிங்கம் மலேயாவின் நடுவிலிருந்த ஊர். இதைச் சீனர் ஜிலோடிங் என்று கூறினர்.

## இலங்கா சோகம்

இலங்கா சோகம் மலேயாவிலுள்ள கெடாவிற்குத் தெற்கேயுள்ள பகுதி.

## பப்பாளம்

பப்பாளம் என்னும் நாடு கிராபூசந்திக்கு அடுத்துள்ளது. இலிம்பங்கம், வளைப்பந்தூர் என்னும் இரண்டும் எவ்விடங்களில் இருந்தன என்று தெரியவில்லை.

## தக்கோலம்

தக்கோலம் கிராபூசந்திக்குத் தெற்கே மலேயாவின் மேற்குக் கரையில் உள்ள தகோபா மாவட்டத்தின் தலைநகராகிய தகோபா நகர் என்று கருதப்படுகிறது.

### தமாலிங்கம்

மலேயாவின் கீழ்க்கரையிலுள்ள குவாந்தங் என்னும் ஆறு கடலோடு கலக்கும் இடத்திலுள்ள தெமிலிங் நகரமாகும்.

### நக்கவாரம்

நக்கவாரம் என்பது நிக்கோபார் தீவு என்று இக்காலத்தில் வழங்கும் தீவேயாகும்.

இராசராசன் காலத்தில் சோழநாட்டைச் சேர்ந்த நாகபட்டினத்தில் ஒரு பௌத்த விகாரம் இருந்தது. அஃது இராசேந்திரன் காலத்தில் சிறப்புற்றிருந்தது. இந்தக் கோயில் இந்தோனேசியாவிலுள்ள சுமத்திரா நாட்டைச் சேர்ந்த ஸ்ரீவிசயம் (பாலம்பாங்) என்னும் பகுதியில் ஆட்சி புரிந்த சைலேந்திர மரபைச் சேர்ந்த மாரவிசயோத்துங்கவர்மன் வேண்டுகோளுக்கு இணங்க இராசராசன் அனுமதி கொடுத்தபின் மாரவிசயோத்துங்கவர்மன் கட்டிய விகாரை ஆகும். இவன் சாவக நாட்டினின்று வரும் பௌத்தர்களின் வணக்கத்திற்கென்று இந்தக் கோயிலைக் கட்டினான். இஃது அவன் தந்தையின் பெயரால் சூடாமணி விகாரம் என்று அழைக்கப்பட்டது. ஸ்ரீ விசயநாட்டுடன் கி. பி. எட்டாம் நூற்றாண்டு முதல் பதின்மூன்றாம் நூற்றாண்டுவரை சோழர்கள் நல்ல நட்புடன் வணிகம் வளர்த்து வந்தனர். (ஸ்ரீ விசயம் என்றால் திருநாடு என்று பொருள்) இதற்கு ஆனை மங்கலம் என்னும் கிராமம் பள்ளிச் சந்தமாக (தானமாக) விடப்பட்டது. அப்பட்டயம் இப்பொழுது உலாந்த நாட்டிலுள்ள லெய்டன் என்னும் தொல்பொருள் காட்சிச்சாலையில் உள்ளது. இதனால் இதற்கு லெய்டன் பட்டயம் என்று கூறப்படுகிறது.*

* The Larger Leiden States of Rajaraja I Ep. Ind. Vol. XXII No. 34.

சங்கிராம விசயோத்துங்கவர்மன்தான் கடைசியாகக் கடாரத்தை (கெடாவை) ஆண்டு வந்த இந்து அரசன் என்றும், அவனுக்குப்பின் அவன் வழியினர் இஸ்லாமிய சமயத்தைச் சேர்ந்து இன்றுவரை துங்கு என்பதைத் தம் பெயரின் இறுதியிலோ அல்லது முதலிலோ இணைத்துக்கொண்டு வருவதாகவும் கூறப்படுகிறது. துங்க வர்மன் என்ற பெயரைக் கொண்டு இவனை இராசராச சோழன் மகனாக இருக்கலாமோ என்று சிலர் ஐயப்பட்டு வருகின்றனர். ஏனெனில் இராசேந்திரன் மகள் வழிவந்த மன்னனுக்கு குலோத்துங்கன் என்ற பெயர் சூட்டப்பட்டிருப்பதை ஆதாரமாக எடுத்துக் காட்டுகின்றனர்.

ஆனால் கெடாவை ஆண்ட சங்கிராம விசயோத்துங்க வர்மன் இரட்டை மீன்கள் பொறித்த பாண்டிய நாட்டுக் கொடியைப் பெற்றிருந்ததாலும் கி. பி. 620 முதல் 645 வரை பாண்டிய நாட்டை ஆண்ட மாறவர்மன் அவனி சூளாமணியின் பெயரைப் பெற்றிருந்ததாலும் கெடா மன்னர்கள் பாண்டிய மன்னர்களின் வழிவந்தவர்களாக இருக்கலாம் என்று எண்ணலாம். அதோடு சூளாமணிவர்மன் மகன் மாறவிசயோத்துங்கவர்மன் என்ற பெயரை வைத்திருப்பதைப் பார்த்தால் இவர்கள் பாண்டிய மன்னர்களின் வழிவந்தவர்கள் என்று எண்ணுவதற்குப் பல சான்றுகள் உள்ளன. பாண்டிய மன்னர்கள் மாற என்னும் பட்டத்தைப் புனைந்து வந்துள்ளனர். எடுத்துக்காட்டாக, அரிகேசரி மாறவர்மன், மாறவர்மன் இராசசிம்மன், மாறவர்மன் விக்கிரம பாண்டியன்; மாறவர்மன் வீரபாண்டியன் வரகுணவர்மன் முதலிய பெயர்களைக் குறிப்பிடலாம். மகேந்திரவர்மன், சிம்மவர்மன், ஸ்கந்தவர்மன், வீரவர்மன், நந்திவர்மன், பரமேஸ்வர வர்மன் முதலிய பெயர்கள் பல்லவ மன்னர்களின் பெயர்களாக இருந்தன. சேரர்களும் இரவிவர்மன், மார்த்தாண்டவர்மன், இராமவர்மன்

கேரளவர்மன் போன்ற பெயர்களைத் தாங்கி இருக்கின்றனர் இதனால் பொதுவாக மாறவிசயோத்துங்கவர்மனும் அவன் தந்தை சூளாமணி வர்மனும் தமிழர் வழிவந்தவர்கள் என்று கூறுவதோடு குறிப்பாக—ஏன்? சிறப்பாகப் பாண்டிய மரபில் வந்திருக்கலாம் என்று யூகிக்க முடியும். என்றாலும் இதற்கு இன்னும் சிறந்த சான்றுகள் தேவை.

சாவகத்தில் சைவமும், பௌத்தமும் தழைத்திருந்தன. இவ் விரு பெரும் சமயமும் தமிழகத்தினின்று தமிழகக் குருமார்களால் சாவகத்தில் நிலைநாட்டப்பட்டன. தமிழகத்தினின்று சென்ற மதகுருக்கள் பாண்டியர்கள் ஆட்சியையும் அவர்கள் மொழிவளர்க்கும் முறையையும் ஆட்சி நடத்தும் பண்பையும், கொடியின் சிறப்பையும் சாவக நாட்டிலும் அந் நாட்டு அரசர்களிடமும் புகழ்ந்து போற்றி வந்தனர். அதனால் சாவக நாட்டில் செங்கோலோச்சி வந்த அரசன் ஹாயம் உருக் 14ஆம் நூற்றாண்டில் செயநகரா என்ற தன் இயற்கைப் பெயருடன் பாண்டிய அரசர்களின் பட்டமாகிய சுந்தரபாண்டியன் என்னும் பட்டத்தைத் தனது முடிசூட்டும் விழாவில் புனைந்து கொண்டதோடு பாண்டியர்களின் அரசசின்னமான இணைக்கயல் சின்னத்தைத் தனது முத்திரையாக ஏற்றுக்கொண்டான் என்று தெரிகிறது.* இவற்றின் மூலம் திராவிட சாவகக் கலைகளின் ஒன்றிப்பும் மக்களின் தொடர்பும் நன்கு தெரிகின்றன.

---

* Early Tamil Cultural Influences in South East Asia—by Gunasegam M. A. (Lond) 1958. P. 14.

# 3. சாவகத்தில் கலை வளர்ச்சி

சாவகத்தின் பழங்குடிமக்கள் நாகரிகமற்ற காட்டு மிராண்டிமக்கள் அல்லர். அவர்கள் மிகத் தொன்மையான காலத்திலேயே கட்டிடங்களைக் கட்டியிருந்ததோடு சிலை களையும் உருவாக்கியுள்ளார்கள். ஆனால் அவை கரடு முரடாயும் ஒழுங்கற்றனவாயும் இருந்தன. கிறிஸ்தவ சகாப்தம் அரும்பிய ஆரம்பகாலத்தில் தமிழர்கள் வணிகத்தின் பொருட்டு அங்குச் சென்றனர். அவர்கள் அங்குத் தங்களோடு தங்கள் சமயத்தையும் நாகரிகத்தையும் கலையையும் பண்பாட்டையும் கொண்டு சென்றனர். அங்கு அவை வேரூன்றத் தலைப்பட்டன. அதனோடு பௌத்த மதமும் அங்குச் சென்று மேலும் சாவகத்தைச் சிறப் படையச் செய்தது.

சாவகத்தில் காணப்படும் கலை, தமிழ் நாட்டுக் கலைஎன்ப தற்குப் பலசான்றுகள் உண்டு. பல்லவர் காலத்துத் தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்களில் காணப்படும் கிரந்த எழுத்து சாவகத்திலும் ஏன்? இந்தோனேசியா முழுவதிலும் பலப்பல காணப்படுகின்றன. பல்லவர்கள், சேரர்கள், பாண்டியர்கள், பெயர்களின் இறுதியில் காணப்படும் வர்மன் என்னும் பட்டம் சாவகமன்னர் பெயர்களின் இறுதியிலும் காணப் படுகின்றன. தென் இந்தியாவில் வழங்கப்படும் சகம் என்னும் சாலிவாகன சகாப்தமே இந்தோனேசியக் கல் வெட்டுக்களிலும் காணப்படுகின்றன. ஒரு கல் வெட்டு குஞ்சரகுஞ்சம் என்னும் ஊரைச் சேர்ந்த அரச வமிசத்தா னை சஞ்சயன் இலிங்கப் பிரதிஷ்டை செய்ததாகக் கூறு கிறது. இந்தக் குஞ்சர என்ற ஊர் தென் இந்தியாவில் உள்ள ஊர். இது வராக மிகிரரின் பிருகத்சங்கிதையில் கூட

உள்ளது என்று குறிப்பிடப்படுகிறது. இன்னும் ஒரு கல்வெட்டில் குடமுனிவனுன அகஸ்தியரின் சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டதாகக் குறிப்பிட்டிருக்கிறது. அகத்தியர் வழிபாடு தமிழர்களுக்கு உரியது. அதனுல் சாவகத்திலுள்ள சைவமும், பௌத்தமும் தமிழகத்திலிருந்து சென்றன எனவே எண்ணப்படுகின்றன.

## இஸ்லாமும் சாவகமும்

இந்தியாவில் இஸ்லாம் பரவிய முறை வேறு; சாவகத்தில் இஸ்லாம் பரவிய முறை வேறு. இந்தியாவில் இஸ்லாம் இந்துக்களை மதம் மாறச் செய்தது. அஃது அத்துடன் நில்லாது அவர்களை ஒரு தனி இனமாகவும் பிரித்தது. மக்களைப் பிளவு படுத்தியது. பள்ளிவாயில்கள் இந்தியக் கட்டிடக் கலையைப் பின்பற்ருது அராபியக் கட்டிடக் கலையை இந்திய நாட்டில் தோன்றச் செய்தது. அராபிய மொழியையும் அராபிய நாகரிகத்தையும் அராபிய உணவையும் அராபிய உடையையும் புகுத்தியது. இந்தியாவில் இஸ்லாமியர்களைப் பார்த்த மாத்திரத்திலே இவர்கள் இந்திய மக்களினின்று வேறுபட்டவர்கள் என்று எண்ணும்படி செய்தது. இஸ்லாமிய சமயத்தின் பேரால் ஒரே இனத்தில் பிறந்த இந்தியர்களை இந்து என்றும் முஸ்லிம் என்றும் பிரித்து முஸ்லிம்களின் அகத்தையும் முகத்தையும் மாறச் செய்தது. இந்தியாவைப் பிரிக்க வேண்டும் என்று ஜனப் ஜின்ன கூறியபொழுது முஸ்லிம்களாகிய நாங்கள் இந்தியர்களினின்று மாறுபட்ட இனம்; மொழி, சமயம் உடை, நடை, உணவு பழக்கவழக்கங்களில் முற்றிலும் வேறுபட்ட தனி இனம் என்று வீரமுழக்கஞ் செய்தார். தனிநாடும் ஆங்கிலேயர் தயவால் பெற்ருர். இந்தியா பிரிவுற்றது. இந்திய சகோதரர்கள் பிரிந்தனர்.

ஒருநாட்டில் பிறந்து வளர்ந்த சகோதரர்கள் படத்தில் வரையப்பட்ட சிலகோடுகளால் வெவ்வேறு இனமாக வெவ்வேறு நாட்டினராகத் தேசவெறிக்கு ஆளாகி நிற்கும் நிலை எழுந்தது. இலட்சக்கணக்கான இந்தியமக்கள் இந்தியா - பாகிஸ்தான் என்னும் ஒரு மாயக் கோட்டினுல் ஒருவரை யொருவர் வெட்டியும் சுட்டுச் சாம்பலாக்கியும், பிற்கால வரலாற்று ஆசிரியர்கள் இழித்துரைக்கும் நிலைக்கும் வருங்கால உலக மக்கள் நமது அறியாமைக் கிரங்கி நிந்தையோடு நம்முடைய வாழ்க்கையை நோக்கும் நிலைக்கும் செய்து கொண்டோம். ஆனுல் பௌத்த மதமோ, சமணமதமோ, கிறிஸ்துவ மதமோ இத்தகைய பிரிவினையை இந்தியாவில் செய்ய எண்ணியதில்லை.

ஆனுல், இஸ்லாம் சீனுவில் உள்ள முஸ்லிம்களைத் தாங்கள் ஒரு தனி இனம் என்று பிரிக்கவில்லை; சப்பானில் கூட இந்தப் பிரிவினையைச் செய்யவில்லை; சாவகத்தில் கூட இந்தப் பிரிவினையாகிய நஞ்சினைச் சிறிதும் புகுத்த வில்லை. இந்தோனேசியாவைக் கைப்பற்றிய இஸ்லாமிய அரசர்கள் அங்குத் தங்கள் சமயத்தைப் பரப்பித் தங்கள் ஆட்சியை வலுப்படுத்திக்கொண்டாலும் அங்குள்ள மதங் களையும், கோயில்களையும்' மொழிகளையும், நாகரிகத்தையும் நாசஞ் செய்யவோ மாற்றஞ் செய்யவோ எண்ணியதே இல்லை. அவர்கள் இந்தியாவில் ஒரு புதிய இனத்தை உரு வாக்கியதுபோல் மலேசியாவிலோ, இந்தோனேசியாவிலோ செய்யவில்லை. அங்குள்ள பள்ளி வாயில்கள் உருவங்கள் (விக்கிரங்கள்) இல்லாத இந்துக் கோயில்கள் போல் திகழ் கின்றன. இஸ்லாம் சாவகக் கலையைப் பயன்படுத்திக் கொண்டது. உடையில் உணவில் பண்பாட்டில் புதிய தொன்றையும் புகுத்தவில்லை. இதனை நமது "தமிழ் கலைக் களஞ்சியம்" கூட நன்கெடுத்துக் காட்டுகிறது.

இந்தியாவில் முஸ்லிம் மன்னர்கள் இந்துக் கோயில்களை இடித்துவிட்டு அவை இருந்த இடங்களில் தங்கள் மசூதிகளையும் மாளிகைகளையும் எழுப்பினார்கள். ஆனால் இந்தோனேசியாவைக் கைப்பற்றிய முஸ்லிம் மன்னர்கள் அங்கே தங்கள் மதத்தை நிலைநிறுத்திய போதிலும் அங்குள்ள மதங்களையும் கோயில்களையும் அழிக்காதிருந்தார்கள். அவர்கள் இந்தியாவில் ஒரு பெரிய தலைமுறையை நிறுவியது போல் இந்தோனேசியாவில் நிறுவவில்லை. அதனால் இப்போது அங்குள்ள தொழிலாளர்கள் தங்கள் கலைத் திறனைச் சிறு கலைகளிலேயே காட்டக் கூடியவர்களாய் இருக்கிறார்கள்.

"முஸ்லிம்கள் கட்டிய பழைய மசூதி ஒன்று கடுவா என்னும் இடத்தில் இருக்கிறது. அது சிலைகள் இல்லாத இந்துக் கோயில் போலவே காணப்படுகிறது. ஆகவே ஜாவாக் கலையைப் பயன்படுத்திக் கொண்டதேயன்றித் தானாக வேறு கலையை உண்டாக்கவில்லை"*

இன்று அறிவுலகம் உலக மக்களை ஒன்றுபடுத்த விரும்புகிறது. நாடு, சமயம், சாதி, நிறம், பண்பாடு முதலியவைகளின் பெயரால் எழும் பிரிவினைகளை வெறுக்கிறது.

சாவகம், சுமத்திரா, பாலி போன்ற நாடுகளில் நிலவும் பண்டைப் பண்பாடு வயாங் (Wayang) என்னும் நாடகக் கலையிலும் அழகிய பூ வேலைப்பாடுகள் நிறைந்த பல்வேறு வண்ணங்களில் ஒளிரும் கெயின் (Kain) துணிகளிலுமேயாம். இந்நாடுகளில் இசையும் நடனமும், பாவைக் கூத்தும் எங்கும் பரவிக் கிடக்கின்றன. மக்கள் அவைகளை நன்கு சுவைத்து வருகின்றனர். (Wayang Golek) என்ற பாவைக் கூத்து—அஃதாவது பொம்மலாட்டம் எங்கும் சிறப்பாகக் காணப்படு

* **கலைக் களஞ்சியம் - தொகுதி ஒன்று. சென்னை. 1954. பக் 742**

கிறது. முகமூடி அணிந்த நாடகத்தை அந்நாட்டினர் விரும்பிப் பார்க்கின்றனர். அதனை வயாங் டோப்பெங் (Wayang Topeng) என்று கூறுகின்றனர். சாதாரணக் கூத்தை (நாடகத்தை) வயாங்வோங் (Wayang Wong) என்று அழைப்பர். இகாத் என்னும் துணி எழில் மிக உடையது. கண்கவர் வனப்பும் வண்ணமும் வாய்ந்தது; கலைப் பண்பு மிக்கது. தமிழர்களின் நாகரிகப் பண்பு இத் துணியில் நன்கு ஒளிர்கிறது. இன்று சில சாவக மகளிர் தமிழகப் பெண்கள் பாணியில் சேலைகளும் இரவிக்கைகளும் அணிகிறார்கள். அஃது அவர்கள் வனப்பை இயற்கையினும் எண்மடங்கு உயர்த்திக் காட்டுகிறது. மண்ணகம் போந்த விண்ணக மகளிர்போல் திகழ்கின்றனர். அவர்கள் அழகிய பொற்பாவைகள்போல் விளங்குகின்றனர். அவர்களின் இன்றைய நாகரிக உடையால் அவர்கள் அகமும் முகமும் தமிழகக் கலைத்தொடர்புடையவர்கள் என்பதை வெளிப்படையாகக் காட்டுகின்றன.

சாவக மக்களின் ஏட்டுச் சுவடிகள் பல இலங்கையில் நடைபெற்ற கொழும்பு பொருட் காட்சியில் வைக்கப் பெற்றிருந்தன. அவை கூந்தற் பனையோலையில் எழுதப்பட்ட சுவடிகள் ஆகும். அவைகளுள் பல அழகிய வண்ண ஓவியங்களும் எழுத்துக்களும் உள்ளனவாகக் காணப்பட்டன. நம்முடைய பனையோலைச் சுவடிகளைவிட அகலமாயும் அழகாயும் எழுதுவதற்கேற்ற மென்மை வாய்ந்தனவாயும் திகழ்ந்தன. பாலி நாட்டியமும் சாவக நாட்டியமும் பரத நாட்டியத்தோடு நெருங்கிய தொடர்புடையன.

சாவகத்திலுள்ள சிவன் கோயில்கள் பெரும்பாலும் 6,500 அடி உயரமுள்ள டியெங் பீடபூமியிலேயே உள்ளன. இங்கு மாமல்லபுரத்திலுள்ள கோயில்களைப் போல் ஐந்து கோயில்கள் உள்ளன. மாமல்லபுரத்தில் உள்ள ஒற்றைக்

கோயில்களை அறியாமக்கள் பஞ்ச பாண்டவர் இரதங்கள் என்று ஆதியில் கூறி வந்தனர். அதுவே இன்றும் நிலைத்துள்ளன. அதே போன்று டியெங் பீடபூமியிலுள்ள ஐந்து கோயில்களும் பஞ்ச பாண்டவர்கள் பெயரில் உள்ளன. என்றாலும் எல்லாம் தென்னாட்டுத் - தமிழகவழியில் வந்த சிவ வழிபாடுடைய திருக்கோயில்களேயாகும். இங்குச் சிவனுடைய உருவம் சிறிது வேற்றுமையுடையதாய் விளங்குகிறது. சிவன் தாடியுடையவனாகவும் தொப்பி அணிந்தவனாகவும் காணப்படுகிறான். ஆனால் கையில் அக்கமாலையும் கமண்டலமும் உடையவனாகிக் காட்சி அளிக்கிறான்.

இங்கு ஒன்பதாம் நூற்றாண்டிலே சிவவழிபாடு சிறப்புற்று எழுந்தது என்று அறிஞர்களால் எண்ணப் படுகிறது. ஆனால் அதே நூற்றாண்டில் பௌத்தமதமும் அங்குப் புகுந்துள்ளது. இங்குச் சிவன் வழிபாடு புரியும் சைவர்களும் புத்தபகவானைப் பூசிக்கும் பௌத்தர்களும் முரண்பட்டுப் போரிட்டதில்லை. இரு சமயக் கோயில்களும் அடுத்தடுத்து இருந்தன. புத்தரின் கோயில்கள் பலவற்றில் சைவர்களின் திருஉருவங்கள் இடம் பெற்று வழிபட்டு வரப்பட்டன. இங்கு எழுந்த திருக்கோயில்கள் திராவிட சிற்ப முறையைத் தழுவிக் கட்டப்பட்டவைகளாகும். தமிழகத்திலிருந்து சாவகம் போந்த சிற்பிகளிற் சிலர் மனைவிமக்களோடு அங்குச் சென்று குடியேறினர். அங்குச் சென்றவர் தம் சகோதரர்களுக்கும், மக்களுக்கும் சாவகப் பெண்களையே மணம் செய்து வைத்துச் சாவகத்தைத் தாயகமாகவே கொண்டு வாழ்ந்தனர். மேலும் சிற்பத் தொழிலை அங்குள்ள மக்களுக்கும் கற்றுக் கொடுத்தனர். இந்தியச் சிற்பிகளிடம் சிற்பத்தைக் கற்ற சாவகச் சிற்பிகள் ஆசிரியர்களைவிடச் சிறந்தவர்களாக இந்தியச்

சாயலையுடைய ஒரு சிற்ப முறையைச் சாவகத்தில் வளர்த்துள்ளனர்.

இந்தோனேசியாவிலுள்ள வழிபாடுகளை யெல்லாம் பார்த்து ஆராய்ந்த கலைஞர்கள் இந்தியச் சிற்பங்களை விடச் சாவகச்சிற்பம் சாலச்சிறப்புடைய திராவிடச்சிற்பம் என்று புகழ்மாலை சூட்டியுள்ளனர். மேலும் சாவகச்சிற்பம் ஏழாம் நூற்றாண்டிலே எழுந்து போரோபுதூரை அணிபெறச் செய்தது. போரோபுதூரில் பௌத்தக் கோயில்களில் மலர்ந்த மாபெரும் சிற்பம், உலகில் உள்ள பௌத்தக் கோயிற் சிற்பங்கள் அனைத்திலும் சிறப்புடையது. அதன் அற்புதமான அழகிய சிற்பங்கள் ஒப்பும் உயர்வும் அற்ற ஒல்காப் புகழ் வாய்ந்தன; அதன் கலையழகு விவரிக்க முடியாத மேன்மை வாய்ந்தது என்றெல்லாம் போற்றப் படுகின்றன.

இங்கு அரும்பிய கலை இந்தியக்கலை என்று கூறுவதைவிட இந்தோ - சாவகக் கலை என்று இயம்புவது சாலப் பொருத்தமுடையதாகும். இங்குக் காட்டிலும், நாட்டிலும், மேட்டிலும் ஏழாம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டுவரை புற்றீசல் போல் சைவக் கோயில்களும் பௌத்தக் கோயில்களும் துளிர்த்தன. சாவக நாட்டின் நடுப்பகுதியிலேதான் அதிகமான சைவக் கோயில்களும் பௌத்தக் கோயில்களும் இடம் பெற்றுள்ளன. இங்குச் சமணர்களோ சமணக் கோயில்களோ அதிகமாக இடம் பெற்றதாகத் தெரியவில்லை.

10 ஆம் நூற்றாண்டிற்குப் பின் சாவகக் கலை சிறிது சிறிதாக இந்தியக் கலையின் தொடர்பைத் துண்டித்துக் கொண்டது. 10ஆம் நூற்றாண்டில் கிழக்குச் சாவகத்தில் அரும்பிய சாண்டி சாகோ (Chandi Djago), சாண்டி பனதரன் (Chandi Panataran) கோயில்கள் முற்றிலும்

சாவகத்தில் புதிய பாணியில் எழுந்த கோயில்களாகும். இந்தக் கோயிலின் வெளித் தோற்றத்தில் சாவகக் கலை அம்சம் அதிகமாக இருப்பதுபோல் காணப்படினும் உள்ளே இருக்கும் சிலைகள் நடுச் சாவக முறையைத் தழுவியதாக இருக்கின்றன. இரண்டு கலைமுறைகளும் இணைந்து விளங்குகின்றன என்பதைப் பாரா என்ற இடத்தில் கண்டு பிடிக்கப்பட்ட கணபதிச் சிலையினின்று நன்கு அறிய முடியும். அதன் முன்புறத் தோற்றம் தமிழகக் கலை அம்சம் நிறைந்ததாய்க் காணப்படுகிறது. பின்புறத் தோற்றம் இந்தோனேசிய முறை பொருந்தியதாய்க் காணப்படுகிறது. இந்தோனேசிய மக்கள் அசுரர்களையும் அரக்கர்களையும் பூதங்களையும் விண்ணவர்களையும் சித்திரிப்பதில் விருப்பமுடையவர்களாக இருந்தனர். சாவகத்தில் பௌத்தமும் சைவமும் தலைசிறந்த சமயமாய் விளங்கின. சிவனுக்கும் விஷ்ணுவிற்கும் வேறுபாடு காட்டவில்லை. ஆனாலும், சாவக மக்கள் தங்கள் மன்னர்களைத் திருமாலைப்போல் (விஷ்ணுவைப் போல்) காட்டாமல் சிவனைப் போலவும் புத்தரைப் போலவுமே காட்டியுள்ளார்கள். ஆனல் தமிழ் மக்கள் மன்னர்கள் மகா விஷ்ணுவின் கூறுதான் என்று கருதுவார்கள். "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேன்" என்னும் வாசகம் திருவாய்மொழி எனத் தமிழ்ப் புலவர்கள் பாடுவார்கள் என்பது நமக்குத் தெரியும்.

இந்தோனேசியாவில் குடியேறிய தமிழர்கள் அங்கொரு காலும் இங்கொருகாலுமாய் இருக்கவில்லை. அவர்கள் பாலில் சீனி கரைவதுபோல் இந்தோனேசிய மக்களோடு கலந்தது போலத் தங்கள் சமயத்தையும், கலைகளையும் நாகரிகத்தையும் அந்நாட்டுச் சமயத்தோடும் கலைகளோடும் நாகரிகத்தோடும் பிணைத்து எவரும் பிரிக்க முடியாத

பேரினமாய் ஆகிவிட்டது தமிழ்ப் பெருங்குடி மக்களின் உயர்ந்த தேசியப் பண்பை விளக்குவதாய் மிளிர்கிறது.

சாவகத்தில் குடியேறிய திராவிடப் பெருங்குடிமக்கள் தம் நாட்டிலிருந்து செல்லும்பொழுது சேரநாட்டினராயும், பாண்டியநாட்டினராயும், சோழநாட்டினராயும் தொண்டை நாட்டினராயும் சென்றனர். இன்னும் சொல்வதானால் பார்ப்பனர்களாயும், ஆதிசைவர்களாயும், வேளாளராயும் செட்டியார்களாயும், அகம்படியர்களாயும், மறவர்களாயும், கம்மாளராயும், பிற இனத்தவர்களாயும் அங்குச் சென்றனர் என்பது மறுக்கமுடியாத உண்மை. ஆனால், சாவக நாட்டில் தங்கள் சாதி உணர்ச்சிகளைப் பலியிட்டுச் சாவகக் குடிமக்களாக மாறிவிட்டது நாம் கண்டு அதிசயிக்கத்தக்கது. ஆனால் இன்று சிலர் தாங்கள் பாண்டியர்குடி என்றும் பல்லவர்குடி என்றும் சோழர்குடி என்றும் கூறி வருகின்றார்களாம். ஆனால் பெயரளவில் இந்தப் பேச்சு இருக்கிறதேயொழிய இவை ஒன்றும் அவர்களுக்குள் எவ்வித வேற்றுமையையும் வளர்க்கவில்லை. இன்னும் விளக்கமாகச் சொல்வதானால் பௌத்த சமயம், சைவசமயம், வைணவ சமயம், கிறிஸ்தவ சமயம், இஸ்லாமிய சமயம் போன்ற சமய உணர்ச்சிகள் கூட அவர்களைப் பிரித்து வைக்க முடியவில்லை. அங்குள்ள முஸ்லிம்கள் கூடச் சைவ சமயப் பெயர்வைத்திருக்கின்றார்கள். முஸ்லிம்கள் தங்களின் முன்னோர்கள் கையாண்ட பல சமயச் சடங்குகளையும் கிரியைகளையும் இன்னும் தொடர்ந்து நடத்திவருகிறார்கள். கணவன் முஸ்லிமாயும் மனைவி சைவசமயமாயும் இருப்பதை எங்கும் காண முடியும். கணவன் மனைவி ஆகியவர்கள் ஒருவர் கிறிஸ்தவராயும் மற்றொருவர் முஸ்லிமாயும் இருப்பார்கள். இவர்களின் உறவினர் பௌத்தர்களாய் இருப்பர். சில இடங்களில் இவர்களின் மக்கள் சைவர்களாய் இருந்தாலும்

இருப்பர். ஆனால் இப்பொழுது அங்கும் சமய உணர்ச்சி ஓரளவு தலைகாட்டி வருகிறது என்பது மறுக்கமுடியாத உண்மையாகும். சாவகத்தில் குடியேறிய மக்கள் தமிழ் மொழியை மறந்துவிட்டனர். இப்பொழுது அவர்கள் தாங்கள் தமிழர்களின் சந்ததிகள் என்றோ இந்தியர்களின் சந்ததிகளென்றோ அறியார்கள். அவர்கள் கோயிலில் இன்றும் பாடப்பட்டுவரும் திருவாசகத்தைத் தமிழ் என்று அறியார்கள். நாம் கூறினாலும் அது தமிழல்ல - எங்கள் மந்திரம் என்று கூறிவருகின்றார்கள். ஆனால் சமீபகாலமாக அவர்களிடையே வளர்ந்துவரும் கல்வி அறிவும், வரலாற்று ஆராய்ச்சியும், புதைபொருள் ஆராய்ச்சியும் சில அறிஞர்களிடையே தாங்களும் தங்கள் சமயமும், தங்கள் கலைகளும், பொதுவாக இந்திய மூலத்தை-சிறப்பாகத் தமிழ் மூலத்தை உடையன என்ற உண்மையை உணர்த்தி வருகின்றன.

சாவகத்தில் இந்தியக்கலை - சிறப்பாக இந்தியக்கலை புதிய அழகிய உருவம்பெற்றுத் திகழ்கிறது. அஃது இந்தோ-சாவகக்கலை என்றே அழைக்கப்படுகிறது.

சாவகத்தில் மறுமலர்ச்சி பெற்றுள்ள நமது கலை தமிழகத்தில் துளிர்த்து நிற்கும். திராவிடக் கலையைவிடச் சிறந்தது என்று உலகக் கலை மேதைகள் பலர் ஒருமித்து முடிவு கூறுகின்றார்கள். சாவகத்தில் நமது கட்டிடக்கலையும், படிமக்கலையுந்தான் புத்துருப் பெற்று எழுந்தது என்று எண்ணுவது தவறாகும். நமது சைவசமயமே அங்குப் புத்துருப் பெற்றுப் புகழ் நிலையில் உள்ளது. அங்கு நமது நாட்டியக் கலையும் இசைக்கலையும், நாடகக் கலையும், பாவைக் கூத்தும், நம்முடைய, வரிவடிவங்களும், இதிகாசங்களும், கட்டுக் கதைகளும், ஆடைகளும், அணிகளும் அலங்காரங் களும் புத்துருப் பெற்று சிறந்து விளங்குகின்றன.

நான் 1934ஆம் ஆண்டில் கோலாலம்பூரில் ஓர் இந்தியரைச் சந்தித்தேன். அவருடன் ஓர் அழகிய இளம் பெண்ணும் இருந்தாள். அவளை நான் ஓர் இந்தியப் பெண் என்றே எண்ணி இருந்தேன். அப்பால் அவர் அவரைத் தம் மனைவி யென்றும் அவர்கள் சாவகப் பெண் என்றும் அவள் பெயர் ஜானகி என்றும் எனக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். அதைக் கேட்டு நான் பேராச்சரியமுற்றேன். அப்பெண் நல்ல பொன்னிறம் வாய்ந்தவளாயும், சுமார் 4½ அடி உயரமும் அழகிய முகமும் கட்டுக்கோப்பான உடலும் பெற்றிருந்தாள். அவள் தமிழ் நாட்டுப்பாணியில் நீலநிறமான காஞ்சிபுரம் பட்டுச் சேலையும் அதற்கேற்ற ரவிக்கையும் காதிலும் கழுத்திலும் கைகளிலும் பொன்னுற் செய்யப்பட்டுக் கற்பதித்த தோடும், மாலைகளும் வளையல்களும் அணிந்திருந்தாள். நெற்றியில் கருமையான சாந்துப் பொட்டு அணிந்திருந்தாள். அவள் ஓர் இந்தியப் பெண்ணென நான் எண்ணவில்லை. விண்ணிலிருந்து மண்ணிற்கு வந்த ஓர் அரம்பையாகவே எண்ணினேன். நான் அதன்முன் இதை விட அழகிய சாவகப் பெண்களைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் எல்லாரும் அந்நாட்டுத் தேசீய உடையை அணிந்தவர்களாகவே இருந்தனர். ஆனால் இவர் இந்திய ஆடையும் அணிகளும் அணிந்திருந்ததால் இவரது அழகை அவை பெரிதும் உயர்த்திக்காட்டின. சாவகப் பெண்களுக்கு இந்திய ஆடைகளும் அணிகளும் மிகப் பொருத்தமானதாக இருக்கின்றன. அவர்களின் இயற்கை அழகை இந்திய ஆடைகளும் அணிகளும் பன்மடங்கு உயர்த்திக் காட்டுகின்றன. இந்திய ஆடைகள் ஐரோப்பியப் பெண்களைவிட இந்தோனேசியப் பெண்களுக்கு மிகமிகப் பொருத்தமாக இருக்கின்றன.

சாவகப் பெண்கள் முற்காலத்தில் தமிழ்நாட்டுப் பெண்களைப் போல் அரையில் மட்டும் ஒரு 5 அல்லது 5½ முழநீளமுள்ள ஆடைகளை அணிந்து வந்தார்கள். மேலாடை அணிவதில்லை. மிகப் பிற்காலத்தில்தான் மேலே சட்டையும் தாவணி போன்ற சிறிய துண்டையும் மேலாடையாக அணிந்து வந்தனர். ஆனால் பண்டுதொட்டு அவர்கள் அரையில் கட்டியிருக்கும் வண்ணச் சேலைகள் மிகக் கவர்ச்சி தருவனவாகும். அதில் தீட்டப்பட்ட கொடிகளும், செடிகளும், பூக்களும் பிறவும் எழில் மிக்கனவாகவும் இருக்கும். பண்டுதொட்டுச் சாவகத்தில் பட்டாடைகளும் பஞ்சாடைகளும் உண்டு. அவைகளின் உடலில் உள்ள பல்வேறு வண்ணங்களும், செடிகொடிகளும் அழகிய விளிம்புகளும் மிகவும் சிறப்புடையன.

———

# 4. உலகனைத்தும் பரவிய பௌத்த நெறி

சைவம், சமணம், பௌத்தம் போன்ற நெறிகள் இந்திய மண்ணில் பிறந்து வளர்ந்து பிற நாடுகளுக்கும் சென்று பரவின. உலகத்திலுள்ள எல்லா மதங்களும் அஃதாவது இஸ்லாம், கிறிஸ்துமதம், எகொவாமதம், பௌத்தமதம், சமணமதம், சைவமதம், போன்ற அனைத்தும் ஒரே அடிப்படையில் அரும்பியுள்ளன என்று சமய ஆராய்ச்சியாளர்கள் கூறினாலும் இந்தியாவில் பிறந்த மதங்கள் எல்லாம் ஒருதனித் தன்மையுடையவைகளாய் மிளிர்கின்றன. எல்லா மதங்களும் மனிதாபிமானத்தைப் போற்றுகின்றன; ஆனால் இந்திய மதங்கள் மட்டுந்தான், மக்கள் மனிதாபிமானத்தை வளர்க்க வேண்டும் என்றால் முதலில் அவர்களிடம், "எவ்வுயிர்க்கும் அன்பா இரு" என்ற தத்துவம் நிலைநாட்டப்பட வேண்டும் என்று வற்புறுத்தின. புழுப்போன்ற சிற்றுயிரினின்று மனிதன் வரை உள்ள எல்லா உயிர்களிடமும் அன்புபாராட்ட வேண்டும் என்ற உயரிய சித்தாந்தத்தை அடிப்படையிட்ட செந்நெறியாக மலர்ந்தன.

இவற்றுள் பௌத்தமதம், தெய்வத்தை வணங்குவதற்கு முதலிடம் கொடாது மோட்சத்திற்கு முதலிடம் கொடுத்து உயிர்களிடம் அன்பு செலுத்துபவர்கள் மோட்சத்தை - நிர்வாணத்தை அடைவார்கள் என்ற உண்மையைப் போதித்தது. இந்த மதம் உலகில் முதன் முதலாக இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்குமுன்பே பிரச்சாரமதமாய் விளங்கியது. தனது சமயக் கொள்கைகளைக் கடல்கடந்து ஆயிரக்கணக்கான கல் தொலைவிற்கு அப்பாலுள்ள நாடுகளுக்கும், தீவுகளுக்கும் ஆண், பெண்

துறவிகளைப் பிரசாரர்களாக அனுப்பிப் பரப்பியது அதனோடு எங்கும் இந்தியக் கலைகளையும், கல்வியையும். மருத்துவத்தையும் பரப்பி வந்தது. புத்தமதம் இமயந் தொட்டுக் குமரிவரை ஒருகாலத்தில் பரவி இருந்தது. பௌத்தமதத்தில் மஹாயானம், ஹீனயானம் என்ற இரு பிரிவுகள் இருந்துவந்தன.

புத்தமதம் பாரதநாட்டினின்று சாவகத்திற்குப் பரவியது. ஆனால் சாவகத்திற்குச் சென்றது பௌத்தமதப் பிரிவுகளில் ஒன்றான மஹாயானம் எனப்படுவதாகும். கௌதமபுத்தர் காலஞ் சென்றபின்னர் (சிர்கா 480 கி. மு.) புத்தர் சாக்கிய முனி என்றழைக்கப்பட்டார். பௌத்தமதக் கோட்பாடுகள் நாளடைவில் திரிபுற்றுப் பல மாறுதல்களைப் பெற்றது. அப்பால் அஃது இரு பெரும் பிரிவுகளாகப் பிரிந்தது. ஒன்று ஹீனயானம்; இஃது இயன்ற அளவு புத்தபகவானால் உபதேசிக்கப் பெற்ற கோட்பாடுகளை அனுசரித்து நடக்கவேண்டும் என்று கூறும் பிரிவு. மற்றொன்று மஹாயானம் என்பது; இது கி. பி. 100ஆம் ஆண்டு நன்றாகக் காலத்திற் கேற்ப வியாக்யானம் செய்யப் பட்ட சீர்திருத்த நெறி.

ஹீனயானம், இப்பொழுது நடைபெறும் உலக சகாப்தத்தில் ஒரு புத்தர்தான் உண்டு என்பதை ஒப்புக் கொள்கிறது. அவர் முன்னால், பௌத்த நிலையை அடைய எண்ணற்ற காலம் வாழ்க்கைமுறையை நன்குணர்ந்து நன்றாக வாழ்ந்து புத்தசாத்தவராக இருந்து ஆக வேண்டும். இந்த உண்மைக் கேற்பக் கடந்தகாலத்தில் பல புத்தர்களாக இருந்து பூமியில் பிறந்து ஒருவரிலிருந்து மற்றவர் ஆகத் தனியாகப் பல்லாண்டு கடந்திருக்க வேண்டும். புத்தபகவான் மனிதவர்க்கம் அதனுடைய

உண்மையான ஈடேற்றத்தை அடையச் செய்யும் இலட்சியத்தோடே நாடெங்கும் உபதேசித்து வந்தார். மக்கள் செய்யும் கர்மத்தின் பயனாகத் தொடர்ந்துவரும் இந்தப் பிறவித்துன்பத்தைத் துடைத்து ஆன்மா நிரந்தரமான இன்பத்தை அடையும் நிர்வாண நிலையை (மோட்சத்தை) அடைய வழிகாட்டினார். பௌத்த நெறி காட்டும் வழியில் ஒருவர் நடந்தால் நிர்வாண நிலையை எளிதில் அடைய முடியும் என்று பௌத்த நெறி கூறுகிறது. ஒருவர் இரட்சிப்பு அடையவேண்டுமானால் அவர் உண்மைப் பௌத்தனாக வேண்டும். பௌத்தம் எல்லா உயிர் இனங்களும் இன்ப நிலையை அடைய வழிகாட்டும். இந்தப் புதிய சகாப்தத்தில் கௌதம புத்தர் நிர்வாண நிலையை அடைந்து பிறர்க்கும் வழிகாட்டினார். ஹீனயானம் போதி சாத்தவ மைத்திரேயரையும் அந்த இன்பநிலையை எய்தியவ ராகச் சேர்த்துக் கொள்கிறது.

மஹாயான பௌத்தப் பிரிவினைச் சேர்ந்த அறிஞர்களிடத்திலிருந்து தோன்றிய மூலப் பெயர்தான் சிறு ஊர்தி (Petty Vehicle) என்று எண்ணப்படுகிறது. பெரும் ஊர்தி என்று கூறப்பட்டது, போதிசாத்தவர் புத்தர் ஆகியவர்களின் கோட்பாட்டின்படி எல்லோரும் அடையக் கூடிய நிலை. விரிந்த பொருளில் பார்த்தால் உயர்ந்த இரட்சிப்பு மனிதவர்க்கத்தினர் எவரும் அடையக் கூடிய நிலையேயாகும்.

பழைய பௌத்தமதம் மிக உயர்ந்த பரம்பொருள், இல்லை—கடவுள் இல்லை என்பதை அங்கீகரித்திருந்தது. இதை ஏறத்தாழ ஹீனயான பௌத்த மதப் பிரிவு ஏற்றுக் கொண்டது. முற்காலப் பௌத்த சமய நூல்களில் குறிப்பிட்ட தெய்வங்கள் புத்தரைவிட உயர்ந்ததன்று;

இவைகள் மனிதரல்லாத ஒருவகைப் பிரிவைச் சேர்ந்தது; இது மனிதவர்க்கத்தைப் போலக் காமத்தை அடிப்படையாகக் கொண்டு மீண்டும் மீண்டும் பிறந்து உழல்வதேயாகும். வைதீகப் பௌத்தர்கள் இவைகளைப் பிரார்த்திப்பதே இல்லை; அவைகள் மக்களுக்கு எதையும் அளிக்கமுடியாது; எனவே மக்கள் அத்தெய்வத்திற்கு எவ்விதக் காணிக்கையும் சமர்ப்பிப்பதில்லை. மஹாயான பௌத்த சமயப்பிரிவினர் எல்லாவித முறைகளையும் தாங்களாகவே அபிவிருத்தி செய்து கொண்டுள்ளனர். அதில் எண்ணற்ற தெய்வங்களுக்கு இடம் அளிக்கப் பெற்றுள்ளது—ஏன்? பெண் தெய்வங்களுக்குக் கூட இடம் அளிக்கப் பெற்றுள்ளது. அஃது, எல்லாம் ஆதிபுத்தர் (பூர்வபுத்தர்) மூலமே தோன்றி நிலைத்திருக்கிறது என்பதை ஒப்புக்கொள்கிறது. பிந்தியது ஐந்து தியான புத்தர்களை வெளிப்படுத்தி இருக்கிறது. ஒவ்வொன்றும் ஒரு தனித்த ஞானப் பார்வையை யுடையவர்கள் என்று கூறுகிறது. அவர்கள் என்றென்றும் வானுலகில் வாழ்பவர்கள்; அவர் இந்தப் பூவுலகின் விசயங்களில் ஒரு விசேடப்பங்கெடுத்துக் கொள்ள மாட்டார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் தெய்வீகப் புதல்வர்களாக இருந்த நிலையிலே தம்மைத் தாமே வெளிப்படுத்திக் கொள்வார்கள். இவர்களே தியானபுத்த சாத்தவர்கள் என்று கூறப்படும் திருப்புதல்வர்களாவார்கள். இவர்கள் தங்களுடைய தெய்வீகத் தந்தையர்களின் குருவினைப் போன்றவர்கள். இவர்கள் கருதிப பயனைத் தரத்தக்க முறையில் இந்த உலகை நேரடியாக ஆள்பவர்கள். தம்முடைய படைப்புயிர்களுக்கு வழிகாட்டும் வன்மை வாய்ந்தவர்கள். தங்களுடைய தேவைகளுக்காக அவர்கள் அருகில் நின்று அவைகளைப் பெறுவார்கள். அவர்களைத் திருவருள்பாலிக்கும் திக்கிற்கு நடத்திச் செல்வார்கள்.

மேலும் அவர்கள் ஒரே காலத்தில் ஆட்சிநடத்துகிறதில்லை. ஆனால் தொடர்ந்து ஆள்வார்கள். படைப்பின் இப்போதைய சகாப்தத்தில் ஐந்து காலங்கள் உண்டு. நாம் இருந்து வரும் இந்தக் காலம் நான்காவது பிரிவில் அடங்கும். இப்பொழுது இந்த உலகைத் தொடர்ந்து நாலாவது தியானபுத்த சாத்தவர் ஆண்டுவருகிறார். ஐந்து தியானபுத்த சாத்தவர்களின் பெயர்கள் அடியில் வருமாறு; 1 வைரோகண, 2 அக்சோபியா, 3 இரத்தின சாம்பவ, 4 அமிதபா, 5 அமோகாசித்த என்பனவாகும். இவர்களின் மக்கள் (1) சமந்தபத்திர, (2) வச்சிரபாணி, (3) இரத்தினபாணி, (4) பத்மபாணி, (5) வயூபாணி என அழைக்கப்படுவார்கள். பிரபஞ்சத்தின் தலைவர் பத்மபாணி என்று அழைக்கப்படும் அவலோகீஸ்வரர் ஆகும். முழுநிறைவின் நோக்கத்திற்கு இங்கு நாம் ஒவ்வொரு தியானபுத்தரையும் குறிப்பிட்டுள்ளோம். அவர் இந்த உலகப் பிரதிபலிப்பு மனுஷி-புத்தர் என்று அழைக்கப்படும். அஃதாவது புத்தர் இவ்வுலகில் ஒரு மனிதனாக நடப்பது என்று பொருள்படும். இவ்வுலகில் சற்குண வாழ்க்கை நடத்தியவர்கள, அவர்கள் இறந்துவிட்டாலும்கூட, நான்காவது தியான புத்தர் எனப்படும் அமிதபா என்பவரின் தெய்வீக உலகில் அனுமதிக்கப்படுவார்கள். இந்த உலகம் இப்பொழுது நான்காவது தியானபுத்தரால் ஆளப்பட்டாலும் கூடக் கௌதமபுத்தர் இவ்வுலகில் நான்காவது மனித புத்தராகத் தோன்றினார்.

இந்த ஐந்து தியான - போதிசாத்தவர்களைத் தவிர இன்னும் பல போதிசாத்தவர்களும் உண்டு. இவர்கள் கடவுளைப் போல் கருதப்பட்டு பிரார்த்திக்கப்பட்டும் கௌரவிக்கப்பட்டும் வருகிறார்கள். மஹாயானப் பிரிவில் இதைவிடப் பல தெய்வங்கள் உள என்பது நம்பப்படுகிறது.

மஹாயானப் பிரிவினர் பல சடங்குகளையும் தெய்வ உருவங்களையும் வழிபட்டுவருகிறார்கள். இவைகளையெல்லாம் இங்கு விவரிக்க முடியவில்லை.

ஆனால், இங்குப் பெண்தெய்வங்களைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்லாமல் விட்டுவிட நம்மால் முடியவில்லை. ஒவ்வொரு தெய்வமும் ஒரு பெண்ணை அஃதாவது ஓர் எதிர்ப் பகுதியை - தன்சக்தியை உடையதாய் இருக்கிறது. இந்த வார்த்தையைக் குறித்துக் காட்டும் மனஆற்றல் சக்தி, வீரியம், ஆகியவைகள் ஆதிபாகக் கடவுளுடைய வல்லமையைத் தவிர வேறு எந்த முக்கியத்துவமும் இல்லை என்பதை வெளிப்படையாகக் காட்டுவதாகும். ஆதியாக அவர்களின் சக்தியினுடைய பணியில், மனிதர்கள் தங்களின் மரியாதையை அளித்துத் தெய்வத்தின் அருளைப் பெறுகிறார்கள். விளக்கமாகக் கூறுவதானால் தெய்வங்கள் தாமாகவே தம்மை வெளிப்படுத்தித் தம்முடைய பயனுள்ள சக்தியைக் காலாகாலத்தில் பாவனைகாட்டி வருகின்றன. அதோடு தம்மைப் பெண் தெய்வமாகப் பிரதிபலிக்கின்றன. மேலும் அவைகள் கடவுளின் அருகில் இருப்பதாகவும் கருதப்படுகின்றன. முதலில் ஒரு தோழியாகவும் உடனே துணைவியாகவும் மாறி விடுகிறது. மஹாயான பௌத்த நெறி முழுமையான கருத்துருவத்துடன் இணைந்து நிற்கிறது. அது மிகவும் அகண்டாகாரமாய்ப் பயனுள்ள தேவியான தாரா என்னும் அவலோகீஸ்வரரின் சக்தியாக விளங்குகிறது. அவள் கிறிஸ்தவ திருச்சபையின் பரிசுத்த கன்னிமரியாளின் பல்வேறு மரியாதைகளை நமக்கு நினைப்பூட்டுகிறாள். அவள் மனிதவர்க்கத்திற்கு உதவிபுரிந்தும் காப்பாற்றியும் அவள் இருந்த நிலையிலே இருந்து கொண்டு மண்ணிற்கும் விண்ணிற்கும் இடையே மத்தியஸ்தராய்

விளங்குகிறாள். அவள் அவலோகீஸ்வரரின் தூதனாக ஆனால் நடைமுறையில் ஒன்றும் இல்லாதது போல் - உதவி புரிந்தும் உருவகசக்தியால் ஈடேற்றம் அளித்தும் வருகிறாள்.

ஆரியர் வருகையால் பாரத நாட்டில் சமயச்சடங்குகள் வளர்ந்தன. தெய்வங்கள் பெருகின. புரோகிதம் வளர்ந்தது. சாத்திரங்களும் சடங்குகளும் மலிந்தன. அதனால் கலைகளும் கட்டுக்கதைகளும்வளர்ந்தன. குருட்டுப்பழக்கவழக்கங்களும், மூடநம்பிக்கைகளும், சாதிகளும், சாதிக்கட்டுப்பாடுகளும் பயனற்ற மந்திர தந்திரங்களும் பெருகின. தெய்வங்களும் அவற்றின் மனைவி மக்களும், சிறு தெய்வங்களும் பெரிய தெய்வங்களும் அவற்றின் பணியாட்களுமாக ஆயிரம் ஆயிரமாகத் தெய்வங்கள் பல்கிப் பெருக்கெடுத்தன. முப்பத்து முக்கோடி தேவர்களும் அவர்களின் மனைவிமக்கள் பணியாட்களுமாகக் கோடானு கோடி தெய்வங்கள் பல்கிப் பெருகின.

புதிதாகத் தோன்றிய பௌத்தம் மீண்டும் பழைய சமயத்தின் சாயலைப் பெற்றாலும் புரோகித ஆதிக்கத்தைத் துடைத்தெறிந்தது. குலஉயர்வையும் சாதிச் செருக்கையும் ஓரளவு ஒழித்தது. மன்னர்களையும் மகுடாதிபதிகளையும் தங்களின் உயர்ந்த பீடத்தினின்று கீழே இறங்கிவரும்படி செய்தது. ஈனர்களின் இளிகுரலுக்கு உயர்ந்தோர்கள் செவிகொடுக்கும்படி செய்தது. சண்டாளர்கள் என்று நிந்திக்கப்பட்ட மனிதர்களை எளிதில் தெய்வநிலை பெறும்படி செய்தது. சீவகாருண்யத்தை வளர்த்தது. கட்டிடக் கலையையும் படிமக்கலையையும் சிறப்புறச் செய்தன. ஆயிரம் மன்னர்களையும் இளவரசர்களையும் இளவரசிகளையும் மாட மாளிகைகளினின்று கீழே இறங்கிவரச் செய்து ஏழை எளிய மக்கள் போல வாழச் செய்தது. ஏன்? இவ்வுலக இன்பங்

களைத் துறந்து வறியவர்களுக்கு உதவச் செய்தது. கடல் கடந்து ஆயிரக்கணக்கான தொலைவிற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஆண்களும் பெண்களும் துறவிகளாய் உலகிலுள்ள பல் வேறு நாட்டிலும், தீவிலும் போய்ப் பௌத்த நெறியைப் பரவும்படி செய்தது. மன்னர்களும் அவர்களின் மக்களும் துறவிகளாய்த் தியாகிகளாய் கடல் கடந்து ஆயிரக்கணக்கான கல் தொலைவிற்குச் சென்று சமயப்பிரசாரஞ் செய்யத் தூண்டியது.

பௌத்த துறவிகள் வெளிநாடுகளுக்குப் பௌத்த நெறியைக் கொண்டு போகும்பொழுது, இந்தியக் கலைகளையும் இந்திய நாகரிகத்தையும் இந்தியப் பண்பாட்டையும் இந்திய ஒழுக்கத்தையும் இந்திய மொழியையும் இந்திய இலககியங்களையும் கொண்டுபோய் ஆங்காங்கே பரப்பி வந்தனர். பௌத்தமதம் இரஷியா, சீனு, மங்கோலியா, சப்பான், கொரியா, சம்பா, போர்னியா, லாஓஸ், சாவகம் சுமத்திரா, பார்லி, கம்போடியோ, தாய்லந்து, பர்மா, சிங்கப்பூர், மலேசியா போன்ற பல்வேறு நாடுகளில் பரவி அரசாங்க மதமாய்ச் சிறப்புப் பெற்றெழுந்தது. என்ருலும் அது சாவகம், சுமத்திரா போன்ற நாடுகளில் - சிறப்பாக இன்று இண்டோனேசியா என்று கூறப்படும் நாட்டில் அது மிக மிகச் செல்வாக்குப் பெற்று இந்தியக்கலைகளுக்கு உலகிலே மிகப் பெருமை எழும்படி செய்தது.

பௌத்தமதம் ஆரிய மதமன்று. ஆரியத்தையும் புரோகித்தத்தையும் அழிக்க வந்த மதம். என் சம்பந்தப்பட்ட மட்டில் அதைத் திராவிட சமயம் என்று கூறுவதில் கூடத்தப்பு இல்லை என்று எண்ணுகிறேன். அஃது ஒரு காலத்தில் திராவிட நாட்டில் பெரிதும் பரவித் திராவிடச் சாயலைப் பெற்றுள்ளது என்று கூட எண்ணுகிறேன்.

அது தமிழகத்தில் ஒரு காலத்தில் பரவித் தமிழ் மன்னர்களை யெல்லாம் தம்பால் ஈர்த்துக் கொண்டது. வடஇந்தியாவில் பௌத்த பல்கலைக் கழகம் ஒன்று சாரநாத் என்னும் இடத்தில் இருந்தது போலக் காஞ்சிபுரத்திலும் பௌத்த மதம் அரசாங்கமதமாய் எழுந்ததோடு அங்கு ஒரு சிறந்த பல்கலைக் கழகத்தையும் பெற்றிருந்தது. காஞ்சி பௌத்த பல்கலைக்கழகம் உலகப்புகழ் வாய்ந்ததாய் இருந்தது. சீனம், சப்பான் முதலிய அயல் நாடுகளிலிருந்தெல்லாம் பௌத்த சமயக் கல்வியைப் பெறப் பல அறிஞர்களும் துறவிகளும் காஞ்சிக்கு வந்தனர். காஞ்சி பௌத்தப் பலகலைக்கழகம் ஹீனயான பௌத்தமதச் சார்புடையது. எனவே இக்கலாசாலை உலகமெங்கும் ஹீனயான பௌத்தக் கொள்கைக்கு ஓர் ஊற்றாக இருந்தது. இப் பல்கலைக்கழகத்தில் பல தமிழ்ப் பௌத்த துறவிகள் பயின்று உலகமெங்கும் ஹீனயானத்தைப் பரப்பிவந்தனர். கொரியா நாட்டிற்கு முதல் முதலாகச் சென்ற பௌத்ததுறவி ஒரு தமிழனேயாகும். அவர் அங்குப் பௌத்த சமயத்தைப் பரப்பியதோடு அங்குப் பல விகாரைகளையும் டகோபாக்களையும் நிறுவியுள்ளார். முப்பது ஆண்டுகளுக்கு முன் கொரியாவில் உள்ள குன்றின் மீதுள்ள ஒரு பௌத்தக் கோயிலைத் தரிசிக்கத் தமிழர் ஒருவர் போயிருந்தபொழுது அங்கிருந்த பௌத்ததுறவி இதை வெளியிட்டதாக ஆனந்தவிகடன் தீபாவளிமலரில் ஒரு கட்டுரையில் படித்தது எனக்கு இப்பொழுது நினைவிற்கு வருகிறது.

## பௌத்த சமயமும் குணவர்மனும்

கி. பி. 6ஆம் நூற்றாண்டின் இறுதியில் சாவகத் தீவில் பௌத்த நெறி பரவியது. இக்காலத்தில் காஷ்மீர நாட்டு இளவரசன் குணவர்மன் என்பவன் சாவகத்தில் பௌத்த

நெறியைப் பரப்பினன். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் சாவகம் போந்த சீன வழிப்போக்கன் சாவகத்தில் மூலசர்வாஸ்திவாதப் பிரிவைச் சேர்ந்த பௌத்த மதத்தினரே பெரும்பான்மையினராக இருப்பதாகக் கூறியுள்ளான்.

சாவகம் முழுவதையும் பௌத்த நெறிக்கு உட்படுத்திய பெருமை குணவர்மனுக்கே உரியது என்று பௌத்த அறிஞர்கள் கூறுகின்றார்கள். குணவர்மன் அரச வாழ்க்கையை விரும்பாது, போரையும், உயிர்க்கொலையையும் வெறுத்து வந்தான். அவன் உலகப்பற்றை யுதறித்தள்ளி விட உறுதிகொண்டான். எனவே தன் தலையில் சுமத்த இருந்த அரசபதவியை ஏற்க மனமின்றி இரவோடிராவாகக் காஷ்மீரத்தைத் துறந்து இலங்கையை அடைந்தான். அங்குப் பௌத்தர்கள் அவனை அன்போடு வரவேற்று உபசரித்தனர். குணவர்மன் இலங்கையில் சிறிது காலந் தங்கிவிட்டுப் பின் சாவகஞ் சென்றான். சாவகம் போனதும் அவன் புத்த சங்கபாசியாய்ப் புத்த சீலத்தைப் போதித்து வந்தான். அந்நாட்டில் அவனுக்கு நல்ல வரவேற்புக் கிடைத்தது. இவன் சாவகம் சென்ற மறுநாள் சாவக அரசனின் தாயார் புத்தநெறியைத் தழுவினாள். அப்பால் சாவக அரசனும் அரசியும் அவர்கள் குடும்பத்தினரும் பௌத்த சமயத்தை ஏற்றனர். இதன்பலனாக நாடே பௌத்த நெறிக்கு ஆட்பட்டது.

சிலகாலத்திற்குப்பின் அடுத்த நாட்டு அரசன் சாவகத்தின் மீது போர்தொடுத்தான். மன்னன் குணவர்மனை அழைத்துப் பகைவனின் படையெடுப்பை எதிர்த்துப் போர் புரிவது தர்மமாகுமா என்று வினவினான். அதற்குக் குணவர்மன், பகைவனை எதிர்த்துப் போராடுவதே

ஆண்மையுள்ள அரசர்களுக்கு அழகு; அஃது அரசர்களின் கடமையுமாகும். ஆனால் பகைவன்மீது தீய எண்ணத்தைக் கொள்ளக்கூடாது என்று கூறினான். எதிர் பார்த்தவாறு போர் எதுவும் நிகழவில்லை. ஆனால் பகைவர்கள் பதறிச் சிதறியோடத் தலைப்பட்டார்கள். இதன் நினைவாகச் சாவக மன்னன் குணவர்மனுக்கு ஒரு பௌத்த விகாரத்தைக் கட்டிக் கொடுத்தான்.

குணவர்மன் நந்தி என்னும் இந்திய வணிகனுக்குச் சொந்தமான ஒரு மரக்கலத்தில் சாவகத்தினின்று புறப்பட்டுச் சீனநாட்டிற்குச் சென்று அங்குப் பௌத்த நெறியை வளர்த்து வந்தான். இவன் சீனநாட்டில் நான்கின் என்னும் இடத்தில் கி. பி. 476ஆம் ஆண்டில் மரணம் அடைந்தான். *

பௌத்தமதம் தமிழ்நாட்டில் பரவி அரசாங்கமதமாய்ப் பீடு பெற்றிருந்தது. தமிழ்நாட்டு மன்னர்கள் எல்லாரும் பௌத்த நெறியைத் தழுவி இருந்தனர். அப்பால் அதே போல் சைன சமயமும் அரசாங்க மதமாய்ப் பரவி இருந்தது. இதன் மூலம் நாட்டில் புரோகிதர்கள் செல்வாக்கு ஒழிந்தது. இறைவனுக்கும் மக்களுக்கும் இடையே நின்று மக்களுக்குத் தெய்வங்களிடமிருந்து செல்வத்தையும், நலத்தையும் வாங்கிக் கொடுப்பதாய் நடித்து மக்களைச் சுரண்டி வந்த புரோகிதரின் வாழ்வு அழிந்தது. இதனால் சுமார்த்த குருவும், சைவ சமய சந்நிதானங்களும் ஒன்றுபட்டுப் பௌத்த நெறியையும் சமண சமயத்தையும் தமிழகத்தினின்று துடைத்தெறிந்தனர். பௌத்தமும், சமணமும் ஆதியில் தோன்றிய நல்ல வழிகளினின்று பிறழ்ந்து பல

---

* பூர்வீக இந்தியாவும் ஜாவா சுமத்திராத் தீவுகளும்.
—ஓ. ப. தேசிகன்

சிறு தெய்வங்களையும், பூசைமுறைகளையும் துறவிகளையும் உற்பத்தி செய்ததோடு மக்களைச் சுரண்டி வாழவும் பல குருட்டுப் பழக்க வழக்கங்களையும் மூடநம்பிக்கைகளையும் மேற் கொண்டதே அதன் அழிவிற்குக் காரணமாகும்.

பௌத்தம் தமிழகத்தினர் தேசிய மதமாய் விளங்கிய சைவத்தின்மீதும் வைணவத்தின்மீதும் காழ்ப்புக்கொண்டு அவற்றை அழிப்பதையே பிரதானலட்சியமாகக் கொண்டு தனது லட்சியத்தில் ஓரளவு வெற்றியும் கொண்டது. ஆனல் இறுதியில் சைவமும் பௌத்த சமயத்தின்மீது வஞ்சந்தீர்த்துக் கொள்ளும் முறையில் கிளம்பி அதைத், தமிழகத்தினின்று தன் மூட்டைமுடிச்சுகளோடு வெளியே செல்லும்படி செய்தது. இந்த அனுபவம் சாவகத்தில் இரு சமயங்களும் ஒன்ருெடொன்று மோதாமல் உறவாக வாழும் படி செய்தது.

---

# 5. எந்நாட்டிற்கும் ஏற்ற சிவநெறி

சிவநெறி அல்லது சைவ சமயம் என்று கூறப்படுவது திராவிடப் பெருங்குடி மக்கள் கண்ட ஒரு சமயமாகும். இது திராவிடப் பெருங்குடி மக்களிடம் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பழுத்து முதிர்ந்த பண்பாட்டின் பயனைத் தோன்றி அவர்கள் நாகரிகம் உறும்பொழுதே இதுவும் வளர்ந்துள்ளது. இச்சமயத்திற்கும் ஆரிய சமயத்திற்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. ஆனால் திராவிட மக்கள் பாபிலோனியாவிலிருந்து கைபர் கணவாய் வழியாய் இந்தியாவிற்கு வந்து சிந்து நதிக் கரையிற் குடியேறி அங்குப் பழம்பெரும் நாகரிகத்தை நிலைநாட்டியவர்கள் என்று பல மேனாட்டறிஞர்கள் தக்க சான்றுகளுடன் கூறியுள்ளார்கள். மொகஞ்சதாரோ அரப்பா நாகரிகத்தைச் சுமேரியாவினின்று இந்தியாவிற்கு வந்த திராவிட மக்கள் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னர்க் கட்டி வளர்த்துவந்தனர் என்று சர். ஜான்மார்ஷல், ஹீராஸ் அடிகள் போன்ற பேரறிஞர்கள் தக்க சான்றுகளுடன் எடுத்துக் காட்டுகின்றனர். ஆனால் சைவப் பேரறிஞர்களான திரு. மறைமலை படிகளார், திரு. கா. சுப்பிரமணியபிள்ளை, எம். ஏ., சுந்தரம்பிள்ளை போன்ற பேரறிஞர்கள் சைவம், ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குமுன் தென் இந்தியாவில் தோன்றித் தமிழர்களால் வளர்க்கப்பட்ட தூநெறி என்றும் அது சுமேரியா நாட்டிற்குப் போய்ப் பல்லாண்டுகள் சென்ற பின்னர்க் கைபர் கணவாய் வழியாய் மொகஞ்சதாரோ அரப்பா முதலிய இடங்களில் தங்கி நாளடைவில் மத்திய இந்தியாவில் தங்கி அப்பால் மீண்டும் தன் தாயகம் வந்திருக்கலாம் என்று கருதுகின்றனர்.

இவர்களின் கூற்றுக்கு விஞ்ஞான வாயிலாகச் சான்றுகள் இருப்பதாகத் தெரியவில்லை. பெரும்பாலும் இலக்கியச் சான்றுகளும், உத்தேசங்களுமாகவே இருக்கின்றன. மேலும் இவர்களுக்குத் தமிழும், தமிழர்களும், தமிழர் நெறியும் தென்னாட்டில் பிறந்தனவே என்று உள்ளத்தில் ஊறிக் கிடக்கும் ஒரு பழங்கொள்கையை விட்டுவிட மனமில்லாது கூறும் கூற்றாகவே இருக்கின்றன. தமிழர்கள் ஆரியர்களைப்போல வேற்று நாட்டிலிருந்து இங்கு வந்து குடியேறியவர்களே என்ற கருத்தை ஏற்க முடியாமல் இவர்கள் கூறும் கதைகளே இவை என்று சில அறிஞர்கள் கூறுகின்றார்கள்.

தமிழகம் முதலில் மக்கள் வாழ்ந்த நிலத்தின் தன்மைகளுக்கு ஏற்ப நானிலமாக வகுக்கப்பெற்றது. அப்பால் இயற்கைக் கோளாற்றின் பயனாகப் புதிய நிலம் ஒன்று அரும்பி ஐந்து நிலமாக வகுக்கப்பெற்றது. இந்த ஐந்து நிலங்களுக்கும் ஆங்காங்கே பெரும்பான்மையாகக் காணப்பெற்ற மலர்களின் பெயர்களே சூட்டப்பெற்றன. மலைப் பகுதியில் குறிஞ்சி மலர்கள் நிறைந்த இடத்தில் வாழ்ந்தோர் களைக் குறிஞ்சி நிலமக்கள் என்றும், மலை அடிவாரத்தில் முல்லை மலர் நிறைந்த இடத்தில் வாழ்ந்தோர்களை முல்லை நில மக்கள் என்றும் முல்லைக்கும் குறிஞ்சிக்கும் இடைப் பட்ட பகுதியில் எழுந்த வரண்ட நிலப்பகுதியில், பாலை மலர்கள் நிறைந்த இடத்தில் வாழ்ந்தோர்களைப் பாலை நிலமக்கள் என்றும் வயலும் வயலைச் சார்ந்த இடத்தில் மருத மரங்கள் பூத்துக்கிடக்கும் இடத்தில் வாழும் மக்களை மருதநில மக்கள் என்றும் கடலும் கடல் சார்ந்த இடத்திலும் நெய்தல் மலர்கள் நிறைந்த இடத்தில் வாழ்ந்தவர்களை நெய்தல் நிலமக்கள் என்றும் பெயரிட்டு வழங்கினர்.

இவர்கள் எல்லாரும் முதலில் குறிஞ்சி நிலத்திலே தோன்றியவர்களே. பின்னர் அவர்களில் சிலர் நாளடைவில் மலைகளிலிருந்து வரும் ஆற்றின் வழியாய்க் கீழிறங்கி வந்து மலை அடிவாரத்தில் தங்கினர். அப்பால் ஒரு சிலர் ஆற்றங்கரை வழியாய் வந்து மருதநிலம் நிறைந்த பகுதியில் பள்ளமான இடங்களில் நீர் தேங்கி நிற்பதைக் கண்டு அங்குத் தங்கினர். அவர்களில் சிலர் மீண்டும் ஆற்றங்கரை வழியாய் ஆறு சங்கமம் ஆகும் இடம்வரை சென்று கடற்கரையில் தங்கினர். குறிஞ்சிக்கும், முல்லைக்கும் இடையே வரண்ட நிலப்பகுதியில் வாழ்ந்த மக்கள் பிற்காலத்தில் பாலைமக்களாயினர். ஒரே இனமாக இருந்த தமிழர்கள் ஒரே தெய்வமும் ஒரே பண்பாடும் நிறைந்த தமிழர்கள் பிற்காலத்தில் ஐந்து நில மக்களாய் ஐந்து தொழில்களைச்செய்து ஐந்து பெயர்களைப் பெற்றனர். இவர்கள் குறவர், மறவர், இடையர், உழவர், பரவர் எனப்பட்டனர். இவர்களிடையே முதலில் தாய் ஆட்சியே நிலவியது. தந்தைக்கு ஆட்சியில் இடமில்லாதிருந்தது. தாயே குடும்பத் தலைவியாய் மக்களைப் பெற்றும் பாலூட்டியும் உணவளித்தும் பாதுகாத்தும் வளர்த்து வந்தாள். அப்பால் அந்தப் பழம் பெரும் சமூகத்தில் தாயே தெய்வமாக உயர்த்தப் பெற்றாள். அன்று அவர்களின் தாய்த் தெய்வம் கொற்றவை என்று கூறப் பெற்றாள். இவள் இருள் சூழ்ந்த காட்டில், கொடிய விலங்குகளிடையே தன் மக்களைக் காப்பாற்றுவதிலும் அவளின் கொடிய விரோதியாகிய விலங்குகளின் நடுவில் உணவு தேடுவதிலுமாகப் போர்க்குணம் பெற்றாள். தன் மக்களைக் கொன்று தின்னும் கொடிய விலங்குகளோடு போராடத் தனது மெல்லியஉடல் ஏற்றதன்று என்பதை அனுபவத்தில் அறிந்தாள். அப்பால் அவள் ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தாள். செய்த ஆராய்ச்சியின் பயனாக அவள்

விலங்குகளை ஒளிந்திருந்து கொல்லவும் கல்லாயுதங்களைப் பயன்படுத்தவும் நாளடைவில் பெரிய தடிகள் கூரிய நுனியுள்ள உறுதியான கம்புகள் வில் போன்ற கருவிகள் போன்றவைகளைப் பயன்படுத்தவும் ஆரம்பித்தாள். இந்தக் கொற்றவையே பிற்காலத்தில் காடு கிழவோளாகவும், காளியாகவும் துர்க்கையாகவும் போற்றப் பெற்றாள். இன்றும் அவள் உருவம் முற்காலத்தில் நிர்வாண கோலத்தில் நின்று பகைவர்களைச் சாடும் பயங்கர வடிவத்தில் வைத்தே வணங்கப்படுகிறது.

பின்னர் எழுந்த சமூக வளர்ச்சியில் ஆண் ஆதிக்கம் துளிர்த்தது. தாய் ஆட்சி மாறித் தந்தை ஆட்சி மலரத் தலைப்பட்டது. தமிழர் வாழும் நிலங்களில் மருத நிலத்தில் வேந்தனும், குறிஞ்சி நிலத்தில் முருகனும், முல்லை நிலத்தில் மாயனும், நெய்தல் நிலத்தில் வருணனும் தோன்றினர். ஐந்து நிலத்தில் மருத நிலம் உழவுத்தொழிலால் உயர்வடைய ஆரம்பித்தது. அங்குச் செல்வம் பெருக ஆரம்பித்தது. நாகரிகம் துளிர்க்க ஆரம்பித்தது. பிரபுத்துவ சமூகமும் குடும்பத் தலைவனும் பின்னர் அரசனும் தோன்றினன் வேந்தன் சிவபெருமானாக உயர்த்தப்பட்டான். முதல் தெய்வமும் பாலை நிலத்திற்குரிய தனிப்பெரும் தெய்வமுமாகிய கொற்றவை சிவபெருமானுடைய மனைவியாகவும், குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகன் கொற்றவை மைந்தனாகவும் சிவனுடைய மகனாகவும் முல்லைநிலத் தெய்வமாகிய மாயோன் கொற்றவையின் தம்பியாகவும் சிவபெருமானுடைய மைத்துனனாகவும் நெய்தல் நிலத் தெய்வமாகிய வருணன் சிவபெருமானுடைய பணியாளாகவும் இடம் பெற்றனர்.

மக்கள் சமூகம் வளர்ந்தது. பொருளாதார நிலை உயர்ந்தது. சமய எண்ணங்கள் நாளடைவில் முன்னேற்றம்

அடைந்தன. தெய்வங்களுக்கு உருவமும் அணிகளும் ஆடைகளும் உறையுளும் எழுந்தன. அப்பால் நாளடைவில் அவர்களுக்கு மனைவி மக்கள் மாமன் மருமகள் அண்ணன் தம்பி பணிபாட்கள் போன்றவர்களும் அவர்களைப் பற்றிய அரிய கதைகளும் போர்களும் திருவிளையாடல்களும் தோன்றி மலிந்தன.

சிவபெருமானுடைய மனைவியாகிய கொற்றவை—சத்தி என்று கூறப்பட்டாள். அவள் முதலாவதாக வைத்து எங்கும் போற்றப்பட்டு வந்தாள். அவளுடைய வலிமை ஏற்கப்பட்டது. "சத்திபாய்ச் சிவமாகி" என்று புகழ்ந்து பாடப் பெற்றது. சத்தியின்றேல் சிவம், சவம் எனப்படும் என்றும் கூறப்பட்டது. சிவபெருமானுடைய ஆற்றலே அவனுடைய சத்தி என்று கூறப்படும் என்று தத்துவம் பேசப்பட்டது. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் சென்றும் ஆண் ஆதிக்கம் வளர்ந்தும் ஆதிவரலாறு அழிந்துவிடாமல் தாய்த் தெய்வத்தின் பெருமை ஓரளவு இன்றும் மறையாதிருந்து வருகிறது. இத்தாய்த் தெய்வம் பண்டைய தமிழ்ப்பெருங்குடி மக்களான மறவர்களிடமும் வங்காளிகளிடமும் இன்னும் இருந்து வருவது சிந்திக்கத்தக்கது.

தாய் குடும்பத்தலைவியாய் இருந்து எப்படிப் பின்னர்க் கொற்றவையாய் முகிழ்த்தாளோ அதுபோல் மருதநிலத்திலும் குடும்பத் தலைவன் நாளடைவில் அரசனாய் அப்பால் தெய்வமாய்ப் பின்னர் சிவபெருமானாக முகிழ்த்துவிட்டான். மருதநிலத்தில் குடும்பத்தலைவனாய் இருந்த தந்தை காட்டிலுள்ள காளை மாட்டை நாட்டிற்குக் கொண்டுவந்தான். அதை வாகனமாகப் பழக்கினான். அதை உழவும் வண்டி இழுக்கவும் பொதி சுமக்கவும் பயிற்றுவித்தான். மக்கள் இனத்திற்குக் கொடிய பகையாக இருந்த புலியைக்

கொன்று அதன் தோலை உரித்து ஆடையாக உடுத்தி மக்களை நிர்வாண நிலையிலிருந்து மாற்றினான். யானையோடு போரிட்டுக் கொன்று அதன் தோலை உரித்துப் போர்த்திக்கொண்டான். மானைப் பிடித்துப் பழக்கி அதை வளர்த்து வந்தான். இந்த அரும்பெரும் காரியங்களை யெல்லாம் செய்ய அவன் நெருப்பைக் கண்டான். திரிசூலத்தைச் செய்தான். மழுவை உருவாக்கினான். கொடிய பாம்புகளையெல்லாம் பிடித்துப் பழக்கி அவைகளை அணிகலன்களாகப் பயன்படுத்தினான். அந்தப் பழம் பெருங் காலத்தில் அவன் விரிந்து கிடந்த சடைகளைக் கட்டிச் சடாமகுட தாரியாய் விளங்கினான். அவன் மெல்லிய தோலைப் பயன்படுத்திச் சிறிய உடுக்கையாகச் செய்து கொள்ள முற்பட்டான். அன்று கண்ட நமது குலத்தின் முதல் தந்தை தலைவனாகவும் பின் தெய்வமாகவும் தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமான சிவபெருமானாகவும் உயர்த்தப் பெற்றாலும் அவனது ஆதி உருவம் மாற்றப் பெறாது வைத்திருப்பது நமது உயர்ந்த பண்பாடாகப் போற்றப்படுகிறது. ஆதியில் தமிழர் கண்ட சிவன் தாடியும் மீசையும் உடையவனாகவும் இரண்டு கரங்களை உடையவனாகவும் இருக்கவேண்டும் என்பது எனது கருத்து.

## சிவபெருமான்

உலகிலே தமிழர் ஒரு தனியினம். அவர்கள் மொழியும் ஓர் உயர் தனிச் செம்மொழி. அவர்கள் தெய்வமாகிய சிவனும் ஒரு தனித்தன்மை பெற்றவன். இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிவன் தமிழர் சமூகத்தில் செல்வாக்குப் பெற ஆரம்பித்துவிட்டான் என்பது அறிஞர் சிலரின் கருத்து. ஆனால் மொகஞ்ச

தாரோ நாகரிகத்தில் சிவன் பசுபதியாய் 5000 ஆண்டு களுக்கு முன்பே உருவம் பெற்று எழுந்துவிட்டான் என்று அறிஞர் பலர் முடிவுகட்டியுள்ளார்கள்.

சிவன் சர்வ வல்லமையுள்ள தனிப்பெருங் கடவுள். அவன் பிறவாதவன்; இறவாதவன் அவனுக்குத் தாயும் இல்லை; தந்தையும் இல்லை. அவனே முழுமுதற் பொருள். அவன் என்றும் அவதாரம் செய்வதில்லை. அவன் ஒரு பொழுதும் ஒரு தாய் வயிற்றில் பிறந்து மனிதனாக வந்து மக்களுக்குக் காட்சி அளிப்பதோ அற்புதங்களைச் செய்வதோ இல்லை. அவனுக்கு மனைவியோ மக்களோ இல்லை. அவன் அருளாளன்; அன்புடையவன்; அவன் ஒருவனே தெய் வம். உலகில் திருமால் நான்முகன் என்று சொல்லப்பட்ட வர்கள் எல்லோரும் பிறந்து இறந்து மறைந்து போகக் கூடியவர்களே. சிவனுக்கு எதன்மீதும் வெறுப்பும் விருப் பும் இல்லை. உலகிலுள்ள எல்லா உயிர்களும் அவனுடைய மக்களே. மக்கள் அனைவரும் இன்புற்றுத் தன்னோடு கலந்துவிடுவது அவனது ஆசை. அவனுக்கு ஆதியும் இல்லை. அந்தமும் இல்லை. அவனை இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் அவன் இவ்வுருவை உடையவன், இந் தப் பெயரையுடையவன் என்று எவரும் அவனுக்கு இலக் கணம் கூற முடியாது என்று இன்றல்ல சுமார் 1500 ஆண்டுகளுக்கு முன்பே நமக்கு அறிவுறுத்தியுள்ளனர். தமிழ்மறை என்று போற்றப்படும் திருமந்திரத்தில்,

" அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே"

என்று கூறப்பட்டுள்ளது. சைவ சமய மறைகளுள் ஒன் றாகக் கருதப்பெறும் திருவாசகத்தில்

"தாயுமிலி தந்தையிலி தான்றனியன், காணேடி"
(திருவாசகம் 12. திருச்சாழல் 8)

"ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க் காயிரம்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ"
(திருவாசகம் 11. திருத்தெள்ளேணம் 1)

என்றும் கூறப்படுகின்றன. சைவ சமய அறிஞர்கள் எல்லாரும் தம்மறைகளில் ஒன்றாகப் போற்றப்படும் திருநாவுக்கரசர் தேவாரத்தில்,

"..........................................................
ஒப்புடைய னல்லன் ஒருவனல்லன் ஓரூர னல்லன் ஓருவமனில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே கண்ணாகக்
காணினல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன்
என்றெழுதிக் காட்டொணாதே"

என்றும்,

"நூறு கோடி பிரமர்கள் நொந்தினர்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணில் இந்திரர்
ஈறி லாதவன் ஈசன் ஒருவனே"

என்றும், "செத்துச் செத்துப் பிறப்பதே வென்று பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ?" என்றும் கூறப்பட்டிருத்தல் காண்க.

இஃதன்றிச் சைவசமய நூல்களில் இறைவனைப் பற்றிக் கூறும் இலக்கணம் அப்பழுக்கற்றது. ஒப்புவமையற்றது. தெய்வம் உயிர்களிடத்து மிக அன்புடையது. அதன் படைப்பில் உயர்வு தாழ்வு கிடையாது. அஃது உலகில் ஒருவனை அந்தணனாகவும் மற்றொருவனைப் புலையனாகவும்,

ஒருவனை அரசனாகவும் மற்றொருவனைப் பிச்சைக்காரனாகவும் படைக்கவில்லை. மக்களின் நன்முயற்சிக்கெல்லாம் தோன்றாத் துணையாக நின்று எல்லார்க்கும் இன்பந்தர விழையும் அருட்சோதி. அதற்கு ஆண் என்றும் பெண் என்றும் பால் வேற்றுமைகூட இல்லை. எல்லாரும் தமக்கினிய மக்கள் என்று கருதும் அன்புருவம். எல்லாரும் இறைவனை நேரே அணுகலாம். அவனையடைய வக்கீல்கள் எவரும் தேவை யில்லை. அவனுக்குப் பாலும் வேண்டா பழமும் வேண்டா. அவனுக்குப் பொன்னும் மண்ணும் ஒன்றே. மணிகளும் கல்லும் ஒன்றே என்றெல்லாம் சமய நூல்கள் எடுத்துக் காட்டுகின்றன. அவனுக்கு வீடோ, மாடமாளிகையோ ஏதும் தேவை இல்லை. அவன் "வேண்டுதல் வேண்டாமை இலான்" என்று வள்ளுவன் போன்ற அறவோர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள். "மக்கள் உடலே இறைவன் உறையும் கோயில்" என்று திருமூலர் போன்ற அறிஞர்கள் அறிவுறுத்துகிறார்கள். இஃது இவ்வாறிருக்க இறைவனைப் பற்றிக் கூறும் புராணக் கூற்றுகள் பலவும் மக்களுக்குத் தெய்வ உண்மையை எடுத்துக்காட்ட அறிஞர் பலர் கூறிய கதைகளும், அடியார் பலர் தம் வாழ்க்கையில் கண்ட அனுபவங்களும் சமயஞானிகள் தெய்வத்தன்மையை விளக்க இறைவனைத் தந்தையாகவும், தாயாகவும், தோழனாக வும் காதலனாகவும் வைத்துப் பாடிய பாட்டுக்களுமாகும். பல கதைகள் இறைவனின் ஆற்றலையும் அவனது அருளையும் எடுத்துக்காட்டப் பேரறிஞர்கள் அறிவுடைய மக்களுக்கு எடுத்துக்காட்டிய தத்துவங்களாகும். அதற்குச் சமய ஞானிகளிடம் பொருள் கேட்டுணரலாம். சிவபெருமானை "உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே" என்று அப்பர் பாடி சிவன் உலகமக்களுக்கெல்லாம் உரியவன் என்றும உரைத் திட்டார் என்பதை நாம் மறக்கக்கூடாது.

## சைவம்

சைவம் தமிழர் கண்ட ஓர் அன்பு நெறி. அதன் தெய்வம் சிவபெருமான். பண்டைக்காலத்தில் தமிழர்களுக்கு அறம் கூறும் நான்மறைகள் தமிழில் இருந்தன. காலக் கோளாறினால் அவைகள் மறைந்து விட்டன. இப்பொழுது அந்தப் பழம்பெரும் மறையின் கருததை விளக்கு முறையில் தேவாரம், திருவாசகம், திருமந்திரம், திருக்குறள் போன்ற நூல்கள் உள்ளன.

சைவம் சிவபெருமான் ஒருவனைத் தவிர வேறு எத் தெய்வத்தையும் முழுமுதற் பொருளாக ஏற்றுக் கொள்ள வில்லை. சிவன் தமிழர் கண்ட தெய்வந்தான்; என்றாலும் சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன் என்று சைவநெறி கூறுகிறது. சைவம் சுமார்த்தம்போல் ஓர் இனத்தவர்க்கும் மட்டும் உரிய மதம் அன்று. எல்லாச் சமயமும் இறைவனால் உருவாக்கப்பட்ட மதம் என்றாலும் இடைக் காலத்தில் அச்சமயத்தின் புனித உருவங்கள் மாற்றப் பட்டிருக்கின்றன. சைவமோ அதன் மூலதத்துவத்தைச் சிறிதும் மாற்றாது உலகில் ஒரு சிறிய எறும்புமுதல் பெரிய யானை ஈருக - அறிவுடைய மக்கள் உள்பட எல்லா உயிர் களிடத்தும் அன்புகொள்ளச் செய்யும் புனிதமான சமயமாக விளங்கிவருகிறது. இந்தச் சமயம் சாதியை ஒழிக்கவந்த சமயம். வெள்ளைக்காரனாயிருந்தாலும் சரி கருப்பு நிற நீக்ரோவனாக இருந்தாலும் சரி, மஞ்சள்நிற மங்கோலியனாக இருந்தாலும் ஆரியப்பார்ப்பானாக இருந்தாலும், கேரள நாட்டுப் புலையனாக இருந்தாலும் அல்லது முஸ்லிம், யூதன், கிறித்தவன், பௌத்தன், சமணன் முதலிய யாராக இருந்தாலும் சரி சிவபெருமானுடைய அன்பனாக வாருங்கள் என்று நல்வரவு கூறுகிறது. சிவனை முழுமுதற்கடவுளாக

ஏற்றுக்கொண்டவர்கள் இழிகுலத்தாராயினும், தொழு நோயராயினும் பரவாயில்லை; அவர்கள் என் சகோதரர் என் தெய்வம் என்றும சிவனை முழுமுதற் பொருளாக ஏற்றுக் கொள்ளாதவர்கள் அரசராயிருப்பினும் எவ்வித உயர்நிலையிலிருந்தாலும் அவர்களை நாங்கள் மதிக்கமாட்டோம் என்றும் கூறுகிறது.

"சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்ல ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்குங் கடவு ளாரே"

(நாவுக்கரசர் தேவாரம், தனித்திருத்தாண்டகம் 10)

என்ற தேவாரம் நமக்கு நல்ல எடுத்துக் காட்டாகும்.

பண்டைத் தமிழர் கண்ட பழுத்த சைவம் அன்பை அடிப்படையாகக் கொண்டது. ஆண்மையை அணிகலனாகக் கொண்டது. வீரத்தை இலட்சியமாகக் கொண்டது. தியாகத்தைத் தெய்வப்பணியாகக் கொண்டது. பண்டைச் சைவம் ஒருவன் சிவனுக்கு ஆட்பட்டுவிட்டேன் என்று கூறிவிட்டால் அவனைத் தன் தந்தையாகத் தாயாகத் தலைமயனாகத் தம்பியாக—ஏன்? தன் கடவுளான சிவபெருமானாக எண்ணி அவனைப் போற்றியது. சைவர்கள், அவன் பூனை இன்னும் புலையன் என்றோ இழிகுலத்தான் என்றோ கருதாது அவனைச் சமமாக உட்காரவைத்து உடனிருந்து உண்டுவந்தனர்.

"சாத்திரம்பல பேசும் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங் கொண் டென்செய்வீர்
பாத்திரஞ்சிவ மென்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளுமாற் பேறரே"

என்று அப்பர் சுவாமிகள் அறிவுறுத்தியுள்ளது நமது கருத்தை வலியுறுத்துவதாகும். ஆதிசைவம் ஒருவன் புலையனாக இருந்தாலும், நீக்ரோவனாக இருந்தாலும், சீனனாக இருந்தாலும் அவன் புலால் உணவு புசிப்பவனாக இருந்தாலும் சிவபெருமானை முழுமுதற் கடவுளாக ஏற்றுக் கொண்டேன் என்று கூறி நெற்றியில் திருநீற்றை அணிந்து விட்டால் அவனைச் சைவனாக ஏற்று அவனோடு அருகிருந்து உண்ணும்படி உத்தரவிட்டது. அவர்களோடு கொள்வினை கொடுப்பினைகள் செய்துகொள்ளலாம் என விதி விதித்தது. சைவமெய்யன்பர்கள், சிவனுடைய மெய்யடியார்கள் பறையராய் இருந்தாலும், குயவராய் இருந்தாலும், வண்ணாராய் இருந்தாலும், எவராயிருந்தாலும் அவர்களை வாழ்த்தினர்; வணங்கினர்; அவர்களை வரவேற்று உபசரித்தனர். அவர்களை நாயன்மாராகப் போற்றினர். அவர்களைக் கோயிலுக்குள் அனுமதித்தனர். பிற்காலத்தில் அவர்களின் உருவச்சிலையைக் கோயிலில் வைத்துக் கௌரவித்தனர். வணங்கினர். சைவம் ஈனர்களையும் தீனர்களையும் வழுக்கி வீழ்ந்தோர்களையும் உயர்குலத்தோராக்கியது; ஒழுக்கத்தில் சிறந்த உத்தமர்களாக்கியது, கொலை, களவு, கள், காமம், புலால் உணவு முதலியவைகளை நீக்கி நாடோறும் உடற்றூய்மை செய்து நல்லாடை புனையும் உயர்குலத்தோர்களாக உயர்த்தியது. சைவசமயத்தைச் சார்ந்த ஆண்மக்கள் பலர் சமயத்தைப் பரப்ப உடல் பொருள் ஆவி அனைத்தையும் தியாகஞ்செய்ய முன்வந்தனர். சிலர் துறவறம் மேற்கொண்டு உலகமெங்கும் சைவம் பரவ ஆவனசெய்ய முன் வந்தனர்.

இளம்பெண்கள் பலர் சிவனை வழிபடும் அன்பர்களைத் தவிர வேறு எவரையும் மணந்து கொள்வதில்லை என்று உறுதி பூண்டனர். சிலர் திருமணவாழ்க்கையைத் துறந்து சிவத் தொண்டு புரிந்துவந்தனர். கோயிலில் திருப்பணி ஆற்றினர்.

" அந்தேவர் தேவர், அவர்தேவர் என்றிங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பத்தேதும் இல்லாதென் பற்றறநான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய், கோத்தும்பீ"
(திருவாசகம், திருக்கோத்தும்பி 10-5)

என்றும்

" எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்!
எங்கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க!
எங்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க!
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க!"
(திருவாசகம், திருவெம்பாவை 7-19)

என்றும்

" கொள்ளேன் புரந்தரன் மால்அயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல் லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே இருக்கப் பெறினிறைவா!
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல் லாதெங்கள் உத்தமனே"
(திருவாசகம் 5, திருச்சதகம் 2)

என்பவைகள் நல்ல எடுத்துக் காட்டுக்களாகும்.

சைவம் அன்பு நெறியாய் விளங்கியதால் புழு பூச்சி முதல் மரஞ்செடிகொடி வரை எல்லா உயிர்களிடத்தும் அன்புபாராட்டுவதே மூலக்கொள்கையாய் வைத்து இருந்ததால் மனிதவர்க்கத்தை நேசியாதிருப்பது எங்ஙனம்? அன்பு வடிவாய் அமைந்த சிவனைத் தெய்வமாகக் கொண்ட மக்கள் மற்றவர்களை இழிகுலத்தான் என்றும், வன்

தின்பவன் என்றும் ஒழுக்கம் தவறியவன் என்றும் கருப்பு இறந்தானென்றும், விதவை என்றும், அரக்கி என்றும், கணவனால் விரட்டப்பட்டவள் என்றும், தாசி என்றும் எவ்வாறு இழித்துக் கூறமுடியும்? எல்லோரையும் தந்தையாகவும், தாயாகவும், சகோதரனாகவும், சகோதரியாகவும் எண்ணி அவர்களை உயர்த்தியதால் சைவம் உயர்ந்த நெறியாகப் போற்றப்பட்டது. இந்நெறியை மிலேச்சர்களாகக் கருதப்பெற்ற ஆரியரும், வேடரும், உழவர்களும் குறவர்களும் பரவர்களும் பிறரும் ஏற்று ஒரு குலத்தோர் ஆயினர். சைவஞ்சார்ந்து சிவனை வழிபட்டோர் தங்களின் மெய்ந்நெறியை உலகமெங்கும் பரப்ப முன்வந்தனர். அது குமரி தொட்டுக் காஷ்மீரம் வரை—ஏன்? ஆப்கானிஸ்தானம் வரையிலுங்கூடப் பரவியது. காஷ்மீர மன்னர் உள்படக் காஷ்மீரத்தில் வாழும் பல்வேறு இனத்தவர்களும் சைவத்தைத் தழுவினர்; இலங்கையில் உள்ள நாகர்களும் தழுவினர். ஆரியர்கள் அரக்கர்கள் என்று கூறும் இராவணனும் அவன் மனைவி மண்டோதரியும் சைவந்தழுவிச் சிவனை வழிபட்டு வந்தனர்.

"ஏர்தரும்ஏ ழுலகேத்த எவ்வுருவுந் தன்னுருவாய்,
ஆர்கலிசூழ் தென்னிலங்கை அழகமர்வண் டோதரிக்குப்
பேர்அருள்இன் பம்அளித்த பெருந்துறைமே யபிரானை."
(திருவாசகம்)

என்று திருவாசகத்தில் மணிவாசகப் பெருமானும், திருவாலவாய்த் திருநீற்றுப் பதிகத்தில்,

"இராவணன் மேலது நீறு எண்ணத்தகுவது நீறு"
(திருநீற்றுப்பதிகம் 8)

என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் கூறியிருப்பது ஆராய்த்தக்கது. இதற்கு உரைகண்ட அறிஞர்கள் திரிலோகசஞ்சாரியாகிய இராவணன் தனக்கு வாய்த்த செல்வப்

பெருக்கத்தை மதித்துத் திருநீற்றை யவமதிக்காமல், அதை உடம்பில் அணிந்து சிவபிரான் அருளைப் பெற்றான் என்று கூறியுள்ளார்கள்.

மேலும், இராவணன் சிவலிங்கத்தை வைத்தும் பூசை செய்து வந்தான் என்று தெரிகிறது. சிற்பத்துறையைப் பற்றி நன்கு ஆராய்ந்த அறிஞர் திரு. கோபிநாத ராவ் அவர்கள் தம் நூலில், இராவணன் செல்லும் இடங்களுக் கெல்லாம் சுவர்ணலிங்கத்தை எடுத்துச் சென்றான் என்றும் அவன் காலந் தவறாமல் இலிங்க பூசை புரிந்து வந்தான் என்றுங் கூறியுள்ளார்கள்.*

இவற்றால், தமிழர் கண்ட சைவநெறி தமிழகத்திலே பிறந்ததென்றாலும் அதைத் தமிழகத்திலே வைத்துப் போற்ற வேண்டும் என்றும் அது தமிழ் நாட்டிலேயுள்ள வேளாளர்களின் தனியுடைமை என்றும் இன்று, எண்ணு வது போல் முன்னர் யாரும் எண்ணவில்லை என்பது புல னாகின்றது.

"தென்னா டுடைய சிவனே போற்றி
என்னாட் டவர்க்கு இறைவா போற்றி"

என்று கூறும் திருவாசக உண்மைக்கேற்ப மிகத் தொன் மையான காலத்தில் கடல் கடந்து சென்று இலங்கையிலுள்ள நாகர் இனத்தவர்களுக்கும் பிறருக்கும் சிவ நெறியைப் போதித்துச் சைவந் தழையச்செய்திருக்கின்றனர் என்பதை எடுத்துக் காட்டவே இங்கு இராவணன் வரலாற்றை எடுத்துக் காட்டியுள்ளோம். தமிழர் கண்ட நெறியென் றாலும் இலங்கையிலுள்ள நாகர்கள் சிவபெருமானுக்கு அடியவராகி அவரை இந்த ஊனக்கண்ணால் காணும்

*Element of Hindu Iconography — by Gobinatha Rao.

பாக்கியம் பெற்றிருக்கின்றார்கள். சமய குரவர்களால் போற்றப்பெறும் பாக்கியம் பெற்றுள்ளார்கள். நாகர்கள் — ஏன்? அரக்கர்கள் என்று நம் பகைவர்களால் கூறப்படுபவர்கள் தமிழர்களைவிடச் சிவனுக்கு உற்றவர்களாய் இருந்தனர் என்பதற்கும் எண்ணற்ற சான்றுகள் உண்டு.

தெய்வப்புலவர் சேக்கிழார் என்று சைவர்கள் போற்றிப் புகழும் பேரறிஞர்,

"மூவேந்தர் தமிழ்வழங்கும் நாட்டிற் கப்பால்
முதல்வனார் அடிசேர்ந்த முறைமை யோரும்"

என்று கூறும் பொன்மொழி கொண்டு சைவம் பரந்த வழி நின்று அருள் தொண்டு ஆற்றிவரவேண்டும் என்றும், அதுவே சைவர்களின் முதல் வேலை என்றும், பன்னூறு ஆண்டுகட்கு முன்பே தமிழர்கள் அறிந்திருந்தனர். தமிழ் நாட்டுச் சைவப் பெரியார்கள் 1000 ஆண்டுகளுக்கு முன்பே,

"ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே"

"நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"

என்றும் முழக்கி வந்துள்ளனர். மேலும், சைவநெறியை உலகமெங்கும் பரப்பவேண்டும் என்றும், அதுவே சைவர்கள் ஒவ்வொருவரும் செய்யவேண்டிய கடமை என்றும் சைவ சமய குரவர்கள் ஆணையிட்டுச் சென்றனர். பிற சமயத்தவரைச் சைவத்தில் சேர்த்துக்கொள்வதற்குச் சைவசமய சாத்திரம் முரண்படவில்லை. சைவநெறியைத் தமிழகத்தில் மறுமலர்ச்சியடையச்செய்த அப்பர் சுவாமிகளே சமண சமயத்தினின்று சைவந்தழுவியவராவார். அதோடு, மகேந்திரவர்ம பல்லவன் என்னும் சமண மன்னனையும் சைவந் தழுவச் செய்தார். அவனால் சைவத்தை உயர்த்தத் தூண்டி

னார்; எண்ணற்ற கற்கோயில்களை எழுப்பத் தூண்டினார். பல பௌத்தர்களையும் சமணர்களையும் சைவநெறிக்கு அழைத்துவந்தார். திருஞானசம்பந்தப்பெருமான் கூன் பாண்டியனையும் பிற லட்சோப லட்சம் மக்களையும் சமண சமயத்தைத் துறந்து சைவந்தழுவச் செய்தார். சைவம் ஒரு தேங்கிக் கிடக்கும் குட்டை அன்று. அது நல்ல நீரோட்டமுள்ள சுனையாகும். அது மக்களின் அறிவுத் தாகத்தைத் தீர்க்கும் குளிர்ந்த புனிதமான தண்ணீராகும். அது பண்டைக்காலத்திலே ஓர் அனைத்துலக மதமாய் விளங்கியது. அது பௌத்த மதம்போன்று கடல்கடந்து சென்று உலக மக்களையெல்லாம் தன் பக்கம் அழைத்து வந்தது.

சைவம் ஓர் அனைத்துலக நெறி. இன்றைய புரொட்டஸ்டண்டு மதம்போல் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவிலும் வெளிநாட்டிலும் பரப்பப்பட்டு வந்தது. சைவத்தை உலகமெங்கும் பரப்பப் பல மன்னர்களும் குரு மார்களும் முன்வந்தனர். சைவசமயப் பெரியார்கள் சைவத்தை உலகமெங்கும் பரப்பவேண்டும் என்று சைவ மக்களுக்கு ஆணையிட்டனர்.

"சைவம் அருணெறி. அருளாளர்களே! உலகை உற்று நோக்குங்கள்; உலகில் எந்நெறி பெருகி இருக்கிறது; அருணெறியா? மருணெறியா? உன்னுங்கள்! கொலைச் சாலைகளின் பெருக்கை என்னென்று கூறுவது! கொலைக் கருவிச் சாலைகளின் பெருக்கை என்னென்று கூறுவது! அந்தோ! உள்ளம் நடுக்குறுகிறது! இக்கொலைப் பெருக் கிற்குக் காரணர் யாவர்?... சீவகாருண்யத்தை மூலதர்ம மாக்க் கொண்டுள்ள சைவர்களாகிய நீங்களல்லவா?...சைவர் களே! உங்கள் சமயம் யாது? நீரில் மூழ்குவதா? நீத்தம்

கித்தம் துணி தோய்ப்பதா? நீறிடுவதா? அனுட்டானஞ் செய்வதா? கோயில் வலம் வருவதா? அன்று; அன்று. இவை யாவும் புறவொழுக்கங்களாகும். சீவகாருண்ய நெறியே உங்கள் நெறி. அஃதில்லையேல், குளித்தலும் பூசனையும் பிறவும் என்னும்? நீங்கள் உங்கள் அருள் தொண்டை ஆற்றி இருப்பின் உலகில் உயிர்க்கொலை நிகழுமா? புலைப் புசிப்பு நிகழுமா? உயிர்க்கொலையும் புலைப் புசிப்பும் மடங்களையுந் தீண்டுமளவு பரவியிருப்பதைக் கவனிக்கின்றீர்களா? சைவ உலகின் கவலையீனமென்னே! என்னே! இனி அருள் உலகம் மறையுமோ என்னும் அச்சம் உண்டாகிறது. உங்கள் ஒற்றுமை இன்மை, உழைப்பின்மை சித்தாந்த ஞானத்தை உலகுக்கு அறிவுறுத்த முன் வராத 'தன்னலம்' உலகைத் துன்புறுத்துகின்றன. "நஞ்சமயம் தமிழர்க்கே உரித்து—அது தமிழ் நாட்டௌவிலே கட்டுப்பட்டுக் கிடத்தல்வேண்டும்" என்னும் குறுகிய நோக்கத்தை உதறித்தள்ளுங்கள்; நாற்பக்கங்களிலும் அருணெறியோம்ப முயலுங்கள். பரந்த நோக்குடைய ஒரு கொள்கையை—மன்பதைக்குரிய ஒரு சமயத்தைப் பிறர்க்குப் பயன்படுத்தாது அதைச் சிறைப்படுத்துவதும் சிறுமைப் படுத்துவதும் அறமாமோ? எத்துணையோ உயிர்கள் அருளுணர்வு பெறுவதை மறிப்பது மறச்செயலன்றோ? அதனினும் வன்கண்—கொடுமை—கொலை—வேறொன்றுண்டோ? தானத்திற் சிறந்த தானம் எது? ஞான தானமன்றோ? அதையா தடுப்பது? ஆண்டவன் அருள் அமுதைப் பருகச் 'சேரவாருஞ் செகத்தீரே' என்று உங்கள் ஆன்றோர் உலகை நோக்கிக் கூவி அழைத்திருப்பதைக் கருதுங்கள்....

................................................................................

................உங்களுக்கு என்ன இல்லை? அறிவு நூல்கள் இல்லையா? அன்பு நூல்கள் இல்லையா? அருணூல்க

வில்லையா? எல்லாம் உண்டு. வேண்டற்பாலது எழுச்சியே. நெருப்பிடை நின்ற ஞானசம்பந்தரை நினையுங்கள்; நீற்றறையில் கிடந்து கடலில் மிதந்த நாவரையரை நினையுங்கள்; ஆண்டவனைத் தூதுகொண்ட ஆண்டகையை நினையுங்கள்; ஐயனை மண் சுமப்பித்த அன்பரை நினையுங்கள். நினைந்து நினைந்து ஊக்கங்கொள்ளுங்கள். நீலகண்டர் உறுதியும், இயற்பகையின் ஈகையும், மெய்ப்பொருளின் பொறுமையும், கண்ணப்பரின் கனிவும், மங்கையர்க்கரசியின் வீரமும் எங்கே போய்விட்டன? பிறர்க்குழைக்க நீங்கள் புறப்பட்டால் இம் மாண்புகளெல்லாம் உங்களிடத்தில் பொங்கியெழும் என்பது திண்ணம். மெய்கண்ட சாத்திரம் என்னும் ஞானவாள் இருக்கும்பொழுது உங்களுக்கென்ன அச்சம்? ............

..........................................................

அருளுலகம் உங்களை அழைக்கிறது, செவி சாயுங்கள். அன்புளங்கொண்டு எழுங்கள். தொண்டாற்றப் புறப்படுங்கள். வித்தகம் பேசவேண்டா; பணிசெய்யப் புறப்படுங்கள். உங்கள் அருணெறி உலகெலாம் பரவப்போவது உண்மை. மேல் நாடும் கீழ் நாடும் ஒன்றுபட்டு ஈனப்போகும் உலகு உங்கள் அருணெறியையே தழுவும். அந் நெறியே அவ்வுலகிற்குரிய நெறியாகும். ஆதலால், அந் நெறி வளர்க்க எழுங்கள்; எழுங்கள்.'' *

என்ற ஒலி தமிழ் நாட்டில் மேற்றும் ஒலித்தது; ஆனால், பண்டு ஒலித்த ஒலியின் எதிரொலியே இது. பண்டைய தமிழர்களின் அறவுரை கேட்டுத் தமிழ்நாட்டு வாலிபர்கள் விழிப்புற்றெழுந்தனர். சைவநெறியை வெளி நாட்டில் பரப்ப முன்வந்தனர். ஆண்களும் பெண்களும்

*சைவத்தின் சமரசம். திரு. வி. கலியாணசுந்தர முதலியார் (சென்னை. 1930) பக். 112, 115

சமயப்பிரசாரஞ்செய்யப் புறப்பட்டார்கள். நூற்றுக்கணக்கான தொண்டர்கள் மலேயா, கம்போசகம், சாவகம், பாலி போர்னியோ, சமபா முதலிய தீவுகளுக்கெல்லாம் சென்று மாதக்கணக்காய்க் கப்பல் ஏறி இன்னல் பல அனுபவித்துச் சென்று அங்கு லட்சோப லட்சம் மக்களைச் சைவந்தழுவச் செய்தனர். கடல்தொட்டு மலை வரை எங்கும் சிவன் பெயரை ஒலிக்கச் செய்தனர். அன்பு நெறியைப் பரப்பினர். மலைகளிலும் காடுகளிலும் கடற்கரைகளிலும் ஒப்பற்ற சிவாலயங்களை எழுப்பினர். எங்கும் தேவாரம் திருவாசகம் பண்ணோடு ஒலிக்கச் செய்தனர். தமிழ்க்கலைகளும் பண்பாடும் நாகரிகமும், ஒழுக்கமும் பரவச் செய்தனர்.

உலகிலுள்ள ஒப்பற்ற கலைமேதைகளின் உள்ளங்களைக் கவர்ந்து அவர்களின் போற்றுதலுக்கு உரித்தான சாவக நாட்டுக் கோயில்களும், சிற்பவடிவங்களும், ஓவியங்களும், நாட்டியங்களும் வழிபாட்டு முறைகளும் பாரதநாட்டினின்று சென்றவைகள் என்பதை மறுப்பார் எவரும் இல்லை. இங்குள்ள சிற்பங்களும், தெய்வங்களும் பூசை முறைகளும் பௌத்த மத நூல்களிலும் சுமார்த்த மத சம்பிரதாயங்களிலும் சைவமத நூல்களிலும் நன்கு காணப்படுவனவாக மிளிர்கின்றன. போரோபுதூர் கோயிலையும் சிற்ப வடிவங்களையும் உற்று நோக்கும் பொழுது இதை உருவாக்கிய சிற்பிகள் திராவிட நாட்டுக் கம்மாளர்களே என்று நன்கு தெரிகிறது. இவர்கள் அந்நாட்டில் குடியேறி அந்நாட்டுமக்களோடு இரண்டறக் கலந்து விட்டனர். அவர்கள் நிர்மாணித்த கோயில்களும் அவர்கள் செதுக்கிய சிலைகளும் படிமங்களும் சிற்ப இலக்கணங்களும், அலங்காரத் தன்மைகளும், அமைப்பு முறைகளும் தென் இந்திய முறைகளை — திராவிட முறைகளைப் பெரும்பாலும் ஒத்திருக்கின்றன என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை.

சாவக நாட்டில் தோன்றிய நமது கலைச் சின்னங்களை இயற்கை தன் வன்செயலால் அடியோடு அழித்துவிடவில்லை. அவைகளைக் கண்டுபிடித்து ஆராய்ந்து அதன் சிறப்பை உலகிற்கு உணர்த்திய பெருமை சர். ஸ்டாம்போர் ராபின்ஸ் என்னும் அறிஞர்க்கே உரியதாகும்.

சாவகநாட்டில் எழுந்த அரசியல் போராட்டத்தினாலும், போர்களினாலும் நாடு நகரங்கள் எல்லாம் காடாகிக் கலைக் கருவூலங்கள் எல்லாம் மக்கள் காணமுடியாத இடங்களாக மாறிவிட்டன. கலைக் கருவூலங்கள் மண்மேடிட்டு மரஞ்செடி கொடிகள் நிறைந்து புதர்கள் நிறைந்த புலிக்குகைகளாய்ப், பாம்பும், நரியும் வாழும் இடங்களாய் மாறிவிட்டன. காற்றினாலும் மழையினாலும் பல பகுதிகள் சரிந்து வீழ்ந்து கிடந்தன.

அவைகளை யெல்லாம் சர். ஸ்டாம்போர் ராபின்ஸ் மிகச் சிரமப்பட்டுக் கண்டுபிடித்து அவைகள் அழிந்து சிதைந்து விடாது பாதுகாத்து உலகின் அற்புதமான கலைப்பண்டாரம் சாவகத்தில் உள்ளது என்று உலகிற்கு உணர்த்தி உலக மேதைகள் எல்லாம் வந்து கண்டுகளிக்கும் கலைக்கோயிலாக விளம்பரப்படுத்தியதற்கு நாம் அவருக்குப் பெரிதும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளோம். இவரது சீரிய முயற்சி வெற்றி பெற்றுப் பல்லாண்டுகள் கடந்த பின்னரே அரசாங்கம் அக்கறை செலுத்த முன் வந்தது. அப்பால் தான் அரசாங்கம் தொன்மை வாய்ந்த பொருள்களையும் நினைவுச் சின்னங்களையும் பாதுகாக்க வேண்டும் என்ற சட்டம் இயற்றவும் முன் வந்தது. சாவக நாட்டில் அன்றிருந்தது உலாந்தா அரசாங்கம். இப்பொழுது இருப்பது இசுலாமிய அரசாங்கம். அதனால் இந்துக் கோயில்களையும் தெய்வீக உருவங்களையும் பாதுகாப்பதற்கு அதிகமான அக்கறைகாட்ட முடியவில்லை. சாவகநாட்டில் காடு சூழ்ந்த

பகுதிகளில் பல பௌத்தப் பள்ளிகளும், சைவத் திருக் கோயில்களும் இடிந்து சிதைந்து கிடக்கின்றன.

இங்குள்ள பல அரிய சிற்ப வடிவங்களும், சிலைகளும் படிமங்களும், சாசனங்களும் முன்னர் ஆட்சி புரிந்த வெள்ளையர்களின் அரசாங்கம் மேனாடுகளுக்கு எடுத்துச் செல்ல அனுமதித்துள்ளது. அதனால் சாவக நாட்டுக்கலைக் கருவூலங்கள் உலாந்தா, பிரான்சு, இங்கிலாந்து, ஜெர்மனி அமெரிக்கா முதலிய நாடுகளில் உள்ள தொல் பொருள் காட்சிச் சாலைகளிலும் பணம் படைத்த வெள்ளை முத லாளிகள் பலரின் இல்லங்களிலும் காட்சிப் பொருளாக இன்று திகழ்ந்து வருகின்றன.

பொதுவாக இந்தியர்களும் சிறப்பாகத் திராவிடப் பெருங் குடிமக்களும், சாவகநாட்டிற்குச் சென்று தங்களின் கலைகளும், சமயங்களும் மக்களும் அங்குச் சாதித்ததென்ன? அங்கு வாழ்ந்த நம்முடைய மக்கள் அங்கு எந்நிலையில் இன்றுள்ளனர்? இறுதியில் அவர்களும் அவர்களின் சமயங்களும், கலைகளும் என்ன ஆயிற்று என்று அங்குப் போய்ப் பார்க்கவோ ஆராயவோ வேண்டும் என்ற எண்ணம் இதுவரை தோன்றவில்லை. ஆனால் நாம் அங்குப் போய் ஆராய்ந்தால் பல புதுமைகளைக் காணமுடியும். அங்குப் பல மேனாட்டறிஞர்கள் போய்ப் பல அரிய வரலாற்றுண்மைகளை ஆராய்ந்து வெளியிட்டிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் அறிவிற்குப் புலப்படாத கண்ணிற்குத் தெரியாத எண்ணற்ற புதுமைகளை நாம் அங்குச் சென்றால் காண முடியும்.

இந்தோ-சாவக நாகரிகம் இங்கு ஏழாம் நூற்றாண்டோடு இணைந்து ஐக்கியப்பட்டு இருந்தது. ஆனால் அதிகார பூர்வமான சமயக் கோட்பாட்டு முறை தமிழக மூலத்

தோற்றத்தையுடையதாக இருக்கிறது. மக்களின் உண்மையான நம்பிக்கையும் அந்த அடிப்படையிலே இருந்தது. இன்றும் அந்த அடிப்படை நிலவுகிறது; சாவகமக்களிடையே பரவலாகக் காணக்கிடக்கும் ஆன்மீகக் கோட்பாட்டிலும் சமயச் சடங்குகளிலும் தமிழகத்தின் சாயல் காணப் படுகிறது. சாவக அரசாங்கத்தின் புரோகிதமுறை தொன்று தொட்டே பெரிதும் செல்வாக்குப் பெற்றிருந்தது; என்றாலும் சைவநெறியை விலக்கித்தள்ள முடியாமல் இருந்தது. அரசாங்கம் புரோகித நெறியைப் பெரிதும் போற்றிவந்ததைக் கண்டு சில மேனாட்டு அறிஞர்கள் சாவகத்தில் பிராமணீயம் (Brahmanism) கால் கொண்டிருந்தது என்று எழுதியுள்ளனர். இதை எண்ணி இந்திய எழுத்தாளர்கள், சிறப்பாக, பிராமணீய உள்ளம் பெற்றவர்கள் சாவகத்தில் பிராமணீயம் அஃதாவது சுமார்த்த மதம் பரவி இருந்தது என்று திரித்துக் கூறிவந்துள்ளனர். இந்தியாவில், பௌத்தமும் சமணமும் அரசாங்க மதங்களாய்ச் செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தில் அதை எதிர்க்கச் சைவர்களும், சுமார்த்தர்களும் கூட்டணி நிறுவி இந்துமதம் என்ற பெயரில் பௌத்த மதத்தையும், சமண சமயத்தையும் அழித்தொழித்தனர். அதன்பலனாக இருசமயக் கொள்கைகளும் தெய்வங்களும் பேரளவில் இணைக்கப்பட்டன. ஆனால் சுமார்த்தம் இந்துமதப் போர்வையில் வலுப் பெற்றுப் பிராமணீய மதமாய்த் தலைதூக்க ஆரம்பித்தது. சுமார்த்தம், கூட இருந்து குரல்வளையைப் பிடித்து நெருக்கிக்கொல்ல முயன்றது. என்றாலும் தென்இந்தியாவில் சைவத்தை ஓரளவு தாழ்த்தினாலும் முழுவதும் வீழ்த்திவிடவில்லை. சைவம் இன்று தலைநிமிர்ந்து தமிழர்களின் தேசீய நெறியாய் இன்றும் ஒளிவீசி விளங்க ஆரம்பித்துள்ளது. அஃது இந்துமதப் போர்வையையும் பிராமணீய இருட்

புகையையும் விலக்கிக்கொண்டு ஒளிவீசும் நிலையை அணுகி யுள்ளது. இந்தியாவில் ஏற்பட்டுள்ள இந்தநிலை சாவகத் திலும் பிரதிபலித்தது என்பதை அறிஞர்கள் உணர்ந் துள்ளார்கள்.

சாவகத்தில் மகாயான பௌத்த நெறியே நிலவியது. ஹீனயான பௌத்த நெறி நிலவியதாக நமக்கு எவ்விதச் சான்றும் கிட்டவில்லை. மகாயானம், மத்திப சாவகத்தில் சுமத்திரேயர் ஆட்சிக்காலத்தில், ஒருதனித்த, முழுமையான முக்கிய சமயக்கோட்பாடாக மிளிர்ந்தது. இப்பொழுதும் கூட ஒரு தாந்திரீகப் பண்பு நிறைந்ததாய் நேப்பாளம் கம்போசகம் பாலி முதலிய நாடுகளில் பௌத்த சமயமும் சைவநெறியும் முரண்பாடு இன்றி மோதுதல் இன்றிப் பிரிக்கமுடியாததாய்ப் பிணைந்து ஒளிர்கின்றன: கிர்ட்டங்காராவில் சிவபுத்தா என்ற பிற்காலத்தில் எழுந்த ஒரு பெயரைப் பெற்று விட்டது. 8 அல்லது 9 ஆம் நூற்றுண்டில் டியெங் (திஹியாங்-Dihyang) மண்மேட்டில் எழுந்துள்ள சிவனது சிலைகளும் கவினுறு கட்டிடத்தில் எஞ்சிநிற்கும் பகுதிகளும், சாவகத்தில் முதன்முதலாகத் துளிர்த்த கற்பணியாலான கட்டிடங்களாகும். அவை மேற்குச் சாவகத்தில் எழுந்த முறைகளிலிருந்து அபிவிருத்தி செய்யப்பட்டதாயிருப்பினும் அதில் ஒன்றும் இன்று இருப்பதாகத் தெரியவில்லை. அல்லது புதுப்பிக்கப்பட்டதாகவும் தெரியவில்லை. அத னுடைய கட்டிடக்கலை அமைப்புமுறை இந்தியாவில் உள்ள திராவிடக் கட்டிடமுறையைத் தழுவியதாகவே காணப் படுகிறது. கட்டிட அமைப்பும், அலங்கார வேலைப்பாடுகளும் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன. அவை நிறைவான சம்பந்தங்களைப் பெற்று விளங்குகின்றன. என்றுலும் இந்தக் கலைக்களஞ்சியம் இந்தியத் தாயகத்தில் உள்ள நினைவுச்

சின்னங்களைப் போன்றது என்று கருத முடிவதில்லை. அவை சாவகச்சாயலைவிட அதிகமான இந்தியச் சாயலை யுடையன என்று ஒருபொழுதும் கூறமுடியாது. ஆனால் அந்த இடத்துக்குரிய ஆக்கக்கூறு வெறும் காட்சி மாத்திரமேயாகும். அலங்கார வேலைப்பாடுகள் சில சுதந்திரமான அபிவிருத்திகளையுடையதாய் இருக்கிறது; ஆனால் அதனுடைய செயல் நோக்கத்தில் அல்லது மேற் பூச்சில் இல்லை என்று அறிஞர்களால் கருதப்படுகிறது.

## 6. சாண்டிகலசானும் - சாண்டிசரியும்

மேற்குச் சாவகத்தில், கிழக்குச் சாவகத்தில் உள்ள பெரம்பானன் போன்றும், மத்திய சாவகத்தில் உள்ள போரோபுதூர் போன்றும் பெரிய கோயில்கள் இல்லா விட்டாலும் அழகிய சிறிய கோயில்கள் பல உண்டு. இங்குச் சாண்டிகலசான், சாண்டிசரி, டியெங்மேடு போன்ற பழைய நினைவுச் சின்னங்களின் சிதைவுகள் இன்றும் காணப் படுகின்றன.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் தேவவர்மன் என்னும் அரசர் மேற்குச் சாவகத்தில் செங்கோலோச்சி வந்தார். 5 ஆம் நூற்றாண்டில் இங்கு ஆண்டுவந்த அரசர் பூரணவர்மன் என்பவர் ஒரு கால்வாயை வெட்டியதாக இங்குக் கிடைத்துள்ள வடமொழிக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது.

பதினாறும் நூற்றாண்டில் போர்த்துக்கேசியர் சாவகம் புகுந்து நாட்டை அடிமைப்படுத்திச் சுரண்ட ஆரம்பித்தனர். ஆனால் அவர்களுக்குப் போட்டியாக வந்த உலாந்தாக்காரர் (டச்சுக்காரர்)களிடம் அவர்களின் ஆணவம் தலைதூக்க முடியவில்லை. 1602 ஆம் ஆண்டில் டச்சுக் கிழக்கிந்திய கும்பினி ஆட்சி இங்கு நன்றாக வேரிட்டுக் கொண்டது. சாவாவிலுள்ள ஜகார்ட்டாவைப், படேவி என்று பெயர் மாற்றி, அதைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிநடத்தியது. 1811 இல் ஒரு பிரிட்டிஷ் கடற்படை இந்தியாவினின்று சாவகம்போய் அதைக் கைப்பற்றியது. ஆனால் மீண்டும் 1815இல் டச்சுக்காரரிடம் ஒப்படைத்தது. 1942இல் சாவகம்

முழுவதும் சப்பானியர் வசமாயிற்று. அப்பால் இந்தியாவின் சுதந்திர எழுச்சியின் விளைவாக, 1950 ஆம் ஆண்டில் இந்தோனேஷியா சுதந்திரக் குடியரசாகப் பரிணமித்தது. இந்த அரசாங்கத்தில் பத்துமாகாணங்கள் அஃதாவது (1) மத்திய சாவகம், (2) கிழக்குச் சாவகம் (3) மேற்குச் சாவகம் (4) வடக்குச் சுமத்திரா (5) மத்திய சுமத்திரா, (6) தெற்குச் சுமத்திரா, (7) போர்னியோ, (8) செலிபீஸ், (9) மொலக்கஸ், சிறுசண்டாத்தீவுகள் ஆகியவைகள் அடங்கியுள்ளன.

கிறித்துவ சகாப்தம் துளிர்ப்பதற்கு முன்னரே மேற்குச் சாவகத்தில் தமிழர் குடியேற்றம் ஆரம்பித்து விட்டது. இங்குத் தருமனின் பழைய இந்து ஆட்சியும், பூரணவர்மன் என்னும் அரசன் ஆட்சியும் நிலவியது. இதை அங்குப் பல்லவ கிரந்த எழுத்தில் எழுதப் பெற்ற வடமொழிச் சாசனங்கள் உறுதிப்படுத்துகின்றன. இந்தச் சாசனங்கள் கி. பி. நான்காவது அல்லது ஐந்தாவது நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது. மேற்குச் சாவகத்தில் இந்து ஆட்சி ஆறுவது நூற்றாண்டிற்கு முன்னரே ஆரம்பமாய் விட்டது என்று கூறத்தக்க சான்றுகள் பல உள. பின்னர் மேற்குச் சாவகம் சுதந்திரமான சுதேச ஆட்சியின்கீழ் இருந்ததாகத் தெரிகிறது; மசாபாகித் மன்னர்கள் ஆட்சியும் கூடப் பிந்தியதாகவே தெரிகிறது.

சாவகத்தில் பௌத்தர்கள் ஆட்சியில் பௌத்த நெறியும் பௌத்தப் பண்பாடும் பாலிமொழியும் பரவி நின்றன. சைவர்கள் ஆட்சியில் சைவநெறியும் (சிவ நெறியும்) தமிழ் மொழியும் தமிழகச் சிற்பமும், தமிழகப் பண்பாடும் மக்களைக் கவர்ந்து நின்றன. அப்பால் இஸ்லாமியர் ஆட்சியும் அரபுமொழியும், அராபியர்

பண்பாடும் எழுந்தன. அப்பால் உலாந்தாக்காரர் ஆட்சியும் கிறித்துவ சமயமும் ஆங்கிலமும், ஐரோப்பிய நாகரிகமும் பரவின. இறுதியாக இந்தோனேசியா சுதந்திரக் குடியரசாக மலர்ந்து தனது நாட்டின் பழைய பண்பாட்டின் அடிப்படையில் ஒரு புதிய கலாச்சார அடியில் வளர இருந்தது. ஆனால் துரதிஷ்டவசமாக அந்நாட்டில் எழுந்த அரசியல் கட்சிகளின் எழுச்சியின் பயனாகச் சாவக நாட்டில் சமாதானம் குலைந்து போரும் புரட்சியும், பொறாமையும் பூசலும் அண்டைநாடுகளோடு பகையும் வளர்ந்துவந்தன. ஆனால் 1966 ஆம் ஆண்டின் நடுவில் எழுந்த அரசியல் எழுச்சி சாவகத்தில் அமைதியும், மகிழ்ச்சியும் நிலவச் செய்யும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

ஏழாவது நூற்றாண்டில் மத்திய சாவகத்தில் இந்தியக் கலைகள் தலைதூக்கி நின்றன என்பதற்கு எண்ணற்ற உறுதியான சான்றுகள் உள்ளன. இந்தக் கலை வளர்ச்சிகள் தமிழகத்தினின்று தொடர்ந்து அலைஅலையாய் எழுந்து வந்த புதிய குடியேற்றத்தின் பயனாக இருக்கலாம் என்று எண்ணப்படுகிறது. கி. பி. 732ஆம் ஆண்டு கெடு (Kedu) வில் சங்கால என்னும் பழைய சாசனம் ஒன்று கிடைத்துள்ளது. அதில் வடஇந்தியாவிலிருந்து வந்து குடியேறியவர்கள் குஞ்சரகுஞ்ச நாட்டைச் சார்ந்தவர்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதைக்கொண்டு இஃது ஆரியர் குடியேற்றம் என்று சிலர் குறிப்பிடுகின்றனர். இது மிகத் தவறான கருத்து ஆகும். அங்குக் குடியேறியவர்கள் வட இந்தியரேயாயினும் அவர்கள் திராவிடர்கள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. தெளிவாகக் கூறுவதானால் தமிழர்களின் நெருங்கிய சம்பந்தமுடையவர்கள் என்று கூறக்கூடும். ஏனெனில் அங்கு அகத்திய

முனிவரின் வழிபாட்டுமுறை நனகு நிலவி இருந்ததாகத் தெரிகிறது. அகத்தியன் ஆரியன் என்று சிலர் கூறிக் கொண்டாலும் அவன் சிவனை வழிபட்டுவந்தவன்; தமிழ் வளர்த்தவன்; தமிழகத்தில் உள்ள பொதிகை மலையில் வாழ்ந்தவன்; தமிழ்முனிவன் என்று தமிழ் இலக்கியங்கள் புகழ்ந்தேத்தும் பேறு பெற்றவன் என்பது மறுக்கமுடியா உண்மையாகும். மேலும் அங்குக் கிடைத்த சாசனங்களில், குஞ்சாரகுஞ்சநாட்டினின்று குடியேறியவர் தங்கள் நாட்டினின்று ஓர் அற்புதமான ஒளி வீசும் அரிய சிவலிங்கத்தைக் கொண்டுவந்தனர் என்ற குறிப்புக்கள் காணப்படுகின்றன. சிவலிங்க வழிபாடு தமிழர்க்கு உரியது. சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே திராவிடர்கள் சிவலிங்க வழிபாடு உடையவர்கள் என்பதை மொகஞ்சதாரோவில் கண்டெடுக்கப்பட்ட சிவலிங்க உருவங்கள் உறுதிப்படுத்தியுள்ளன. ஆரியர்கள் தொன்றுதொட்டுச் சிவலிங்க வழிபாட்டை எதிர்த்து வந்தவர்கள். சிசினதேவர் வணக்கம் என்று இழித்துக் கூறி வந்தவர்கள் என்பதை எவரும் மறுத்துரைக்கார். எனவே, அகத்தியர் வழிபாடும், சிவலிங்க வழிபாடும் நிலவியதைக்கொண்டு அங்குக் குடியேறியவர்கள் தமிழர்கள் என்று ஏற்றுக்கொள்ளத் தயங்கினுலும் திராவிடர்கள் என்பதை நிச்சயம் ஏற்றுக்கொள்ளலாம்.

மேற்குச் சாவகத்தில் கண்டெடுக்கப்பெற்ற பல கல்வெட்டுக்கள் பல்லவ கிரந்த எழுத்துக்களில் பொறிக்கப்பட்டனவாய்க் காணப்படுகின்றன. இக்கல்வெட்டுக் கி. பி. 5 ஆம் நூற்ருண்டின் நடுப்பகுதியில் பொறிக்கப்பட்டிருக்கலாம் என்று எண்ணப்படுகிறது. இந்தக் காலத்தில் இங்குப் பூரணவர்மன் என்னும் மன்னன் சிவநெறியைப் பற்றி ஒழுகியவனுய் இருந்தான் என்று தெரிகிறது. இங்கு இவன் ஒரு பெரிய கால்வாயை வெட்டித்



பெரம்பானன் சிவன் கோயிலின் தரைப் படம்
(பக்கம 104 - பார்க்க)



பெரம்பானன் சிவன் கோயில்
(பக்கம் 109 - பார்க்க)

## சாண்டிக்கலசான் அல்லது காலிபெனிங்
## (Tjandi Kalasan or Kali Bening)

பெரம்பானன் சமவெளி என்று கூறப்படும் பழம்பெரும் இந்துமாநகரம் ஜோஜா (Djocja) விலிருந்து சோலோ வரை புகைவண்டிப் பாதையால் இருகூறுகப் பிரிக்கப்பட்டதாய் இன்று காணப்படுகிறது. பெரம்பானன் சமவெளியை ஒருவர் பார்க்கவிரும்பினுல் ஜோஜாவிலிருந்து முதலாவதாக மேற்கிலிருக்கும் சாண்டிக்கலசான் அழிபாடுகளைக் காணச் செல்ல வேண்டும். அது கலசான் வழிப்பாதை நிலையத்தி லிருந்து சிறிது தொலைவில் இருக்கிறது.

இந்த, அழிபாடுகளைப் பழம்பெரும் இந்துக் கட்டிடக் கலையாக உலகம் போற்றிவருகிறது. இந்த அழிபாடுகளின் எஞ்சிய ஒருபகுதியே இன்று கம்பீரமாகத் தலைதூக்கி நிற்கும் சாண்டிக்கலசான் என்னும் கலைக் கோயிலாகும். டியங் (Dieng) திருக்கோயில் சாண்டிக்கலசான் திருக் கோயிலைவிடச் சிறிது பழைமை வாய்ந்ததாகும் என்றுலும் டியங் திருக்கோயிலின் எந்தப் பகுதியும் எடுத்துக்காட்டத் தக்கதாய் இன்று காணப்படவில்லை. அதனெடு சாவகத் தில் அது எப்படித் தோன்றி அபிவிருத்தியடைந்தது என்றும் தெரியமுடியவில்லை. சாண்டிக்கலசான் திருக் கோயில் அழகுற எழுந்து அதன் திருப்பணி இறுதிவரை நிறைவேறியதாகத் தெரிகிறது. இந்தச் சாண்டிக்கலசான் திருக்கோயில் ஆண்டுள்ள திருக்கோயில்களில் அழகுற அமைந்துள்ளது என்றுமட்டும் சொல்வதற்கில்லை. மிக அழ குள்ளது என்றும் கூறத்தக்கது. சாவக நாட்டில் இந்துச் சிற்பிகள் கட்டிய கோயில்களில் சிறப்புடைய தொன்ருக மதிக்கத்தக்கதாகும். இது போரோபுதூர் கோயில் எழுவ

தற்குக் கால் நூற்றாண்டிற்குச் சிறிதுமுன்னர்—அஃதாவது எட்டாவது நூற்றாண்டின் இறுதியில் எழுந்ததாகும்.

இந்தத் திருக்கோயில் கிரேக்க பாணியில் அமைந் திருக்கிறது. இதில் முன்னே துருத்திக்கொண்டிருக்கும் கோணங்களும் பெரிய மத்திய மண்டபமும் நான்கு சிறிய அறைகளும் அழகுற அமைந்திருக்கின்றன. இவை பிரதான கோயில் மண்டபத்தோடு கிழக்குப்பக்கம் இணைந் திருக்கின்றன. எந்த அறையிலும் தெய்வத்திரு உருவங்கள் காணப்படவில்லை. இந்தக் கோயில் உபதளத்தின்மீது கட்டப்பட்டுள்ளது. அது கோயிலின் அடிப்பாகத்தையும் மாடியின் அழகையும் தாங்கி நிற்கிறது. இப்பொழுது உப தளத்தின் சிறிய பகுதிதான் காணப்படுகிறது. ஒரு பகுதி உடைந்துபோய் இருக்கிறது. ஒரு பகுதி மறைந்துவிட்டது; அடித்தளத்தின் சில பகுதிகள் கூடச் சரிந்து கிடக்கின்றன. பல நூற்றாண்டுகள் சென்றும் அடிப்பகுதி உயர்ந்ததாகவே இருக்கிறது. இந்த உபஅடித்தளம் கோயிலின் அடிப்பகுதி யாக இருபது சாய்வளவு (angled) உள்ளதாக இருக்கிறது.

உபஅடித்தளத்தின் பாழடைந்த வெளி விளிம்பு அகலத்தில் 4.60. எம் அளவுடையதாய்க் கோயிலைச்சுற்றி நடந்து வருவதற்கு ஏற்றதாய் அமைந்திருக்கிறது. அதனோடு அதற்குக் கைப்பிடிச் சுவரும் இருந்திருக்கிறது. பக்கத்திற்கு ஒன்றாக நாலு திசைகளிலும் படிக்கட்டுக்கள் அமைந்துள்ளன. இது திறந்த வெளிக்குச் சுற்றிச் செல்லு கிறது. திருக்கோயில் நான்கு வாயில்களையுடையது. ஒவ் வொன்றிலும் மாடிக்குச் செல்லும் படிகள் உண்டு. ஒவ்வொரு வாயில்மூலமாயும் பக்கத்திலுள்ள மண்டபத்திற் குச் செல்லமுடியும். கட்டிடத்தின் தெற்கு முகப்பு அணி வேலைகள் இன்னும் அழியாது நிலவுகின்றன. இருபக்கங்

களிலும் அலங்காரங்கள் சிறப்புடன் மிளிர்கின்றன. வாயிலில் இருசிறு மாடங்கள் உள்ளன. அதில் போதி சாத்தவர் உருவம் செதுக்கப்பட்டிருக்கிறது. பக்கங்களிலுள்ள பெரிய மாடங்களில் போதி சாத்தவரின் பெரிய உருவங்கள் உள்ளன. அதன் அடிப்பீடம் இன்னும் அழியாதிருக்கிறது.

கோபுரம் அழகுற அலங்கரிக்கப்பட்டுள்ளது. கட்டிடத்தில் தூணுக்கு மேலுள்ள பகுதியில் அலங்காரப்பூ வேலைப் பாடுகள் அற்புதமாக இருக்கின்றன. எழுதகம் (Cornice) வளைவுகளும், கம்பிகளும் இணைந்து கவின்பெறத் திகழ்கிறது. மேற்கூரையின் நிலைகள் மகுடஞ் சூட்டினாற்போன்று அழகிய ஸ்தூபியாய் இலங்குகிறது. இப்பொழுது அது மட்டும் கம்பீரமாய் நிலை கெடாது நிலைத்து நிற்கிறது. திருக்கோயிலின் உடம்பிலிருந்து தனிப்பட்டுக் கூரையிறை மூன்று மாடிகளுடன் தனித்து நிற்கிறது. அவற்றில் ஒன்று மற்றொன்றிலிருந்து பக்கத் தோற்றமுள்ள அடித்தளமும் ஒவ்வொன்றும் அதனதன் எழுதகத்தையுடையதாயும் இருக்கின்றது. அடிப்பகுதியை எடுத்துக்கொண்டால் மிகக் கீழுள்ள மாடிக்கட்டிடத்தின் இருபது சாய்வளவு அமைப்பும் (20 angled form) மாடங்களால் (Niches) அலங்கரிக்கப் பட்டதாயும் மாடத்தில் தியானபுத்தர்கள் தாமரை இலை ஆசனத்தின்மீது அமர்ந்திருப்பது போலவும் செய்யப் பட்டிருக்கிறது. இப்பொழுது அங்கே இந்தப் படிமங்களில் மூன்றுதான் காணப்படுகின்றன. இரண்டாவது மாடியில் கூரை எண்கோண அமைப்பு (Eight-angled form) உடைய தாய் இருக்கிறது. ஒவ்வொரு பக்கமும் ஒரு மாடம் உடைய தாய் ஒரு தியான புத்தரை உடையதாகவும் இருக்கிறது. மாடத்தில் இரண்டிலொன்றில் ஒரு நிற்கும் படிமம் (போதி சாத்தவர்?) செதுக்கப்பட்டிருக்கும். இங்கு இப்பொழுது ஒரு தியானபுத்தர் உருவம் மட்டுந்தான் காணப்படுகிறது.

உயர்ந்த உச்சியில் உள்ள மாடியில் மீண்டும் எட்டு மாடங்கள் உள. அதில் தியானபுத்தர் உருவங்கள் அமர்ந்த நிலையில் காணப்படுகின்றன. எல்லா மாடிகளும் டகோவின் மாலை களால் மகுடம்போல் செய்யப்பட்டுள்ளன. இஜ்ஜெர்மான் (Ijzerman) பணியால் இக்கோயில் மறுமலர்ச்சி பெற்றதாகக் காட்டப்படுகிறது.

கலசானுக்கும் பெரம்பானனுக்கும் இடையே பல்வேறு காலங்களில் பழைய நாகரி எழுத்தாலான கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்தக் கல்வெட்டுக்களில் (சாச னங்கள்) சக ஆண்டு 701இல் (779 A. D) தாரா என்னும் பௌத்த சமய தேவியைக் கௌரவிக்கும் பொருட்டுச் சைலேந்திர மரபில் உள்ள இளவரசன் ஒருவனால் இந்தக் கருவறை அமைக்கப்பட்டது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தக் கோயிலை அடுத்துப் பௌத்த குருமார்களுக்கு ஒரு விகாரத்தையும் அந்த இளவரசன் அமைத்துக்கொடுத்த தாகவும் அந்தச் சாசனத்தின் மூலம் தெரிகிறது.

சாண்டிக்கலசான் கருவறை சந்தேகத்திற்கு இடமின்றி இந்தச் சாசனத்தில் இடம் பெற்றிருக்கிறது என்று கூற முடியும். மேலும் தாராதேவிக்கு ஓர் ஆலயம் அர்ப்பணஞ் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் மிகத்துல்லியமாய் இதைப் பற்றிக் கூற அங்கு எவ்விதமான படிமமும் காணப்படவில்லை. என்றாலும் இந்தச் சாசனத்தில் கலசான் கிராமம் இந்தக் கோயிலுக்கு மானியமாக விடப்பட்டிருக்கிறது என்று தெரிகிறது. இன்னும் இன்றையக் கலசான் வரை ஆராய்ச்சி செய்யப்பட்டு முடிவாக அதே கலசானும் சாண்டிக் கலசானும் நமது ஆராய்ச்சிக்குரிய கருவறையின் அழிபாடுகளே என்று தெளிவாகக் கூறமுடியும். அதனோடு இந்தச் சாண்டிக்

கலசான் முற்றிலும் பௌத்தசார்புடைய கோயில் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

**சாண்டி சாரி** (Tjandi Sari)

சாண்டிக்கலசானிலிருந்து சிறிது தொலைவில் சாண்டி சாரி அமைந்திருக்கிறது. இதை ஒரு கோயில் என்று கூறுவதற்கில்லை. குடியிருக்கும் ஒரு வீடு போல் காணப்படுகிறது. இஃது ஒரு மாடி அமைந்த கட்டிடம். இதில் ஆறு அறைகள் உள்ளன. மூன்று அறைகள் கீழ் இடத்திலும் மூன்று அறைகள் மேலும் உள்ளன. மேல் உள்ள அறைகளின் தளம் மறைந்துபோய்விட்டது. கீழ்ப்பக்கத்தில் உட்புகும் வாயில் உள்ளது; அது கீழ் அறைகளின் நடுவிற்குச்செல்ல வழியாக இருக்கிறது. அது பக்கவாட்டில் உள்ள அறைகளோடு இணைந்து இரு சன்னல்களை யுடையதாய் இருக்கிறது. மாடிக்குச் செல்லும் வழி அழிந்துவிட்டது. இந்தக் கட்டிடத்திற்குக்கூட மேல் தளம் சுற்றிலும் இருந்துள்ளது. இதைப்பற்றிய ஆராய்வு தேவையில்லை. இந்த மேல் தளம் எப்பொழுதாவது முறையாக நிறுவப்பட்டதாகத் தெரியவில்லை.

மூன்று கீழ் அறைகளில் முந்திய பீடங்களின் பின்னால் உள்ள சுவர்களில் எல்லா தஸ்தாவேஜுகளும் காணப்படுகின்றன. இப்பொழுது அவையும் இடிந்து கிடக்கின்றன. அவை மாடங்களாகப் பெரும்பாலும் விளக்குகள் வைக்க உபயோகப்படுத்தப்பட்டுள்ளன. மேடைக்குச்செல்லும் வழி இப்பொழுது மறைந்து விட்டது. மேல் அறைகள் வசிக்கக் கூடிய அறைகள்போல் இருக்கின்றன. கீழ் அறைகள் தாம் சிலைகள் இருக்கும் பீடங்கள் உள்ள அறைகள்போல் காணப்படுகின்றன. அவை குடியிருக்கக்கூடிய வீடுகளாகக் காணப்படவில்லை.

மேல் அறைகளிலும் சன்னல்கள் காணப்படுகின்றன. சன்னல்களுக்குக் கதவுகளும் உள்ளன.

கிழக்கு முகப்பு ஒரு தலைவாயிலை உடையதாய் அமைக்கப்பட்டிருக்கிறது. அஃது இப்பொழுது அடியோடு அழிந்து விட்டது. தலைவாயிலுக்கும் நடு அறைக்கும் இடையேயுள்ள கடைவாயில் இப்பொழுது உட்புகும் வழியாக இருந்து வருகிறது. கண்பார்வைக்குக் கட்டிடம் இரண்டாவது மாடி உடையதுபோல் காணப்படுகிறது. ஆனால் மாடியில்லை; கைப்பிடிச் சுவர்தான் உள்ளது. கைப்பிடிச்சுவரில் மாடங்கள் அலங்காரம் செய்யப்பட்டு இருக்கின்றன. முதல் மாடியின் புறத்தோற்றம் முடிந்ததுபோல் காணப்படுகிறது. இந்தச் சுவருக்குப்பின் கூரை பௌத்த டகோபாவால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. கைப்பிடிச்சுவரிலுள்ள மாடங்கள் டகோபாவின் கூடு துளைபோலக் காணப்படுகிறது.

சாண்டி சாரி நன்றாகப் பாதுகாக்கப்பட்ட கட்டிடங்களுள் ஒன்றாகக் காணப்படுகிறது. முற்காலத்தில் இதன் வெளிப்பகுதி மிகவும் நன்றாக அலங்கரிக்கப்பட்டிருந்ததாகத் தெரிகிறது. கைப்பிடிச் சுவரின் மீதுள்ள மாடங்களில் பெரும்பாலும் தியான புத்தர் இருக்கை அமைக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது மாடங்கள் எல்லாம் காலியாகக் கிடக்கின்றன. மேற்கூரைகள்கூட எஞ்சி இருக்கவில்லை. மேற்பூச்சு ஆதியில் வெளிறிய சிவப்பு நிறமாக இருந்தது என்று எஞ்சி நிற்கும் மேற்பூச்சுக்கள் உள்ள சில சிறிய சுவர்களைக்கொண்டு தீர்மானிக்க முடிகிறது.

இந்தக் கட்டிடம் பௌத்த விகாரையாக இருக்கலாம் என்று முடிவு செய்ய முயலப்பட்டது. அங்குக் கிடைத்த சாசனங்களும் அதற்குச் சான்றாகவே உள்ளன. துறவி

களின் தேவைக்காகவே இந்த விகாரை தாரா கோயிலைப்போல் அது கட்டப்பட்ட காலத்தில் கட்டப்பட்டது. உண்மையில் இந்தக் கருத்தை வலியுறுத்தச் சில செய்திகளைக் கூறவேண்டியதாக இருக்கிறது. சாண்டிசாரி கோயிலாக மட்டும் இருக்கவில்லை. ஒரு பகுதி குடியிருக்கும் இடமாகவும் இருந்தது. என்றாலும் இதைத் துறவிகள் வாழும் இடம் என்று கூறுவது முடியாத காரியமன்று 19 ஆம் நூற்றாண்டில் இதைப் புதைபொருள் ஆராய்ச்சித் துறை அறிஞர்கள் ஆராய்ந்து பார்த்தனர். அவர்கள் சாண்டிக்கலசானிலிருந்து 130 எம் தொலைவு வரைதான் சென்று பார்வையிட்டுள்ளனர். அவர்களில் பொறிவல்லுநர் எய்ச். சி. கொர்னோலிபஸ் இது துறவிகளின் விகாரையாக இருக்கலாம் என்று ஆராய்ந்து கூறினர். இதை மறுத்துரைப்பது கடினம். சாண்டிசாரியின் மேல் அறைகள் மூன்றும் தனித்தனி 35 சதுர எம் (Sq. m) அளவுள்ளது. இதை ஒரு சிறிய குடியிருப்பு அறையாகத்தான் கருத முடியும். இவை ஒரு சில துறவிகளுக்கு உறைவிடமாக இருக்கத்தான் தகுதியானவை. ஒரு வேளை கீழுள்ள இடத்தைக் கருவறையாகக் கருதமுடியும். மேல் தளத்தின் கருவறையில் பாதுகாவலர்கள் வசித்திருப்பது முடியாத காரியம். மேலும் சாண்டிசாரி கொர்னோலியஸ் பார்வையிட்ட இடங்களிலிருந்து மூன்று மடங்கு அதிகத் தொலைவில் உள்ளது. மேலும் அங்குள்ள பெரிய மண்டபம் துறவிகள் கூடும் இடமாகவும் இருந்திருக்கலாம்.

## சிவபெருமான்

இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள சிவபெருமானின் திரு உருவம் சாவகத்தின் வடக்கு எல்லைக்கு அருகில் உள்ள டெகால் (Tegal) என்னும் இடத்திற்குப் பக்கத்திலுள்ள ஆற்றில் கண்டெடுக்கப்பட்டது. இஃது அழகிய செப்புப் படிமம். இதன் உயரம் மூன்றடிக்குமேல் இருக்கும், கீழ் உதடும் மூன்று கண்களும் பொன்னாலானவை. இது கிட்டத்தட்ட நல்ல நிலையில் மிகவும் பாதுகாப்பாக வைக்கப் பட்டுள்ளது. பூமியின் அடியில் புதைக்கப்பட்ட பொருள் களைத் தேடி எடுக்கும்பொழுது இத்தகைய ஒரு பழுதற்ற அழகிய உருவம் கிடைப்பது பெரிதும் அபூர்வம். அதோடு இவ்வளவு பெரிய செப்புப் படிமம் கிடைப்பது அரிதினும் அரிதாகும். பொதுவாகச் சிறிய செப்புப் படிமம், அதிலும் உட்கார்ந்திருக்கும் கோலத்தில்தான் கிடைக்கும். பௌத்த சமயப் படிமங்களும், சிலைகளும் கிடைப்பது போல் சிவ னுடைய திருஉருவம் கிடைப்பது மிக அபூர்வம். இந்த அழகிய செப்புப் படிமம் 9 ஆம் நூற்றாண்டில் செய்யப்பட் டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

இத்திருஉருவம் தமிழகத்தில் வார்க்கப்பட்ட உருவம் போல் எழில் மிக வாய்ந்ததாய் இலங்குகிறது. தலையில் சடாமகுடம் போல் காணப்படவில்லை. மார்பில் பூணூலும், கழுத்திலும் காதிலும் அணிகலன்களும் அழகுடன் காணப் படுகின்றன. வலது புறமுள்ள பின் கையில் உடுக்கை காணப்படுகிறது. முன்பக்கமுள்ள கையில் இருக்கும் உருவம் புலப்படவில்லை. இடது பக்கம் இருக்கும் பின்புறக் கையில் நெருப்பு எரிவது போல் காணப்படுகிறது. முன்புறமுள்ள கையில் கமண்டலம் காணப்படுகிறது. அரையில் ஆடை கணுக்கால் வரை நீண்டு இருக்கிறது. அவர் பாதம்

பாதரட்சை மீது இருப்பது போல் காணப்படுகிறது. புயத்திற்குக் கீழே கைகளில் அணிகள் காணப்படுகின்றன. பீடம் சாதாரணமாக நீண்ட சதுர வடிவில் இருப்பது போல் காணப்படுகிறது. நெதலாண்டு இண்டிஸ் புதை பொருள் ஆராய்ச்சித்துறை இயக்குநர் டாக்டர் உல்லியம் வெ. ஸ்டட்டர் ஹெயம் இங்கிலாந்தில் உள்ள இந்தியக் கழகத்தின் ஆதரவில் 1939 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 15 ஆம் நாளில் சாவகத்தில் சமீபத்தில் நடைபெற்ற புதைபொருள் ஆராய்ச்சி வேலைகள் என்னும் பொருள் பற்றிச் செய்த சொற்பொழிவில் குறிப்பிட்டுள்ளார்.*

சாவகம் உலகப் புகழ்பெற்று விளங்கியது. சாவகத்திற்குத் தமிழர்கள், ஆந்திரர்கள், கலிங்கர்கள், வங்கர்கள், மகதர்கள் முதலிய இந்திய நாட்டவர்களேயன்றிச் சீனர்கள் அரேபியர்கள் போன்ற பல்வேறு நாட்டவர்களும் பல்வேறு இனத்தவர்களும் வந்துபோகத் தலைப்பட்டனர். சாவகத்தின் துறைமுகத்தில் பல்வேறு நாட்டுக் கப்பல்களும் நங்கூரம் பாய்ச்சி நின்றன. சாவகம் கடற்படை வலிமை வாய்ந்ததாய் பண்டைக் காலத்தில் சுமத்திரா பெற்றிருந்த உயர்நிலையை எய்தியது. கிழக்குச் சாவக மன்னர்கள் பாலம் பாங்கில் தம் பலத்தைப் பெருக்கிக் கொண்டனர். பாலித் தீவு சாவகத் தீவு எதிர்பார்க்கும் நிலைக்கு உயர்ந்து எழுந்தது. சாவகத்தின் தேசீயக்கலை பழைய இந்தியப் பண்பாடுகளின் அடிப்படையில் சிறப்புற்று வளர்ந்து வரலாயிற்று. ஆனால் அங்குக் கால் கொண்ட கலை இந்தோனேசிய மொழி மரபிற்குரிய உயிர்ப்பண்பும், உள்ளியல்பும் உள்ளதாய், வார்த்தையின் மூலப்பொருள் ஒளிர்வதாய் விளங்கியது. சாவக

*Indian art and letters Vol. XIII No 2. Second Issue 1939, London.

மொழி (காவி) முதல்தரமான பெருங்காப்பிய இலக்கியத்தின் இசைவான வாகனமாய் மாறியது. இந்திய இதிகாசங்களின் சாவக மொழியாக்கமும், அர்ச்சுன விவேகம் என்னும் புகழ் சான்ற ஏடும், எர்லங்காவின் ஆட்சிக் காலத்தில் முதன் முதலாகப் பாவைக் கூத்தாக அரும்பி நிலை மாறி வளர்ந்துள்ளது. எர்லங்கா ஆட்சியில் அரும்பிய நினைவுச் சின்னங்களுள் எதுவும் இன்று வரை கிடைக்கவில்லை. அடுத்த நூற்றாண்டின் சின்னங்கள் கூடச் சிறிதளவுதான் கிடைத்துள்ளன. என்றாலும் சாவகத்தில் பன்னிரண்டாம் நூற்றாண்டு, ஐரோப்பாவின் பதின்மூன்றாம் நூற்றாண்டைப் போல் "மாபெரும் நூற்றாண்டுகள்" என்று போற்றற் குரியதாய் மிளிர்கிறது. இது சாவக மக்களின் உணர்வில் அந்நாட்டின் எவ்விதமான சிறப்பையும்விடக் கடந்த காலத்தை நினைப்பூட்டும் உயிர்ச்சின்னமாக ஒளி பெற்றிலங்குகிறது. இஃது ஒரு வீரப்பண்பு மரபும் கல்பிதமானவும் நிறைந்த தலைமுறையாகவும் திகழ்கிறது. பன்னிரண்டாம் நூற்றாண்டின் சாவகக் காவலன் காமேசுவரன் இரட்டன் பாஞ்சியின் முன்னோடி மாதிரியாகவும், பாஞ்சிக் கால வட்டத்தின் வீரனாகவும் சாவக ஐதீகத்தில் மிகப் பிரசித்தி பெற்ற கல்பிதமான உருவமாகவும் காணப்படுகிறான்.

பெரும்பாலான பாஞ்சிப் பழம்பெரும் இலக்கியங்கள் இந்த நூற்றாண்டின் இறுதிக்குச் சற்றுமுன் உருவானதாக இருக்கலாம். இந்த அபிவிருத்திகள் பின் எழுந்த நூற்றாண்டுகளின் கலைகளில் பிரதிபலிக்கின்றன. ஒரு சாமான்யமான ஆதிக்கம் அபாரமாக அகலமாகும்பொழுது தொடர்ந்து செல்வது இயற்கையேயாகும். சாவகமன்னர்கள் பாலம்பாங்கிற்கு மாருகப் பங்காவில் ஆட்சியை அமைத்தனர். அவர்களின் வணிகர்கள், ஆப்பிரிக்காவின் கிழக்குக் கடற்கரைக்குக்

கயபலேச் செலுத்திவந்தனர். அவர்கள் சிறுவைக்கூட விட்டு விடவில்லை.

அப்பொழுது புதிய ஆட்சி சிங்கா சாரியில் சிறப்புற்றெழுந்தது (1280-1292), அப்பால் மசாபாகித் ஆட்சியும் 1294-1478 இல் மலரத் தலைப்பட்டது. அப்பொழுது சாவகக் கலையின் வரலாறு மீண்டும் துளிர்த்து எழுவதை வரலாற்றறிஞர்கள் வாளா விட்டுவிட முடியாததாக இலங்குகிறது. இந்தக் காலம் முழுவதும் நாட்டில் ஒற்றுமை நிலவி ஒரு விதமான வீரகாவியங்கள் முற்றிலும் இந்தியக் கலைகளின் முறைமையை அடிப்படையாகக் கொண்டு சாவகப் பண்பில் கலந்தன. இந்தோனேசிய தத்துவங்கள் வளர்ச்சியுற்றுத் தலை தூக்கின. அமைத்துள்ள அமைப்பிற்கும் அலங்கார வேலைப்பாடுகளுக்கும் இடைநடுவே ஏற்றத் தாழ்வுகள் எழுந்தன. அலங்கார வேலைப்பாடுகள் மிக அதிகமான அணிவளம் பெற்று அபிவிருத்தியடைந்தன. இவ்விதமாகப் பல்வகையிலும் வேறுபாடுகளைப் பெற்றுள்ள ஒப்பனை வேலைப்பாடுகள் எல்லாம் இருந்தாலும் அங்கு எல்லையற்ற கவர்ச்சியும் உள்ளது.

சிங்காசாரியின் சிறந்த நினைவுச் சின்னங்கள்—சைவ நெறி ஒளிரும் சாண்டி கிடால் (Candi Kidal) உள்படக் கிழக்குச் சாவகத்தில் பலமுள்ள பட்டைக் கூம்புருவக் கோயில்கள் முழுக்கட்டிடத்தின் பெரும் பாரத்தைத் தாங்கி நின்றன. இதைவிடக் கிழக்குச் சாவகத்திலுள்ள சாண்டி சாகோ அதனுடைய வாயங் போன்ற கோயில் சாவகக் கிருஷ்ணயானத்தை விவரித்து நிற்கிறது. ஆனால் அஃது ஒரு நல்ல உறுதியான ஒரு பௌத்தக் கோயிலாகத் திகழ்கிறது. தனிப்பட்ட திருவுருவங்கள் இன்னும் மத்திய சாவகப் பண்புடன் காணப்படுகின்றன. சாண்டி சாரியில்

சைவ—பௌத்த (Syncretism) இணைப்பு முறை மிக நன்றாகக் காணப்படுகிறது. அங்குப் பல அழகிய சைவ சமயத் திருஉருவங்கள் உள்ளன. அவற்றில் இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது துர்க்கா—மகிசாமர்த்தனி உருவமும், லெய்டன் தொல் பொருள்காட்சிச் சாலையிலுள்ள கணபதி உருவமுமாகும். மற்றொரு சிங்கசாரி கோயிலில் மிகச் சிறந்த பரச்பைாமித பௌத்த சிற்ப வடிவமாகும். இதுவும் இப்பொழுது லெய்டனில்தான் உள்ளது. இது பார்த்தமாத்திரத்தில் உள்ளத்தைக் கவரும் வனப்புமிக்கதும் மேலான சிறந்த அழகிய வேலைப்பாடுகள் நிறைந்தது மாகும். அதனோடு தீர்க்காயுளற்றதாயும் வீரமிக்க அரப் பசன மஞ்சுரியை (கி. பி. 1343)-ப் போன்றதும் ஆகும். சாண்டி சாபங்கிலுள்ள சைவத் திருக்கோயில் குறிப்பிடத் தக்க மிகப் பழைமையான அரிய கோயிலாகும். இக்கோயி லின் திருவறை சாவகத்தில் ஒற்றையான-ஒரு வட்டவடிவம் வாய்ந்த இடமாகும். இது வழிபடுவதற்குரியதாகவும், மிக உயர்ந்ததாகவும் ஆதியில் உள்ள பழைய அடித்தளத்தின் மீது அழகுறத் திகழ்கிறது. அடித்தளம் வழக்கத்திற்கு மாறாக உயர்ந்து காணப்படுகிறது. நீண்ட சதுர அடித்தளத் தின் மீது வட்டவடிவமான கோபுரம் மெச்சத்தக்க விதமாகக் கட்டப்பட்டுள்ளது. இதன் முதன்மையான சட்டங்களுக்கு (Outlines) அடங்கியதாக மிகச் செழிப்பான அலங்காரங்கள் செய்யப்பட்டுள்ளன. இந்தக் கோயிலைச் சாவகக் கலையின் சிறப்பிற்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகக் காட்டலாம்.

மசபாகித் மன்னர்களின் ஆட்சியின் கீழ் கிழக்குச் சாவகம் செல்வமும் பலமும் பெற்றெழுந்தது. நாலு மாபெரும் மன்னர்கள்—கெர்ட்டன்காரா ஹய்யாம் உருக் உன்பட 1294 ஆம் ஆண்டு முதல் 1389 ஆம் ஆண்டு

வரை தொடர்ந்து அரசிருக்கையின்மீது அமர்ந்து ஆட்சி புரிந்து வந்தனர். மேற்குச் சாவகம் சுதந்திரத்தோடு இருந்தது. மத்திய சாவகத்தைப் பற்றி அதிகம் அறிய முடியவில்லை. மசபாகித் அரசர்கள் கிழக்கிலுள்ள தீவுகளையெல்லாம் தம் ஆதிக்கத்தில் வைத்திருந்தனர்—அஃதாவது போர்னியோவின் கடற்கரைகள் பாலம் பாங் உள்பட சுமத்திராவின் கடற்கரை, மலைநாடு உள்படவாகும். சாவகர்கள் தங்கள் நாட்டுப் பொருள்களை மட்டுமன்றிப் பிறநாட்டுப் பொருள்களையும் தம் கப்பல்களில் ஏற்றிக்கொண்டு சீன நாடு போந்து வணிகம் வளர்த்து வந்தனர் என்பதற்கு எண்ணற்ற அகச்சான்றுகளும் புறச்சான்றுகளும் உள்ளன. சீன வரலாறுகள் தங்கள் நாட்டில் சாவக வணிகர்கள் வந்து வணிகம் வளர்த்து வந்தனர் என்பதை உறுதிப்படுத்துகின்றன. சாவக நாட்டுப் பட்டாடைகளும், நல்ல பூ வேலைப்பாடுகள் நிறைந்த மெல்லிய வண்ண ஆடைகளும் பெரும்பாலும் சீன நாட்டில் தொடர்ந்து விற்பனை செய்யப்பட்டு வந்தன. நாகர கெர்ட்டகாமாவில் பரபாஞ்சா, மசபாகித்தின் அரண்கள் அமைந்த அரிய நன்னகரைப் பற்றிய நனிசிறந்த சித்திரங்கள் கிடைத்துள்ளன. அதன் அரண்மனை, நீண்டு விசாலமாக விளங்கும் வீதிகள், மக்களின் ஒழுக்கம், நல்ல பழக்க வழக்கங்கள், வாழும் முறைகள் கல்வி வளர்ச்சி, கலைச் சிறப்பு இன்னோரன்ன செய்திகள் சிறப்புற விளக்கப்பட்டுள்ளன.*

---

*Western Java remained independent, and little is known of Central Java, but Majapahit controlled all eastern Islands, the Coastlands of Borneo, the Coastlands of Sumatra including Palembang and Malay Peninsula. Trade with China in Indian Javanese products chiefly silk and cotton goods continued to flourish. In the Nagarakertagama

முக்கண் கபால கணபதி—(சிங்கசாரி)

மேற்குச் சாவகத்தில் 10ஆம் நூற்றாண்டின் ஆரம்ப காலம் வரைக்கும் இந்து-சாவகக்கலை நிலைத்திருந்தது. சிங்க சாரியில் கதிரியின் ஆட்சியின் அதிகாரம் கிழக்குப் பகுதிக்கு மாற்றப்பட்டது. மஜபாலி ஆதிக்கம் துளிர்த்துப் பின் தளர்ந்தது. அப்பால் அது பாலித் தீவில் தஞ்சம் பெற்று அங்கு நிலை பெற்றது. ஏழாம் நூற்றாண்டு அல்லது எட்டாம் நூற்றாண்டுவரை—அஃதாவது மத்திய சாவகர்க ளின் ஆட்சியின் ஆரம்பத்தில் முதல்முதலாக உண்மையான இந்து சாவகக் கலைஅறிவு ஆரம்பமாயிற்று. பழம்பெரும் நினைவுச் சின்னங்கள் அங்கு இப்பொழுது பல கிடைக் கின்றன. சாவகக் கரையில் தமிழர்கள் கால்வைத்துப் பல நூற்றாண்டுகள் சென்றபின் அவர்களுடைய நாகரிகம் பரவ ஆரம்பித்தது.

கடல் மட்டத்திற்கு 6500 அடிக்குமேல் உயரமாக உள்ள டையெங் சமவெளியில் பழைய நினைவுச்சின்னங்களாகப் பல பெட்டகக் கோயில்கள் எழுந்தன. இப்பொழுது அங்கு எட்டுக் கோயில்களுக்கு மேல் இல்லை. ஆனால் முற்காலத்தில் அங்கு அளவற்ற கோயில்கள் அரும்பி இருந்தன. அங்கு

---

Parapanca presents a vivid picture of the walled city of Majapahit with its streets and palaces and of the manners and customs of its inhabitants. Entertainments are mentioned amongst others the Wayang Berber (exhibition of Scroll paintings with spoken text, and equivalent of the old Indian Yamapata exhibition as discribed in the Mudrarksasa) and Wayang Topeng, or masked dance, in which the King himself took part on the occasion of Straddha for the queen mother.—History of Indian & Indonesian art - Ananda K. Coomaraswamy 1927.

ஒரு பரிசுத்த நகரம் சிவபெருமான் வணக்கத்திற்கென்று அர்ப்பணிக்கப்பட்டிருந்தது. சிங்கசாரியில் உள்ள கணபதி உருவம் கிடைத்தற்கரிய உருவமாகும்.

கணபதி, சிவகுமாரன். இவர் துன்பங்களினின்று காப்பவர். இவர் மனித உடலும் யானைத்தலையும் உடையவர். இந்தியாவில் இல்லாதவாறு இந்தக் கணேசர் புது மாதிரி காணப்படுகிறார். இவர் சிவகுமாரன் ஆனபடியால் சிவனைப் போல் முக்கண்ணும் கபாலமும் இளம்பிறையும் உடையவராக விளங்குகிறார். இவர் கைகளில் ஜெபமாலையும், யானைக் கொம்பும், கோடரியும், ஒரு சிறு கலசமும் வைத்திருக்கிறார். இவரது உருவம் ஒவ்வொரு வீட்டின் வாசல் படியிலும் இருக்கும். நூல்களில் இவரது வணக்கம் முதலில் இடம் பெற்றிருக்கும். இவரது வயிறு பெருத்திருக்கும். இவரது வாகனம் பெருச்சாளி, சிங்கம் முதலியனவாகும். இந்தச் சிவ குமாரனாகிய கணபதி சிவனுடைய பைரவமூர்த்தியின் மைந்தனாகச் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. கணபதி கபாலங்களின் மீது அமர்ந்திருக்கிறார். இவரின் காதணிகளும், காலணிகளும் கைபணிகளும், இடுப்பணியும், கழுத்தணிகளும் கபாலங்களாகக் காணப்படுகின்றன. மகுடத்தில்கூடக் கபாலங்கள் காணப்படுகின்றன. முன் கைகளில் அரைக் கபாலங்கள் உள்ளன. இந்த உருவம் 60 அங்குல உயரம் உள்ளது. இவ்வுருவம் இன்று லெய்டன் தொல் பொருள் காட்சி சாலையில் உள்ளது.*

**கொற்றவை (துர்க்கை)**

கொற்றவை பண்டைய தமிழர் கண்ட தாய்த் தெய்வம் முதன்முதலாகத் தமிழர்கள் கண்ட பெருந்தெய்வம்.

---

*H. H. Juynboll Katalog des Ethnographische Reichsmusenus bd. V. Javanische Alterthumer. P. 25

தமிழர்கள் ஆதிகாலத்தில் நானிலத்திலும் அப்பால் ஐந்து நிலத்திலும் வாழ்ந்தபொழுது கண்ட ஒரே தெய்வம் இந்தக் கொற்றவையாகும். இந்தக் கொற்றவை தாய் ஆட்சி நிலவிய காலத்தில் எழுந்த வீரமிக்க பெண் தெய்வமாகும். இந்தக் கொற்றவை பிற்காலத்தில் சிவனுடைய மனைவியாக வும் முருகனின் தாயாகவும், திருமாலின் தங்கையாகவும் போற்றப்பட்டாள். பின்னர்த் துர்க்கையாகவும் மகிசாசூர மர்த்தனியாகவும் தமிழகத்தில் மட்டுமின்றி வட இந்தியாவி லும் போற்றப்பட்டாள். இவளைத் தமிழர்கள் தாங்கள் குடி யேறிய சாவக நாட்டிற்குக் கொண்டு போயினர்.

மேற்குச் சாவகத்தில் உள்ள சிங்கசாரியில் அழகிய துர்க்கையின் உருவம் ஒன்று கிடைத்துள்ளது. துர்க்கையை உமையாகவும், பார்வதியாகவும் வழிபடுவதுண்டு. இவள் தீமைகளை அழிப்பவள். மகிஷாசூரனை வதைத்தவள். இவளுக்கு எட்டுக்கரங்கள் உண்டு. இவளது வாகனம் எருமை. மகிஷாசூரன் கழுத்தினின்று ஒரு பூதம் எழுந்தது. எருமையின் மீது முழங்காலின் நின்றுகொண்டு இருக்கிறாள். ஒருகை எருமையின் வாலைப்பிடித்திருக்கிறது. மற்றொரு கை பூதத்தின் தலைமயிரைப் பிடித்திருக்கிறது. துர்க்கை இளம் பிறையும் கபாலமும் தலையில் அணிந்திருக்கிறாள். அவள அரையில் ஆடையும் மார்பில் சட்டையும் தாமரை அணிக ளும் இன்னும் வழக்கமான அணிகளும் பூண்டிருக்கிறாள்.

பண்டைய தமிழ் மக்கள் தங்களுடைய சொந்த உருவத்தில் எப்படிக் கடவுளை உருவகப்படுத்தி இருக் கிறார்கள் என்பதற்கு இது நல்ல எடுத்துக்காட்டு. தமிழர்கள் பெண்ணை மக்களைக் காப்பதில் ஒரு வீராங்கனை யாகவும் அவர்களைப் போசிப்பதில் அருளும் அன்பும் வாய்ந்தவளாகவும் மனைவியாக இருக்கும்பொழுது ஆடை

அணிகளோடு அழகு வாய்ந்தவளாகவும் கண்டிருக்கின்றனர். இது தமிழர்கள் பெண்களைக் கண்ட முறையாகும். இந்த உருவம் சிங்கசாரியில் கண்டெடுக்கப்பட்டது. இன்று லெய்டன் தொல்பொருள் காட்சிச்சாலையில்உள்ளது. இதன் உயரம் 68 - அங்குலம்.*



*Selected examples of Indian art by Ananda Coomaraswamy. Dec. 1911.

# 7. பெரம்பானன் கோயில் தொகுதிகள்

கிழக்குச் சாவகமும் மத்திய சாவகத்தைப் போல் வரலாற்றுப் புகழ் பெற்ற இடமாகும். இங்கு, மத்திய சாவகத்திலுள்ள பிரசித்தி பெற்ற போரோபுதூர் என்னும் கலைக்கோயிலைப் போன்று வரலாற்றுப் புகழ் வாய்ந்த பெரம்பானன் என்னும் சிறந்த நினைவுச் சின்னமும் உண்டு. பெரம்பானனுக்குத் தெற்கில் இராட்டோ போகோவின் கிராட்டன், சாண்டிசாகோ சாண்டிபனுதரன்போன்ற நினைவுச் சின்னங்களும் உள்ளன.

சைலேந்திர மரபினர்கள் சாவகத்தைக் கைப்பற்றிக் கி. பி. 778இலிருந்து 897வரை ஆட்சி புரிந்து வந்தனர். சஞ்சயன் என்பவரின் வழிவந்தவர்கள் சாவகத்தின் கிழக்குப் பகுதியில் வசித்தனர். அவர்கள் கி. பி. 879ஆம் ஆண்டில் சைலேந்திர மரபினர்களைத் துரத்திவிட்டு 927ஆம் ஆண்டு வரை மத்திய சாவகத்தையும் கிழக்குச் சாவகத்தையும் ஆண்டுவந்தனர். இவர்களின் தலைநகராகப் பெரம்பானன் இருந்துவந்தது. இங்கேதான் இவர்கள் பல ஆலயங்களை எழுப்பினர். நடுவில் சிவன் கோயிலும் சுற்றிலும் நான்முகன், திருமால், கொற்றவை, அகத்தியர், கோயில்களும் கட்டப்பட்டன. கோயிலின் சுவர்களில் சிவதாண்டவத்தில் 32 முத்திரைகளும் செதுக்கப்பட்டுள்ளன. இங்குப் புடைசிற்பமாகச் செதுக்கப்பட்ட இராமகதை மிகச் சிறப்புடையது. இதன்பக்கத்தில் பௌத்த ஆலயம் எழுப்பப்பட்டிருக்கிறது. அதில் புத்தரைப்பற்றிய வடமொழி சுலோகம் ஒன்று சாவக மொழியில் பெயர்த்துப் பொறிக்கப்பட்டிருக்கிறது. இக்காலத்தில்தான் சாவக இலக்கியம் மலர ஆரம்பித்தது.

கி. பி. 927ஆம் ஆண்டு இந்த அரச வமிசம் அழிந்தது. புதிய அரச வமிசம் தோன்றியது. அந்த வமிசத்தைச் சேர்ந்த தரும வமிசன் என்னும் அரசன் ஆட்சியில் மகாபாரதம் சாவகத்தில் மொழி பெயர்க்கப்பட்டது. சிவ சாசனம் என்னும் சட்டநூல் இயற்றப்பட்டது. 1294 முதல் 1309 வரை ஆண்ட கிரதராஜஸன் என்னும் அரசர் காலத்தில் பல பௌத்தக்கோயில்களும் சிவன் கோயில்களும் கட்டப்பெற்றன. அவன் மகன் ஜயநகரன் (1309-1328) சுந்தரபாண்டிய விக்கிரமோத்துங்கன் என்ற பட்டம் புனைந்து கொண்டான். இது சாவகமன்னன் பாண்டிய மன்னர்களோடு கொண்ட தொடர்பைக் காட்டுகிறது. 15ஆம் நூற்றுண்டில் அந்த ஆட்சி வலுக் குறைந்து முஸ்லிம் ஆட்சி அரும்பியது.

சாவகத்தில் பதினைந்தாம் நூற்றுண்டில் எழுப்பப் பெற்ற மற்றைய இந்து நினைவுச்சின்னங்கள்—அஃதாவது சைவ, சுமார்த்த (பிராமணிய) பௌத்த நினைவுச்சின்னங்கள் பெரும்பாலும் செவ்வண்ண இரும்புக் களிமண் மலைச்சரிவுகளில் மேற்றளமிட்டுக் கட்டப்பட்டவையாகும். இங்குச் சிவ வணக்கம், பழைய இந்தோனேசிய உப்பரிகை வழிபாட்டு மரபோடுள்ள இந்து சமயத்தோடு இணைந்து முன்னேற உதவும் மலைக்கடவுளாகக் காட்சி தருகிறது. இந்தோசாவகக் கலப்பும் இந்தோனேசிய மூலப்பொருள்கள் இரண்டும் இணைந்த புதிய கலப்பின் பலனாக ஒரு தெளிவான பாணி அரும்பியது. இஃது உறுதியற்றதாக இல்லை. மிக்க உறுதியும் அழகும் நிறைந்ததாய் இருந்தது. இவற்றில் செலக்கெளிர் (1434 - 1442), பெனம்பிகான், சுக்குல்லெவு இவைகள் முக்கிய பகுதிகள். சாவகக் கட்டிடக் கலையில் மேற்கண்ட மதிப்பு நிறைவாக்குவதில் அரண்கள் எதுவும் இல்லை என்று கூறப்படுவது கவனிக்கத்தக்கது. சாவகக்

கோயில்களில் பக்கத்தில் அகலக் கூடுன பத்தி நிரல்கள் எதுவும் இல்லை. அதனோடு அதிகமாகச் சாந்தும் உபயோகிக்கப்பட்டதாகத் தெரியவில்லை.

சாவகத்தில் எழுதப்பெற்ற ஓவியங்களைப் பற்றி ஒன்றும் நமக்குத் தெரியவில்லை. ஆனால் ஒரு சில ஏடுகளில் வரையப்பட்ட படங்கள் உண்டு. மத்திய சாவகத்தில் செப்புத்தகடுகளில் பொறிக்கப்பட்டுள்ள படங்கள் உண்டு. அதில் அசந்தாப்பாணியில் பெண்கள் குழந்தைகள் வடிவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இந்த அழகிய உருவங்கள் சுவர் ஓவியங்கள் போன்ற பாணியில் சித்திரிக்கப் பட்டுள்ளன. இவை ஒரு காலத்தில் நாடெங்கும் நிலவியுள்ளன. பதினேழு அல்லது பதினெட்டாம் நூற்றாண்டுகளில் பாலி நாட்டில் சுவர் ஓவியங்களும் ஏடுகளில் தீட்டப் பட்ட ஓவியங்களும் உள்ளன. அவை இன்று வரை நிலவுகின்றன. இவை இன்றும் நடைமுறையில் உள்ளன. வெளிநாட்டு நாகரிகங்கள வெள்ளம்போல் வந்தும் இவற்றை அரித்துக் கொண்டு போக முடியவில்லை.

இஸ்லாமியக் கட்டிடக்கலை சாவகத்தில் ஒப்பு நோக்கினால் அதிக முக்கியத்துவம் அளிப்பதற்கில்லை. பழைய நினைவுச்சின்னங்களில் குறிப்பிடத்தக்கது காடுவாவில் உள்ள பள்ளி வாயிலின் தூபி ஆகும். உண்மையில் தன் தோற்றமும் வாயிலும் உற்றுநோக்குபவர்களுக்குப் படிமங்கள் இல்லாத இந்துக் கோயிலாகவே காட்சி தருகிறது. இஸ்லாம், இந்தோனேசியாவில், மக்கள் உள்ளத்தில் உள்ள அத்யாவசியமான நம்பிக்கைகளை மாற்றியதே யன்றி அவர்களின் மொழி, கலை, பண்பாடுகளில் மாற்றஞ் செய்யத் துணியவில்லை. சாவகமக்கள் இஸ்லாமிய சமயத்தைத் தழுவினர். ஆனால் சாவக மக்கள் சாவகர்களாகவே இருந்

தனர். இஸ்லாமிய சமயத்தைப் பின்பற்றுபவர் சாவகத் தேசியக் கலைக்கு எதிர்ப்பின்றி உண்மை உணர்வு உந்தியெழச் செய்தனர். சாவகத்தில் நிலவிய நாட்டின் நனி சிறந்த கலைகள் நாசமானது இயற்கைக்கோளாறே யன்றி மதப்பூசல் அன்று. பெரும்பணிகளை நிறைவேற்றுவதற்கு உள்ளமும் சக்தியும் உரம் பெற்று இணைந்து செயலாற்ற வேண்டும். சாவக மக்களின் பண்பாட்டு உளத்தில் பரிணமித்த பாரிய கலைகள் காலக் கோளாறுகளினால் காடேறினும் அது பன்னூறாண்டுகள் சென்றும் நாடோடிக் கலைகளாய்ப் பாமர மக்களின் பாதுகாப்பில் வளர்ந்து வழி வழியாக வந்த தன் பெருமையை எடுத்துக் காட்டி வருகின்றது. இஃதேயன்றி அரங்கங்களிலும், இசைகளிலும், ஆடைகளிலும், மேற்குடி மக்களின் செல்வாக்குத் தொழில்துறைகளில் தொடர்ந்து இருந்து வருகிறது; தூய இனிய எளிமை நயமும் கட்டமைதியும் வாய்ந்த கலையின் உயிர் இன்னும் தப்பிப் பிழைத்து எங்கும் நிலவி நிற்கின்றது.

## பெரம்பானன் கோயில்கள் (The Temples of Prambanan)

சாவகத்தின் கீழ்த்திசையை நோக்கிச் சென்றால் பெரம்பானன் அழிபாடுகளை எளிதில் அடையமுடியும். பெரம்பானன், எழுப்பப்பெற்றிருக்கும் இடத்திற்குச் செல்லும் வழியில் ஒன்றரைமணி நேரம் நடந்துசெல்வதற்குரிய தொலைவில் சாண்டிலேரோ சோக்கராங் (Tjandi Loro Lzonggrong) என்ற இடம் உள்ளது.

சாவக மக்களின் கர்ணபரம்பரையான கதைகளில் இராட்சச இராட்டோ போகோ (Ratoe Boko) வின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த இராட்சதன் இருப்பிடம் பெரம்பானன் என்னும் இடத்திற்குத் தெற்குப் பக்கத்தில்

உள்ளது. இஃது இராட்டோ போகோவின் கிராட்டன (Kraton) என்று கூறப்படும் இடமேயாகும். இது முற்காலத்தில் இளவரசன் மாதரம் (Mataram) என்பவனின் தலைநகரமாக இருந்தது. அங்கு நூற்றுக்கணக்கான அழகிய மாளிகைகள் காணப்பட்டன. இந்தப் புராணக் கதையில் குறிப்பிடப்பட்டுள்ள இராட்சத இளவரசனின் மகள் வழி வழியாக வரும் கூற்றுப்படி லோரோ ஜோங்கராங் சீமாட்டி (Lady Loro Djonggrang) என்பவள் பெரம்பானன் பெருங் கோயிலை எடுப்பித்தவளாகத் தெரிகிறது. எவராலும் செய்து முடித்தற்கரிய பெரும்பணி என்று எண்ணப்பட்ட இந்தத் தெய்வீகத் திருப்பணியை அவள் கரங்களைக் கைப் பற்ற எண்ணிய ஓர் இளைஞனிடம் முடிக்க முடியுமா என்று கேட்டாள். அவன் ஊக்கம் இழந்துவிடாது முடித்துத்தர முனைந்து முன்கை நீட்டினான். மேலும் அவள் ஓர் இரவு முடியுமுன் ஆயிரம் அற்புதமான தெய்வீகத் திருஉருவங்கள் திகழும் திருக்கோயிலை உருவாக்கி உலகம் புகழச் செய்ய வேண்டும் என்று உறுதி கேட்டாள். அவன் சம்மதித்து அவளுக்குக் கை அடித்துக் கொடுத்தான். இந்த இளைஞனுக்குக் குறளித்தெய்வங்களிடையே சக்திவாய்ந்த நண்பர்கள் பலர் இருந்தனராம்; அவர்கள் இவனுக்காக இந்த வேலைகளை முடித்துக் கொடுத்தார்கள்—ஆனால், அவளால் அருணன் அரும்புமுன் அனைத்தையும் முடிப்பது அசாத்தியம் என்று எண்ணப்பட்ட அரிய பணியை மாண்புமிக்க மங்கை நல்லாள் மனத்தால் எண்ணிய காரியத்தை மனங்கலங்காது நிறைவேற்றிவிட்டான். ஆனால் அவள் தந்திரத்தால் ஒரு சூழ்ச்சி செய்து ஒரே ஒரு தெய்வப்படிமம் இல்லாதிருக்கும்படி செய்து எல்லோரையும் மலைக்கச் செய்துவிட்டாள். ஆனால் இளைஞன் தனது மந்திர சக்தியால் உணர்ந்து அவளைத் தண்டிக்க எண்ணி, அவளைச் சபித்துக் கல்லாக ஆக்கிவிட்டான்

அவளது சிலை உருவம் குறைவுபட்ட ஒன்றிற்குப் பதிலாக இணைந்து ஆயிரமாக நிறைவுபெற்றது. அஃது அன்று அரும்பிய ஆறு பழம் பெருங்கோயில்களில் ஒன்றாகச் சிவ பெருமானுக்கு அர்ப்பணஞ் செய்யப்பட்டது.

உண்மையாய்க் கல்லாகச் சபிக்கப்பட்ட இளவரசியின் உருவே துர்க்கையாக விளங்குகிறது. இளவரசியின் உருவமாக மாறிய துர்க்காதேவியின் சிலை உள்பட அழகுபட விளங்கும் ஆயிரம் சிலைகள் ஒருங்கே அமைந்த பெருங் கோயிலே சாண்டிலோரோ சோங்காராங் எனப் பெயர் பெறும். இப்பொழுது இத் திருக்கோயிலுக்கு மக்கள் வந்து சிலைக்கு நெய் பூசி மலர்களை அர்ப்பணித்துச் செல்கின்றனர். அவளை வழிபடும் மக்கள் பல்வேறு நலன்களைப் பெறுகின்றனராம். நல்ல கணவனை விரும்பும் இளம் கன்னியர்கள் பலர் இங்கு யாத்திரை செய்து, பூசித்துத் தாங்கள் நாடிய பலனைப் பெறுகின்றனர். மணஞ்செய்து கொண்ட பல பெண்கள் இந்தத் தேவியை வழிபட்டு நன்மக்களைப் பெற்று வருகின்றனர்.

பெரம்பானன் சமவெளியில் உள்ள அழிந்து கிடப்பவை களில் இன்று எஞ்சி நிற்பவைகளைப் போலன்றி முன்னர் எல்லாப் புத்த கோயில்களும் (பெரம்பானன் உட்பகுதியில் உள்ள கோயில்களிலும்) பொதுமக்கள் சிவவழிபாடு செய்ய இடம் இருந்ததாம். இப்பொழுது அங்குக் கண்டுபிடிக்கப் பட்ட தெளிவான சிலைகளில் ஒன்று திரிமூர்த்தி உடைய தாகும். அஃது இந்து சமயத்தின் பரிசுத்தமான திரியேகத்துவத்தையும், சிறப்பாகச் சிவபெருமானுடைய மகத்துவத்தையும் எடுத்துக் காட்டுவதாகும். அங்குள்ள முக்கிய கோயிலில் சிறப்பான இடத்தைச் சிவன் பெற்றுள்ளார். புத்தர் கோயில், சிவபெருமான் கோயில்கள்

ஆகியவைகளில் அருகில் கிடைத்த பழைய சாசனங்களில், இருபெரும் பிரிவினர்களும் அமைதியாக வணங்கியும் வாழ்ந்தும் வந்ததாகத் தெரிகிறது. இரு பிரிவினர்களும் அன்பால் பிணைக்கப்பட்டிருந்தனர் என்று யூகிக்கப்படுகிறது, இவ்விரு பிரிவினர்களிடமும் அரசர்கள் பாரபட்சமின்றி நடந்து வந்தனர்.

பெரிய, நாலு பக்கங்களுள்ள ஒரு நிலப்பகுதியில் சதுரமான பெரிய மதில்களின் நடுவே ஆறு பெருங்கோயில்களும் இரு சிறு கோயில்களும் இருந்தன. இந்தப் பெரும் சமவெளிக்குச் சென்றால் தெற்குச் சுவரில் பெரிய தலைவாயில் இருப்பதை அறியமுடியும். அப்பால் பார்வையாளர்கள் தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச் செல்லவேண்டும். சென்றால் இருவரிசைகளாலான மூன்று கோயில்கள் உள்ளன. ஒவ்வொன்றும் இணைந்ததாய் ஒரு கூட்டு வழியை உடையதாய் அமைந்துள்ளன. மேற்கு வரிசையில் உள்ளவை மிகப் பெரியன; அவற்றின் உட்புகக் கிழக்கு வரிசையில் உள்ள கோயில்களை நோக்கித் திரும்பிச் செல்லவேண்டும். கூட்டுப் பாதை இருபக்கங்களின் இறுதியிலும் சிறு கோயிலால் மூடப்பட்டுள்ளது. அது தெற்கு வாயில்களிலும் வடக்கிலுள்ள கிழக்குப் பகுதியிலும் அமைந்துள்ளது. வடக்கு வாயில் ஒன்று முழுவதும் வீழ்ந்து அழிந்து கிடக்கிறது; அது கிட்டத்தட்ட மறைந்துவிட்டது என்று கூறலாம். வடக்கு வரிசையில் உள்ள கோயிலின் நடுப்பகுதி சிவனுறையும் திருப்பதி; எல்லாவற்றிலும் மிகப் பெரிது; எனவே அஃது அனைத்திலும் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. வடக்கு வரிசையில் உள்ள கோயில் ஒன்று திருமாலுக்கு (விஷ்ணுவுக்கு) அர்ப்பணிக்கப்பட்டது; தெற்கு வரிசையில் உள்ளது ஒன்று நான்முகனுக்கு (பிரமதேவனுக்கு) அர்ப்பணிக்கப்பட்டது. கிழக்கு வரிசையி

லுள்ள கோயிலின் நடுப்பாகத்தில் மிகப்பெரிய நந்தி காணப் படுகிறது. காளைமாட்டைச் சிவபெருமான் தம்முடைய வாகனமாகக் கொண்டுள்ளார். அதோடு சூரியன், சந்திரன் போன்ற தெய்வ உருவங்களும் உள்ளன. வடக்கில் உள்ள கோயிலில் சிவபெருமானின் சிதைந்த திருஉருவம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இந்தச் சிவபெருமானின் திரு உருவச் சிலையின் தலை வியக்கத்தக்க அழகினையுடையது. அஃது இன்று பட்டேவியா தொல்பொருள் காட்சிச்சாலையில் இடம் பெற்றுள்ளது. இந்தக் கோயிலில் உள்ள திரு மாலின் (விஷ்ணுவின்) வாகனமாகிய கருடனின் பீடம் சமீபத்தில் இங்குக் கொண்டு வந்து சேர்க்கப்பட்டுள்ளது. இது டெலகாலோ (DelagaLor) என்னும் இடத்தில் கிடைத்தது. தெற்கில் உள்ள திருக்கோயிலில் ஒன்றும் காணப்படவில்லை. இந்தக் கோயிலின் புறமதில்களைப் போலவே அகமதில்களும் சதுரமாகவே அமைக்கப் பட்டுள்ளன. உட்புகும் வாயில்கள் நாற்புறமும் நடுவில் உள்ளன. அகமதில்களுக்கும் புறமதில்களுக்கும் நடுவே நாற்புறமும் மூன்று வரிசையாகச் சிறு கோயில்கள் முறையே 44, 52, 60 ஆகக் கட்டுவிக்கப்பட்டுள்ளன. கீழ்ப்பக்கம், இரண்டாவது மதிலின் கிழக்கு வாயிலுக்கு வலப்பக்கம் நான்குவரிசையில் ஒரேயொரு தனித்த கோயில் இருக்கிறது. இது சுற்றிலும் நான்குவரிசையாகக் கோயில்கள் கட்டுவதற்கு ஆரம்பம் செய்யப்பட்டிருக்கலாம் என்ற எண்ணத்தை உண்டாக்குகிறது. ஆனால் அந்த எண்ணம் ஈடேறாது நான்காவது வரிசையில் கீழ்ப்பக்கம் ஒரு கோயில் கட்டியதோடு நிறுத்தப்பட்டிருக்கிறது. சுற்றிலும் கட்டப் பட்ட இந்தச் சிறு கோயில்களில் பல அழிந்துவிட்டன. இன்று பழுதில்லாத கோயில் என்று கூற ஒன்று கூட இல்லை.

தமிழர்களும் - ஏன்? சைவர்களும், பௌத்தர்களும் சாவகத்திற்குச் செல்வதற்குமுன் அந்நாட்டுமக்கள் காட்டு மிராண்டிகளாக இருக்கவில்லை. அவர்கள் ஓரளவு நாகரிகம் பெற்ற மக்களாகவே வாழ்ந்து வந்தனர். கட்டிடம் கட்டவும் கல்லைச் செதுக்கவும், சிலைகளைச் சமைக்கவும் அவர்களுக்குத் தெரியும். ஆனால் அவை கரடுமுரடாகவும் அழகில்லா தவைகளாகவும், செய்பாகமில்லா தவைகளாகவும் விளங்கின. சாவகம் மட்டுமன்று. பக்கத்திலுள்ள வேறு எந்நாட்டிலும் கூடச் சிற்பக்கலை சிறப்புற்றெழவில்லை. இந்து நாகரிகம் இங்குப் புகுந்த பின்னர்க்கூட மிகப் பழங் காலத்திய முறையைத் தழுவிச் செய்யப்பட்ட கரடுமுரடான சிலைகள் செதுக்கப்பட்டுவந்தன. இஃது இந்து-சாவகக்கலை கிழக்காசி யாவில் கால்வைக்கு முன் அங்குச் சிற்பக்கலை தொடக்க நிலையைக் கூடக் கடக்கவில்லை என்பதை மெய்ப்பிப்பதாக இருக்கிறது. தமிழகத்தினின்றும் வடஇந்தியாவினின்றும் ஆழ்கடல் கடந்து வலிமை வாய்ந்த நாகரிகம் அலை அலையாய்ச் சாவகம் எங்கும் பரவி உலகமக்கள் கண்டு பெருவியப்பு எய்தும் வண்ணம் உருப்பெற்றுள்ளது. பல நூற்றாண்டு களாக உலகின் தட்பவெப்ப நிலைகளும் பல்வேறு அரசியல் அமைப்புக்களும் முட்டி மோதிய போதிலும் இன்றும் எண்ணற்ற செங்கற்கட்டிடத்தால் எழுந்த கோயில்களும், கற்றளிகளும் அங்குக் காணக்கிடக்கின்றன. தமிழர் பண் பாடும், கலைகளும், நாகரிகமும், சமயமும், மூலக்கருத்துப் பிறழாவண்ணம் சாவகத்தில் குடியேறியுள்ளன. அங்கு அழிந்துகிடக்கும் எண்ணற்ற கோயில்களில் காணப்படும் கல்லில் செதுக்கப்பட்ட சிலைகளும் செம்பு வெள்ளி உலோகங் களின் வார்த்தெடுத்த படிமங்களும் பண்டு சாவகமக்கள் வழி பட்ட தெய்வங்களை எடுத்துக்காட்டுவதாக இருக்கின்றன. அங்கு முழுமுதற்கடவுளான சிவபெருமான், நான்முகன், திரு

மால், கணபதி, கொற்றவை (துர்க்கை) முதலிய தெய்வ உருவங்களுடன் முருகன், அகத்தியர், கின்னரர் துவாரபாலகர்கள், பூதங்கள் முதலியவைகளின் உருவங்கள் ஏராளமாய்க் கிடைத்துள்ளன. இந்தச் சைவத் திருமேனிகளுடன் யோக நிலையில் கையில் முத்திரைகளுடன் திகழும் மனித உருவம் வாய்ந்த புத்தர் உருவமும் காணப்படுகின்றன. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றியதாகக் கூறப்படும் உயர்ந்த தெய்வ நிலைபெற்ற தியான புத்தர் உருவமும் அருகில் போதிசாத்தவ அவலோகீஸ்வரர், மைத்திரேயர், மஞ்சுசிலி போன்ற வடநாட்டு பௌத்தர்கள் வணங்கும்பல தெய் உருவங்களும், இன்றும் இந்தியர்களும் திபேத்தியர்களும் வணங்கும் தாராதேவி உருவங்களும் ஏராளமாகக் காணக் கிடக்கின்றன.

இன்னும் பெரம்பானனில் மூன்றாவதாக உள் மதில் ஒன்று உள்ளது. ஆனால் அஃது ஏனைய இரண்டு சுற்று மதில்களைடபோல் இசைவுப் பொருத்தமான பக்கங்களை உடையதன்று.

எல்லாக் கோயில்களிலும் - சிறிதும் பெரிதும் உளளடக்கிப் பக்கத்தே பள்ளங்கள் காணப்படுகின்றன. அவை தோண்டப்பட்ட குழிகள் அல்ல. ஆனால் அடிப்படை திறந்த வெளியாக விடப்பட்டிருக்கிறது. அதன் மீது கோயில் கட்டப்பட்டுள்ளது. பல பள்ளங்கள் வெறுமையாகவே இருக்கின்றன. சிலவற்றில் விலங்குகளின் சாம்பல்கள் கிடக்கின்றன. ஒருபகுதி எலும்புகள் எரிக்கப்பட்டுள்ளன. இஃதன்றிச் சில பொன், வெள்ளிப் பொருள்களும் சிறிய காசுகளும் மோதிரங்களிலுள்ள சிறிய கற்களும், வெள்ளித் தட்டுக்களும் தங்கத் தாம்பாளங்களும், பித்தளை நாணய விளிம்புகளும் பிறவும் உள்ளன. கோயில் தொகுதிகளின்

அருகே சவக் குழிகளும் இருந்திருக்கலாமோ என்று ஆராயப பட்டது. ஆனால் ஒவ்வொரு கோயிலும் ஓர் அலங்கார சமாதியை உடையதாய் இருக்கிறது. குழியின் அடியில் சாம்பலை வைத்து இறந்துபோனவர்கள் கல்லறை மீது அவர் களுடைய நினைவுக்குறியாகத் தெய்வ உருவங்கள் நிலைநாட்டப் பட்டுள்ளன. பெரும்பாலான பெருங்கோயில்கள் அரசர் களின் அலங்காரக் கல்லறைமீது எழுந்தனவாகவே தெரி கின்றன. சிறியகோயில்கள் குருமார்கள் அல்லது உயர்நிலையில் உள்ளவர்கள் கல்லறைமீது கட்டப்பட்ட கோயில்களாகக் காட்சி அளிக்கின்றன. இந்தக் காரியங்கள் சரியாக இருந் தாலுங்கூட அங்குக் கோயில் அருகில் காணப்படும் குழிகள் சவக்குழிகளா என்பது ஐயத்திற்கிடமானவையேயாகும்.*

ஆறு முதன்மையான கோயில்களிலும் உள்ளே இருக்கும் உள் அடைப்புக்கள் அதே தரைப்படத்தின்மீதே கட்டப்பட்டுள்ளன. ஒரு, செங்குத்துக் கோட்டிற்குச் செங்கோணத்திலுள்ள பகுதி ஒரு சதுரத்தை வெளிப் படுத் துகிறது. ஒவ்வொரு பக்கமும் துருத்திக்கொண்டிருக்கும் நீண்ட சதுரத்தை இணைந்ததாய் இருக்கிறது. இவ்வாறு இந்தக் கோயில் இருபது கோணத்தையுடையதாய் முழுவதும் கிரேக்க சிலுவை வடிவில் கோணங்கள் துருத்திக் கொண்டிருக்கின்றன.

திருக்கோவிலின் உடம்பும் கோயிலின் கனசதுரத் திண் மமும் அதன் உபபீடதளத்தின்மீது அமைந்திருக்கின்றன. உப்பரிகை மீது இரண்டாவதாக இருக்கும் உபதளத்தின்

---

* Those interested in this question are referred to the article by J. C. Van Eerde; Hindu Javansche. en Balieche eere dienst in BiJdragen tot de Taal; Land - en Volkenkunde Van Ned - Inde, Part 65 (1911) P. I.and follg.PP.

மீது மேற்கூரை அமைந்திருக்கிறது. சிவன் கோயிலில்மட்டும் இந்தக் கீழே இருக்கும் உபதளம் மிக நன்முக அலங்கரிக்கப் பட்டிக்கிறது. மாடங்களில் சிங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. பின்னுள்ள சுவர்களில் காணப்படும் மாடங்களில் அழகான மரங்களின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அது புடைப் புருவச் செதுக்குச் சிற்பமாகக் காணப்படுகிறது. இதற்குக் கைப்பிடிச் சுவர்கள் உண்டு. அது மேற்றடம் முழுவதையும் சூழ்ந்துள்ளது. கைப்பிடிச் சுவரின் வெளிப்புறம் தேவகன்னி யர்களின் அழகுருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இத்தெய்வ மகளிரின் உருவங்கள் இசைமிழற்றி நடனம்ஆடிநிற்பதுபோல் காணப்படுகின்றன. உட்புறமுள்ள சுவர்களில் இராமாயணத் தில் உள்ள காட்சிகள் செதுக்கப்பட்டுள்ளன. இவை கல்லில் புடைப்புற்றுச் செதுக்குச் சிற்பமாகச் செய்யப்பட்டுள்ளன.

**இராமாயணமும் - சாவகமும்**

சாவகத்தைப் பற்றிய குறிப்புக்கள் வடமொழியில் உள்ள வான்மீகி இராமாயணத்தில் காணப்படுவதாகக் கூறப் படுகிறது. இராவணன் சீதையைக் கவர்ந்து செல்கிறுன். இராமன் அவளைத் தேடி அவள் இருக்கும் இடத்தை அறிந்து வருமாறு சுக்கிரீவனை அனுப்புகிறுன். அப்பொது இராமன் தீவுகளில் ஏதேனும் ஒன்றில் இராவணன் சீதையை ஒளித்துவைத்திருக்கவேண்டும் என்று கருதிச் சுக்கிரீவனுக் குத் தேடிப்பார்க்க வேண்டிய இடங்களைப் பற்றி விவரிக் கின்றுன். அவற்றில் ஒன்று இந்தோ சீனவுமாகும். பொற் சுவர்களாலும் வாயிற்புறங்களாலும் சூழப்பட்ட சுவர்ணத்தீவை அடைந்ததும் அழகிய பொற் சுரங்கங் களையுடைய யவத் தீவைக் காண்பீர்கள். அதற்கப்பால் சிசிரபர்வதம் இருக்கிறது. அது மிகுந்த உயரமுள்ளது அங்குத் தேவர்களும், வானவர்களும் வசிக்கின்றனர், என்று உரைக்கின்றுன்.

இராமாயணத்தில் உள்ள இப்பகுதி பிற்காலத்தில் உள்ள ஆசிரியர்களின் இடைச் செருகல் என்று பல அறிஞர்கள் கருதுகின்றனர்கள். இராமாயணத்திலுள்ள பழைமையான பகுதிகள் கி.மு. 500 ஆண்டுகளுக்கு முன்னுள்ளவை. கி. மு. இரண்டாம் நூற்றாண்டிலும் அதற்கு பின்னரும் யவத்தீவம் புகுத்தப்பட்டிருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது.

ஆனால் சாவகத்தில் இராமாயணம் என்ற ஒரு கதை உண்டு. அதற்கும் வான்மீகி கண்ட இராமாயணத்திற்கும் அதிகமான வேற்றுமை உண்டு. சில தமிழறிஞர்கள் சாவகத்திலும், தாய்லாந்திலுமுள்ள இராம கதை கம்பஇராமயணத்தைத் தழுவிய தாகக் காணப்படுகிறது என்று கூறுகிறார்கள். ஆனால் அங்குள்ள இராமகதை கம்பன் கண்ட கற்பனைகளையெல்லாம் விலக்கி விட்டு இயற்கையைத் தழுவிய தாய்க் கேற்ற காணப்படுகிறது.

இராமன் வடநாட்டு ஆரியன். இராவணன் தென்னாட்டைச் சேர்ந்த நாகர்குலத் தலைவன். இராமன் வடநாட்டு வைணவன்; நெற்றியில் நாமம் தீட்டியவன்; இராவணன் தென்னாட்டுச் சைவன். சிவபத்தன்; நெற்றியில் திருநீறு அணிந்தவன். இராவணன் மனைவி சிறந்த சிவபத்தியுடையவள். இராமாயணம் ஆரிய-திராவிடப்போர்; எனவே தென்னாட்டார் இராமனை வெறுத்தனர். இராமகதையை மறுத்தனர். இதனால் வடநாட்டவர் இராமனைத் திருமாலின் அவதாரமாக்கிச் சிவபத்தனாகிய இராவணனைக் கொன்ற பாவத்திற்காக இராமேசுவரத்தில் சிவலிங்க வழிபாட்டைச் செய்து பாவவிமோசனம் பெற்றான் என்ற ஒரு கதையை நாடெங்கும் பரப்பினர். சில நூற்றாண்டுகள் சென்று தமிழ் மக்களிடம் கொஞ்சம் கொஞ்சமாக இராம கதை பரவியது.

அப்பால் கம்பன் வாயிலாக இராமகதை வெளிவரவே இராமன் தமிழர்களிடம் செல்வாக்குப் பெற ஆரம்பித்தான். இராமன் சிவபத்தனுகை எண்ணப்பட்டதைக் கம்ப இராமாயணம் உறுதிப்படுத்தியது.

எனவே சாவகம் சென்ற தமிழ்மக்கள் அங்குக் கட்டிய கோயில்களில் இராமகதையைக் கல்லில் புடைச்சிற்பமாக ஆக்கியுள்ளனர். இதனிடையே தாய்லாந்தில் உள்ளவர்கள் இராமாயணம் தங்கள் நாட்டில் நடைபெற்றகதை என்றும் அங்குள்ள மன்னர்கள் இராமனுடைய நேரான சந்ததிகள் என்றும் கூறி வருகின்றனர். இதனுல் இராமாயணக் கதையைச் சித்திரிக்கும் சிற்பத்திற்கும் அந் நாட்டு மன்னர்கள் ஆதரவு காட்டி இருக்கலாம் என்று எண்ணப்படுகிறது.

நிற்க, இராமாயணக் கதையை விவரிக்கும் கல்லில் செதுக்கப்பட்ட புடைச்சிற்பம் மிக அழகுவாய்ந்தது. பெரம்பானன் கோயிலுக்கு அது பெருமையைத்தருவது. மேனுட்டுக்கலை மேதைகள் எல்லாரும் இந்தச் சிற்ப நுட்பத்தை வியந்து பாராட்டியுள்ளனர்.

## பெரம்பானன் இராமாயண புடைச்சிற்பங்களின் விளக்கம் :

I. பாற்கடலில் ஆதிசேடன்மீது திருமால் அமர்ந்திருக்கிருர். அவருக்குப் பின்னர் கருடாழ்வார் காணப்படுகிருர். அவருக்குமுன் ருஷியசிருங்கர் முழந்தாளில் நின்றுகொண்டு யாகத்தை நடத்துகிருர். தசரதனுக்குப் பின்னர் அவனுடைய மூன்று பட்டத்தரசிகளும் நிற்கின்றனர்.

II. தசரதன் தன் பட்டத்தரசிகளில் ஒருத்தியுடன் தன் மக்களுள் ஒருவனுடைய திருமணத்தைப்பற்றி ஆலோசனை நடத்துகிருர். பின் அணியில் திருமண வேட்

பாளன் வீற்றிருக்கிருன். அரச தம்பதியின் முன்னே நான்கு மக்களில் ஒருவன் இருக்கின்ருன். அவன் மற்ற மூவரிலும் பக்கத்தில் அமர்ந்து மகுடம் சூடி இருப்பதனுல் இராமன் எனக் காண முடிகிறது.

III. விசுவாமித்திரன் அரண்மனைக்குள் பிரவேசிக்கிருன். இராட்சதர்களுக்கு விரோதமாக இராமனுடைய ஆதரவை நாடுவதற்காக வந்துள்ளான். தசரதன் அவனை வரவேற்றுக் கௌரவித்து ஓர் உயர்ந்த இருக்கையை அளிக்கின்ருன். அரசனும் அவனுடைய பட்டத்தரசிகளும் விசுவாமித்திரமுனிவனை வணங்கித் தம் இருக்கையில் அமர்ந்துள்ளனர்.

IV. விசுவாமித்திரன் இராமனுடனும் அவன் தம்பி லட்சுமணனுடனும் காட்டுக்குப் போய் இராட்சசியான தாடகையால் தொல்லைக்கு ஆளாதல், இராமன் தாடகையோடு சச்சரவிடல், அவள் பெண்ணுக இருந்ததால் அவளை அவன் கொல்லாது விடுகிருன். ஆனுல் இறுதியாக அவளை இம்சிக்கிருன். அவ்வாறு செய்யாவிட்டால் அவள் அவனைத் தொல்லைப்படுத்தாமல் விடமாட்டாள் என்று எண்ணுகிருன்.

V. அப்பால் அனைவரும் விசுவாமித்திரனின் ஆச்சிரமத்தை அடைகின்றனர். ஆச்சிரமத்தில் யாகம் நடைபெறுகிறது. இதன் நோக்கம் இராமன் இராட்சசர்களைத் தோல்வியுறச் செய்வதும் அவர்களின் தலைவர்களில் ஒருவனுகிய மாரீசனைக் கடலில் எறிந்து ஏனையோர்களை வதைப்பதும்.

VI. இராமன் ஜனகமன்னன் வில்லை வளைத்தல். அருகில் லட்சுமணன் நிற்றல். ஜனகனைவிட்டு இலட்சுமணன் விசுவாமித்திரன் ஆகியவர்களையும் மற்றவர்களையும் பார்த்தல். வலதுபுறம் சீதை தன் தோழிமார்களுடன் நிற்றல்.



இராமன் வில்லை வளைததல் இராமாயணச் சிற்பம். (VIII)
பெரம்பானன் சிவன் கோயில்

(பக்கம் 113 - பார்க்க)



இராவணன் சீதையைச் சிறை பிடித்தல், இராமாயணச் சிற்பம் (XXI)
பெரம்பானன் சிவன் கோயில்

(பக்கம் 116 - பார்க்க)



மகாதேவர் (சிவபெருமான்) படிமம்
பெரம்பானன்

(பக்கம் 130 - பார்க்க)



போரோபுதூர் பௌத்த கோயில் • (பக்கம் 146 - பார்க்க)



போரோபுதூர் கோயிலின் தரைப்படம்!
(பக்கம் 147 - பார்க்க)

VII. அப்பால் சீதையை மணத்தல். தசரதன் திருமணச்சடங்கில் கலந்துகொள்ளல். அப்பால் அவன் தானும் தன் மக்களும், புதிதாய் வந்த மருமகளுடனும் தன் அரண்மனைக்கு ஏகல். (இந்தக் கதையை விளக்கும் சிற்பத்தில் இடதுப்பக்கமிருந்து காணப்படும் இரண்டாவது கல் அதனுடைய இடத்தில் இருக்கவில்லை). வழியில் பரசுராமனைச் சந்திக்கின்றனர். அவன் இராமன் ஜனகனுடைய வில்லை வளைத்ததைக் கேள்விப்பட்டிருக்கிறான். இப்பொழுது அவன் தன்னுடைய வில்லை முறியும் வரை அதை வளைக்கமுடியுமா? முடியுமானால் தான் சாகத் தயார் என்று சவால் விடுகிறான்.

VIII. இராமன பரசுராமனுடைய வில்லை வளைத்து அதை முறித்து வெற்றி பெறுகிறான். ஆனால் இராமன் பரசுராமனுடைய உயிரைப் பறிக்கவில்லை. ஆனால் அதற்குப் பதிலாக அவனிடத்தில் உள்ளவற்றையெல்லாம் துறந்துவிடும்படிகேட்டான். பரசுராமன் அவன் பெற்றிருந்த சுவர்க்க பதவியையும் துறக்கிறான். இராமன் அதை வாங்கிக்கொண்டு செல்கிறான்.

IX. இராமனுக்கு முடிசூடத் தசரதன் முடிவுசெய்கிறான். அரண்மனைக்கு வெளியே யாகங்களெல்லாம் நடைபெறுகின்றன. நகரம் அலங்கரிக்கப்பட்டுள்ளது. அவனது பட்டத்தரசிகளில் ஒருத்தியான கைகேசி அரண்மனைக்குள் புகுகின்றாள். அவள் முன்னர்த் தனக்குத் தசரதன் அளித்த இரு வரங்களை நினைப்பூட்டி அதை நிறைவேற்றும்படி கேட்கிறாள். தசரதன் இணங்குகிறான். வரத்தில் ஒன்று இராமனை நாட்டைவிட்டு விரட்டுவது; பிறிதொன்று தனது வயிற்றில் பிறந்த மகன் பரதனுக்கு முடி சூட்டுவது தசரதன் வாக்குப் பிறழ வழி இன்றிச் சம்மதிக்கிறான்.

X. இராமன் ஒரு கோயிலில் சீதையோடு முடிசூட்டும் வைபவம் பற்றி இரவு முழுதும் பேசிக்கொண்டிருக்கிறான். இந்தப் புடைச் சிற்பத்தில் குறிப்பிடும் இரண்டாவது நபர் (தவறாக இருக்கிறது) அஃது இலட்சுமணனும், சீதையும் அல்லர். அதிகாலையில் அந்தணர்கள் அவனைக் குளிப்பாட்டவும், ஆடையணிகள் அணியச் செய்யவும் வருகின்றனர். இதற்கிடையில் நகர்முழுவதும் மகிழ்ச்சி நிறைந்து நிற்கிறது. எங்கும் நாட்டியப் பெண்களின் கூட்டம் காணப்படுகிறது. இசை முழக்கம் எங்கும் ஒலிக்கிறது. எங்கும் விருந்துப சாரங்கள் தயார் ஆகின்றன.

XI. இராமனுடைய வனவாசத்திற்குபபின் அரசனும் கௌசல்யாவும் (இராமனுடைய தாயும்) அரண்மனையில் துக்கத்தோடு வீற்றிருக்கின்றனர்.

XII. இராமனும் சீதையும் இலட்சுமணனுடன் காட்டிற்குப் போதல் (இந்தக் கதைகள் ஒவ்வொரு பகுதியாகத் தனித்தனியாகக் கல்லில் செதுக்கி அப்பால் ஒன்றாக இணைக்கப் பட்டது. முதலாவது சரியாக இணைக்கப்பட்டிருக்கலாம். இடைக்காலத்தில் இது வீழ்ந்து மீண்டும் இணைக்கப்பட்டிருக்கிறது. அதில் தவறு நிகழ்ந்திருக்கிறது. யானையின் முதுகுப்புறம் காணப்படவில்லை).

XIII. தசரதன் மரித்து அவனுடைய உடல் எரியூட்டப்படுகிறது. (இராமன் பெற்ற வனவாசத்தால் தசரதன் துயருற்று இறக்கிறான். இந்த வைபவம் சிற்பத்தில் சரியாக விளக்கப்படவில்லை).

XIV. பரதன் இராமனைத் தேடிக் காட்டிற்கு வருகிறான். நாட்டிற்குத் திரும்பிவந்து அரசபதவியை ஏற்கும்படி இராமனைக் கேட்கிறான். இராமன் மறுக்கிறான். இறுதியில்

-ர தனுக்குத் தனது பாதரட்சைகளை அளிக்கிறான். (இராம னுடைய பாதரட்சைகளை அரசிருக்கையின் மீது வைத்து இராமனுடைய பிரதிநிதியாகப் பரதன் நாடாள்கிறான்).

XV. அடுத்தது நிச்சயமற்றதாய் இருக்கிறது. ஒரு வேளை இராட்சத கரனோடு (With Khara) போரிடுவதில் சிற்பம் சரிவர இணைக்கப் பெறவில்லைபோலும். கரனோடு நடத்திய போரில் பரதனும் அவன் தம்பியும் திரும்பி வந்துவிட்டனர். இஃது இரண்டாவது சங்கடமாக இருக்கிறது. பெயரளவில் பல இளவரசர்கள் தோன்றுகின்றனர். (நான்கு சகோதரர் களும் சீதையும் உருவகப்படுத்தப்பட்டுள்ளனர்).

XVI. இராமனுடைய கதையில் சீதையும் காகமும் காணப்படுகிறது. சீதை வெளியே சில மான் இறைச்சித் துண்டுகளைக் காய வைக்கிறாள். (இங்கே அவை மரத்தின் கிளைகளில் தொங்க விடப்படுகின்றன. அதில் இரு மூக்குள்ள குரங்குகள் இருக்கின்றன). ஒரு காக்கை அந்த மாமிசத்தின் மீது ஆசை கொண்டு அதைக் கௌவிச் செல்கிறது. அப்பொழுது சீதை அதை வேட்டையாட முயல்கிறாள். அஃது அவளைக் கொத்திவிட்டுப் பறந்தோடி விடுகிறது. அவள் இராமனிடம் போய் இதைக் கூறுகிறாள். அவன் நான் முகன் கணையைக் காக்கை மீது விடுகின்றான். பறவை பறந்தோடுகிறது. நான்முகன் கணை தொடர்ந்து செல்லு கிறது. இறுதியாக அஃது இராமனிடம் அடைக்கலம் புகுகிறது. அஸ்திரம் காகத்தின் மீது அடையாளமிட் விரும்புகிறது. இராமன் அதற்கு இடம் அளிக்கிறான். அஸ்திரம் காக்கையின் கண்களில் ஒன்றைப் பறித்துவிடு கிறது. அந்தக் கணை காகத்தின் தலையில் உள்ள பொருள் மீது ஆசை கொண்டு இறுதியாக அதைக் கவர்ந்தது.

XVII. இராட்சசி சூர்ப்பணகை, இராமன் மீது காதல் கொள்கிறாள்.

(எண் XV அது காராவோடு போரிடுவதைப் பிரதிபலிக்க வேண்டுமானால் அந்தச் சிற்பப் படிவம் இங்கு வரவேண்டும்.)

XVIII. தெளிவாகச் சூர்ப்பணகை இராமன் தன்னை மானபங்கப் படுத்திவிட்டதாக இராவணனிடம் முறையிடுகின்றாள்.

XIX. சீதையை இலக்குவன் காவல் புரிகின்றான். இராமன் பொன்மானை வேட்டையாட அதைப் பின் தொடர்ந்து காட்டுக்குள் செல்கிறான்.

XX. இராமன் பொன்மானை அடித்து வீழ்த்துகிறான். இராட்சசனான மாரீசன் மாயவேடமாகிய பொன்மான் வேடத்தை உதறி விட்டுத் தனது உண்மையான தோற்றத்தைப் பெறுகிறான்.

XXI. இராவணன் சீதையை ஒரு பிராமண வேடத்தில் வந்து கரங்களைப் பிடித்துத் தூக்கி அவளது தொடைகளின் நடுவே தன் கைகளால் இறுகப்பிடித்துத் தோள்மீது வைத்துக்கொண்டு இலங்கைக்குப் போகிறான். இங்குச் சீதை மார்பில் இரவிக்கையோ, கச்சோ அணியவில்லை. அரையில் மட்டும் ஒரு சிறு ஆடை அணிந்துள்ளாள்.

XXII. இரண்டாவது போர் இராவணனுக்கும் சடாயு என்னும் பருந்திற்கும் நடைபெறுகிறது. இராவணன் முதல் போராட்டத்திற்குப் பின் சீதையை மீண்டும் ஜெயிக்கிறான். இப்பொழுது சடாயுவைத் தோல்வியடையச் செய்கிறான். அப்பால் அவள் இராவணனால் தூக்கிச் செல்லப்படுகையில் சடாயுவிடம் தனது மோதிரத்தைக் கொடுக்கிறாள்.

XXIII. சடாயு (இங்குச் சாகாது வதைபட்டுக் கிடத்தல்) இராமனுக்குச் சீதையின் மோதிரத்தைக் கொடுத்தல்.

XXIV. கவந்தனோடு இராமனும் இலக்குவனும் போரிடல். கவந்தன் தனது சாதாரணநிலையில் தனது சொந்தத் தலையோடு இரண்டாவது தலையையும் பெற்றிருப்பது போல் சிலையில் சித்தரிக்கப்பட்டுள்ளது. அஃது இந்திரனால் அவனுடைய வயிற்றுக்குள் போகுமாறு செய்யப்பட்டதாகும். கவந்தன் தோல்வியுற்றான். அவன் சாபம் நீங்கி மோட்சம் பெற்றான்.

XXV. இது திட்டவட்டமாகத் தெரியவில்லை. ஒரு வேளை பம்பைத் தடாகத்தோடு பெண் துறவி சாபரி யாக இருக்கலாம். முதலையைப் பாணத்தால் அடித்தல் கதைகளில் காணப்படாத சம்பவமாக இருக்கிறது. இங்குக் காணப்படும் குரங்கு அனுமானாக இருக்காலம். அஃது இராமனுக்காக வேவு பார்த்துக்கொண்டிருக்கலாம்.

XXVI. இராமனை அனுமான் சந்தித்தல். இரு சகோதரர்களும் அனுமானால் வழிநடத்திச் செல்லப்படல். குரங்குகளின் அரசன் சுக்கிரீவனை அண்டுதல். அவன் அவனுடைய சகோதரன் வாலியால் மனைவியையும் நாட்டையும் இழந்து நிற்பதை அறிதல்.

XXVII. இராமன் ஒரு தீவட்டியோடு இலக்குவனை முழந்தாளில் நிற்கும்படி செய்கிறான். அதன்மீது தீவர்த்தியோடு நெருப்பு இணைந்து எரிகிறது. அது சுக்கிரீவனோடு கொண்டுள்ள ஒரு புதிய நட்பு சம்பந்தத்தின் உறுதிக்கு ஓர் எடுத்துக்காட்டுப்போலாகும். இராமனும் இலக்குவனும் சுக்கிரீவனைச் சந்தித்தல்.

XXVIII. இராமன் ஒரு வரிசையில் நின்ற ஏழு மரங்களைத் தனது பாணங்களால் துளைத்துத் தன்னுடைய பெரிய பலத்தைச் சுக்கிரீவனுக்குக் காட்டுகிறான்.

XXIX. சுக்கிரீவனுக்கும் அவனுடைய அண்ணன் வாலிக்கும் குத்துச் சண்டை நடைபெறுகிறது. இராமன் அதைப் பார்க்கிறான்.

XXX சுக்கிரீவன் வாலியால் தோற்கடிக்கப்படுகிறான். இராமனுடைய ஆலோசனைமீது மீண்டும் சண்டையிட வாலியைச் சுக்கிரீவன் அழைக்கிறான். சுக்கிரீவனுடைய உடம்பைச்சுற்றி இலைகளாலான மாலைகளைச் சுற்றிக் கொள்கிறான். இப்பொழுது இராமனுக்குச் சுக்கிரீவன் யார்? வாலி யார்? என்று எளிதில் காணமுடிவதாக இருந்தது. போர் மீண்டும் நடைபெற்றது. இராமன் மறைவினின்று வாலி மீது பாணந்தொடுத்தான். வாலி வீழ்ந்தான்.

XXXI. சுக்கிரீவன் மீண்டும் குரங்குகளின் அரசனாகிறான். அப்பால் மீண்டும் தன் மனைவியைப் பெறுகிறான். அப்பால் குரங்குகளை வேறு வழிகளில் இராமன் ஈடுபடுத்திக் கொள்கின்றான்.

XXXII. இராமன் இலக்குவன் ஆகியவர்கள் சுக்கிரீவனோடு கூடி ஆலோசனை நடத்துகிறார்கள்.

XXXIII. ஒரு யுத்தசபை அமைக்கப்படுகிறது.

XXXIV. சீதையைத் தேடுவதில் குரங்குகளில் முக்கிய தலைவனாகத் தன்னை வைத்துக் குரங்குகளை எங்கெங்கு அனுப்புவது என்று திட்டமிடுவதில் தன்னுடைய ஆலோசனையைக் கேட்டு நடக்குமாறு சுக்கிரீவன் இராமனிடம் வேண்டிக்கொள்கிறான். இராமனுக்குப் பின் குரங்குகளின்,

அரசிகள் இருக்கிறார்கள். அவர்கள் மனிதத் தோற்றத்தில் காணப்படுகிறார்கள். இங்குள்ள குரங்குகளின் அரண்மனைக் காட்சி ஒரு வேடிக்கையாக இருக்கிறது.

XXXV. அனுமான் சீதையைச் சந்திக்கிறான். சீதை முதல் தடவையாக அனுமானை இராமனுடைய பணியாளாகப் பார்க்கிறாள். அவன் மறைவாக ஒரு சோலையில் காணப்படுகிறான். அங்கு அனுமான் அவளுக்கு எங்கு நாம் இருக்கிறோம் என்பதை விவரிக்கிறான் (அல்லது அவன் எப்படி அங்கு வந்தான் என்பது போன்றவைகளைக் கூறிக் கொண்டிருக்கலாம்) சீதை விபீடணன் மகள் கலாவின் அருகில் இருக்கிறாள்.

XXXVII. அனுமான் அரக்கர்களால் முற்றுகை இடப்படுகிறான். வாலில் நெருப்பு மூட்டப்படுகிறது. அரக்கர்கள் வாலில் முரட்டுத் துணிகளைச் சுற்றுவதில் பெரிதும் ஈடுபட்டிருந்தனர்.

XXXVIII. (துணிகளின்மேல் எண்ணெய் ஊற்றப் பட்டு வாலில் தீவைக்கப்பட்டது). அனுமான் வருத்தமுறுவதுபோல் காட்டுகின்றான். அவன் வாலை உயிருள்ள தீவட்டி போலாக்கி நகரிலுள்ள கூரைகளின் மீதெல்லாம் சென்று தீ மூட்டி நகரைச் சுட்டெரிக்கிறான்.

XXXIX. அனுமான் இலங்கையினின்று திரும்புகிறான். இராமன் இலக்குவன் சுக்கிரீவன் ஆகியவர்களுக்குத் தான் இலங்கையில் கண்ட அனுபவங்களை விளக்கிக் கூறுகிறான்.

XL. இராமன் தூபமிடவில்லை. ஏனெனில் அவனுடைய விருப்பப்படி கடல் தேவதை இன்னும் தோன்ற

வில்லை. கடலைக் கடப்பதற்கு நல்ல வழி காட்டும்பொருட்டுக் கடல் தேவதையை வேண்டி நிற்கின்றான் இராமன். கடல் வற்றும்படி அவன் தீர்மானிக்கிறான். ஏனெனில் கடல் தேவதை தோன்றுவது கஷ்டமாயிருந்தது. எனவே இலங்கைக்குப் பாலம் சமைக்க முடிவு செய்தான்.

XLI. குரங்குகள் பாலம் சமைக்கக் கற்களையும் பாறைகளையும் கொண்டுவந்து குவித்தன. மீன்களும், கடல் நிலைகளும் துணை நின்றன.

XLII. பாலம் கட்டிமுடிந்து விட்டது. இராமன் இலக்குவன் சுக்கிரீவன் முதலியவர்கள் வானரப் படைகளோடு பாலத்தின் மீதேறி இலங்கைக்குச் செல்கிறார்கள்.

**பனாதரனில் சைவத்திருக்கோயில்**

பனாதரன் என்னும் இடத்தில் பாங்குடன் எழுந்த சைவத் திருக்கோயில் தொகுதிகள் கிழக்குச் சாவகத்தில் நல்ல பொற்காலத்தில் பூத்த எண்ணற்ற நினைவுச் சின்னங்களுள் ஏற்றமும் எழிலும் இயைந்த அரிய கோயில்களாகும். கிழக்குச் சாவகத்தில் ஒளிவிட்டோங்கிய உன்னதமான கோயிற்றொகுதிகள் சாவகத்தின் ஏனைய பகுதிகளில் காணப் படும் கோயில்களினின்று முற்றிலும் மாறுபட்டதாய் விளங்குகின்றன. இஃதன்றி இங்கு ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத பல்வேறு காலங்களில் எழுந்த பல்வேறு வகையான கோயில்களும் உள்ளன. பனாதரன் கோயில் தொகுதி பதினோந்தாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலே தோன்றியதாகக் கருதப்படுகிறது. ஆனால் இன்று பனாதரனில் பிரதான கோயிலின் அடித்தளமட்டும் எஞ்சி நிற்கின்றது. அது சரவடிவில் மூலைகள் திரிபுற்றதாய்த்

திகழ்கிறது. மேற்றளத்தின் கீழே இராம காதை சித்திரிக்கப்பட்டுள்ளது. ஆனால் உலகப்பிரசித்திபெற்றதாய் விளங்கும் பெரம்பானன் சிற்பச் சிறப்பிற்கு இவை ஈடாகமாட்டா. இந்த இராமாயணச் சிற்பத்தில் நடுவில் திரிபுற்ற உருவமுள்ள சிற்பங்களும் சித்திரிக்கப்பட்டுள்ளன. மேலே கிருஷ்ணுயணம் தொடர்ந்து அழகுறச் சித்திரிக்கப்பட்டுள்ளது. இந்தக் கோயில் சிற்பங்களில் சிறந்த வீரவாழ்க்கை சித்திரித்திருப்பதோடு காதல் வாழ்க்கையும் ஆங்காங்கே காணக்கிடக்கின்றன. இங்குப் புகழ்பெற்ற வாயங் (wayang) அரங்கம் போன்று இயற்கைக்கு முரணுன பல உருவங்களும் சித்திரிக்கப்பட்டுள்ளன. அலங்கார அணிகள் அனைத்தும் அற்புதமாகச் சிற்ப இலக்கண விதிகளுக்கு ஏற்ற சீருடன் சித்திரிக்கப்பட்டுள்ளன. துவார பாலகர்களின் உருவங்கள் கூடச் சிறப்புடன் திகழ்கின்றன. தமிழகத்தின் சிற்பச்சாயல்கள் இங்குள்ள சிற்பங்களில் நன்கு பொலிகின்றன என்று அறிஞர்கள் பலரும் கருதுகின்றனர்.

சாண்டிபனுதரன், பெரம்பானன் ஆகிய இருபெரும் கலைக்கோயில்களும் கிழக்குச் சாவக நாட்டின் இரு பொற்களஞ்சியமாகக் கருதத்தக்கனவாகும். கலைஞர்களின் கருத்திற்கும் கண்களுக்கும் சுவைதரும் விருந்தாகும். நிமிர்ந்து கெம்பீரமாக நின்ற திருநிறை பெருங்கோயில்கள் சமயபக்தர்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்வனவாய்க் காணப்பட்டன. இன்று அவை அழிவுற்ற நிலையில் காணப்படினும் அதன் அமைப்புக்களும் அடித்தளமும், சிதறிக்கிடக்கும் சிற்பவேலைப்பாடுகளும் அதன் பண்டைய சிறப்பை நன்கு எடுத்துக்காட்டுவனவாய்த் திகழ்கின்றன. பெரம்பானன் சாண்டிபனுதரன் என்ற இரு சிவன் கோயில்களிலும் செதுக்கப்பெற்றிருக்கும் இராமகாதை மிகமிக

அருமைவாய்ந்தவைகளாக அறிஞர்களால் மதிக்கப்படு கின்றன.

இவ்விரு பெருங்கோயில்களிலும் செதுக்கப்பட்டிருக்கும் கதை ஒன்ருனலும் வெவ்வேறு முறையில் விவரிக்கப்பட் டுள்ளன. கி.பி. 1000ஆம் ஆண்டிற்கு முன்னர்த் தீட்டப்பட்ட இக்கதை கல்லில் புடைச்சிற்பமாக வடித்தெடுக்கப்பட்டுள் ளது. இது துணியில் தீட்டப்பட்ட ஓவியமாகவோ, மரத்தில் செதுக்கப்பட்ட சிற்பமாகவோ இருந்தால் அந்நாட்டின் தட்ப வெப்ப நிலைக்கு நீண்டநாள் நிலைத்திருக்க முடியாது. எனவே சாவக மக்கள் மிகுந்த அறிவுக்கூர்மையோடு இராமகதையைக் கல்லில் வடித்தெடுத்ததால் எல்லாவிதமான தட்பவெப்ப நிலையையும் இயற்கையின் கோபத்தையும் எதிர்த்து நின்று இன்றும் பொன்ருத எழில் மிக்க சிற்பங்களாய் இலங்கு கின்றன. இந்தச் சிற்பங்கள், இரண்டிரண்டு பாணிகளாக ஒளிர்கின்றன. ஒன்று இந்தோ சாவகப்பாணி; மற்ருென்று இந்தோனேசியப்பாணி. இவை மேனுட்டறிஞர்கள் பாராட் டைப் பெற்றுள்ளன.† பல, கலை ஆராய்ச்சியாளர்கள் பெரம்பானன், பனுதரன் ஆகிய இரு இடங்களிலும் ஒளிரும கலைக்களஞ்சியங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்து இருக்கிருர் கள். பெரம்பானன் இராமாயணச் சிற்பக் காட்சி நிச்சயமாக ஒரு கலை நுட்பம் வாய்ந்த சிற்பச் செல்வமேயாகும்.

* The extravagant fables of the exploits of Rama's monkey allies are told almost in the spirit of burlesque and the imagination of the sculptores sometimes runs wild in trying a depict the horrors of the trackless jungles and their demon inhabitants—Brandes Beschrijving Von zandi Singasari (1909) Plates 28, 29, 30.

† Indian Sculptors and Paintings—E. B. Havell-P. 133 Plate XXXIX and XL.

பனுதரன் கோயில் சுவர்களில் சித்திரிக்கப்பட்டுள்ள சிற்பத்தின் ஏறுமாருன வடிவின் பெருந்திரளான கூட்டத்தைப் பெரம்பானன் சிற்பத்தோடு ஒப்பிட்டால், பெரம்பானன் காட்சி ஓர் ஆச்சரியப்படத்தக்க உத்தம சிற்பலட்சணம் நிறைந்த மணியாகக் காணப்படுகிறது. பெரம்பானன் "மேகக் காட்சி" உலாந்தா புதைபொருள் ஆராய்ச்சித்துறை அறிஞர்களால், அதற்கு இடை இட்டபெயர் மிகப்பொருத்தமான பெயர் என்று அறிஞர் டாக்டர் J. P H. வோகல் மிகப் பாராட்டியுள்ளார். இந்தக் காட்சிகளெல்லாம் நாம் மிக நேர்த்தியானதும் திறமைமிக்கதுமான போர்வீரர்களேயும், அச்ச மூட்டும் அரக்கர்களேயும், அதிசயமான குரங்குகளேயும் அலங்கரிக்கப்பட்ட மேகங்களோடு கூடி எல்லேயற்ற வேறுபாடுகளேயுடைய கற்பனேத்தோற்ற அமைப்பில் காட்டுகின்றன.

கிழக்குச் சாவகத்தில் உள்ள இந்தக் கோயில்களில் சித்திரிக்கப்பட்ட இந்தச் சீரிய சிற்ப அலங்காரங்கள் மிகவும் போற்றத்தக்க முறையில் உருவாக்கப்பட்டுள்ளன. இவை முற்றிலும் உண்மையான இந்தோனேசிய முறையில் உள்ளன. திரு உருவங்கள் மத்திய சாவகத்தில், முதல்தரமான இலக்கியங்களில் சிறப்பித்துக் கூறும் இந்து சாவக முறையில் கட்டப்பட்ட திருவுண்ணுளிகையிலும் பெட்டகக் கோயில்களிலும் அழகிய மாடங்களிலும் காணப்படுகின்றன. இதனுல் சில அறிஞர்கள் வெளியே சாவகச் சிற்பிகள் தங்களின் சொந்தச் சிற்பமுறையிலும் உள்ளே படிமங்கள் இந்திய சிற்பநூல் முறையிலும் அமைத்திருக்கிருர்கள் என்று எண்ணுகிருர்கள். இந்தப் படிமங்களில் அடியில் காணும் சில சாசனங்கள் தேவநாகரிலிபியில் இருப்பதே இத்தவருன எண்ணத்திற்கு அடிப்படையாக இருக்கிறது.

சிற்பத் துறையில் நன்கு பயின்ற அறிஞர்கள் எல்லாம் சாவகத்தில் பால் போன்ற வெள்ளி வடிவில் போரோபுதூரில் செதுக்கப்பட்டிருக்கும் அரிய சிற்பம் சாவகமக்களின் சிறந்த சிற்பத் திறனை மட்டும் காட்டவில்லை. பெரம்பானனில் புடைச் சிற்பமாகக் கல்லில் கவின் பெற வடித்தெடுத்திருக்கும் பேனுமுனையால் சித்திரிக்கப்பட்ட இராமகதையே சாவகர் களின் மிகச் சிறந்த கலைத்திறனை எடுத்துக் காட்டுவதற்கு ஏற்ற எடுத்துக்காட்டாக இலங்குகிறது. கம்பனின் இராம காதையும் வான்மீகியின் இராமாயணமும், துளசிதாசனின் இராமகாவியமும் இந்தியாவில் பெற்றிருக்கும் பெருமையை விடப் பெரம்பானன் என்னும் இடத்தில் சிற்பி தன் கூரிய உளியால் கல்லில் செதுக்கிய இராமாயணச் சிற்பங்கள் ஒப்புவமையற்றனவாய் மிளிர்கின்றன. இதற்கு ஈடு செய்ய இந்தியாவில் எங்கும் சிற்பமும் இல்லை; காவியமும் இல்லை. ஆந்திர நாட்டிலுள்ள விஜயநகரத்தின் ஹாஸரா இராம சுவாமி கோயிலில் காணப்படும் இராம கதையும் நமக்குத் தெரியும். அஃது அழகுற அமைக்கப்பட்டிருக்கிறது. அதில் உயிரும் உணர்வும் உண்டு என்று போற்றப்படுவதும் நாம் அறிவோம். ஆனல் அது சாவகச் சிற்பிசித் திரித்துக் காட்டிய சிற்பத்தோடு ஒப்பு நோக்குவது சிறு பிள்ளைத் தனமானது. இதைப்பற்றி அறிஞர் டாக்டர் வோகல், நமது கருத்தை முற்றிலும் ஒப்புக்கொண்டிருப்பது சிந்திக்கத் தக்கதாகும்.*

*"The Rama reliefs which are found on the Hazara Ramaswami temple of Vijayanagar have been described as "beautifully exceuted and carved with great life and spirit'' But how childish and insipid art those sculptures compared with the rendering of the same subject by the Javanese artist. Where as the Borobudur sculptures are supreme in

பெரம்பானன் உபதளத்தில் - கோயிலின் அடியில் தெய்வங்களின் திருவுருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. (ஒரு வேளை தெய்வீக அரச சின்னங்களையுடைய அரசர்கள் போலும்.) புத்தர் உட்கார்ந்திருப்பதுபோல் தெய்வ உருவங்கள் உள்ளன. இந்த உருவங்கள் எதுவாக இருக்கும் என்று இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லை. என்றாலும் இவைகள் இந்து சமயத் தெய்வங்களின் பல்வேறு மூர்த்தங்களாக இருக்கலாம் என்றே எண்ணப்படுகின்றன. நான்கு பக்கங்களிலும், மாடிக்குட் செல்வதற்கென்றே நான்கு படிக்கட்டுக்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மாடியில் உள்ள சுவர்களும் குறிப்பாகக் கைப்பிடிச் சுவர்களும் நன்றாக அலங்கரிக்கப்பட்டுள்ளன. இஃதன்றி மற்றைய கோயில்களும் இதே மாதிரி கட்டப்பட்டுள்ளன. ஆனால் அவற்றில் நுணுக்கமான வேலைப்பாடுகள், அதன் பரப்பிற்கேற்பக் குறைவாகவே காணப்படுகின்றன. இவ்வாறு இலங்கும் சிவன் கோயில் சிறிதாக இருப்பினும் அதில் பல கோணங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அதோடு முன்னே துருத்திக் கொண்டிருக்கும் மாடிப்படிகளும் காணப்படுகின்றன. கோயிலின் வடக்கு வரிசையில் உள்ள மேற்றளத்

---

rendering the Buddhist ideal of mental repose, those of Parambanan picture the heroic deeds of the divine Rama with great vigour and perfect lucidity. Mr. Havell which reproducing several of the Perambanan reliefs, rightly refers to them in terms of high praise" - The Relation between the art of India & Java by Dr. J. PH. Vogel.- London 1925.

V. A. Smith History of fine art in India and Ceylon Oxford.

E. B. Havell, "Indian Sculpture and Paintings - London 1908.

தில் இருபது கோணங்கள் அமையும்படி கட்டப்பட்டுள்ளன. கிழக்கு வரிசையில் கீழேயுள்ள உபதளத்தில் ஒரு சாதாரண சதுரந்தான் காணப்படுகின்றது. திருமால், நான்முகன் கோயில்கள்கூடக் கைப்பிடிச் சுவர்கள் உட்புறம் அலங்கரிக்கப்பட்டிருக்கும் மாடம் போல் கலைக்காட்சிக் கூடமாக விளங்குகின்றன. கோயில்களின் வாயில்கள்மீது பெரிதும் சிறிதுமாய்க் கோபுரங்கள்போல் அலங்கரிக்கப்பட்டுள்ளன. ஓர் உயர்ந்த மேடைமீது ஒரு பெரிய வாயில் உள்ளது. அதற்குப்பின் மேலே இருந்து கீழே கலைக்காட்சிக் கூடத்திற்கு இறங்குவதற்குச் சிறிய வாயில் உள்ளது. அல்லது நான்காவது வாயில் மூலம் இரண்டாவது மாடிப் படிக்கு ஏறிச்செல்லவேண்டும். அது கோயிலின் உட்புறத்திற்கு இட்டுச் செல்கிறது. நுழைவாயில்கள் படிக்கட்டுகளின் அடிப்பாகத்தில் அமைந்திருக்க வேண்டும். எல்லாம் விவரித்துக் கூறமுடியாத முழு நிறைவாகக் கட்டப்பட்டு ஒளிமிக்கு விளங்குகின்றன என்ற உணர்ச்சியைத் தாங்கி நிற்கின்றன.

பெரம்பானன் இந்து சாவகக் கலை தனது மலர்ச்சிப் பருவத்தின் உச்ச நிலையை உந்தியுள்ளது. அதனுடைய மாபெரும் அலங்காரச் செல்வம், உண்மையில் அதன் உச்ச நிலைக்கும் ஒருபடி மேலான நிலையை அடைந்துள்ளது என்று கூட உரைக்கும் நிலையில் உள்ளது. அதற்குச் சில விவரங்கள் கூடக் காட்டமுடியும். மேலும் இது போரோபுதூர், சாண்டி மெண்டோயட் (Tjandi Mendoet) ஆகியவற்றின் சாயல் ஒளிரும் மத்திய சாவகத்தின் முதல்தரமான சிற்ப நலம் வாய்ந்த கலைக்கும் சாண்டி லோரோ சோங்கிராங் கலைகளுக்கும் இடையே எழுந்துள்ள ஒரு மாறுதல் அமைப்பாக விளங்குகிறது. இது மாதராம ஆட்சியின் போது

எழுந்து பின்னர் வீழ்ச்சியுற்றதாகும். பெரம்பானன் பெருந் திருக் கோயில் பத்தாவது நூற்றுண்டில் அடிப்படையிட்டுச் சீர் பெற்றெழுந்து நீண்ட காலம் பேரும் பெருமையும் பெற்று விளங்கியது. அதனுடைய திருப்பணி முழுவதும் நிறைவு பெறும் முன்னரே அது கைவிடப்பட்டதாகத் தெரிகிறது. சில பகுதிகளில் அலங்காரங்கள் நிறைவடையாமல் இருப்பதைக் கொண்டே இம்முடிவிற்கு எளிதில் வரமுடியாது. அதனோடு ஏனைய கோயில்களில் உள்ள இதையொத்த பகுதிகளை ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது அலங்காரங்கள் நிறைவு செய்யப்படவில்லை என்பதைத் தெளிவாகக் காணமுடிகிறது. உள் தொலைவாக வட்ட வடிவமாகச் சூழப்பட்டிருக்கும் சுவரின் எல்லா ஒப்பனைகளும் இவ்வாறே குறையுடையதாக இருக்கின்றன.

திருக்கோயிலின் உட்புறக் காட்சியைப்பற்றிச் சிறிது நோக்குவோம். அவை அனைத்தும் ஒரு தனித்த மண்டபத்தில் உள்ளடங்கிச் சிவன் கோயில் மட்டும் நான்கு தனிப்பட்ட கோயிலை உள்ளடக்கிக் கொண்டிருக்கிறது. அவற்றில் ஒன்று மட்டும் பெரியது; ஏனைய மூன்றும் சிறியன. பெரிய திருவறையில் சிவபெருமான் திருஉருவம் மகாதேவ உருவமாக இடம் பெற்றிருக்கிறது. சிவபெருமானே மாபெரும் ஒப்பற்ற தெய்வமாக ஒளிர்கின்றார். சிறிய திருவறையில் சிவபெருமான் மகாயோக மூர்த்தத்தில் திகழும் சிலை காணப்படுகிறது. ஏனைய சிறு சிறு கருவறைகளில் கணேசர் திரு உருவமும், சிவபெருமானுடைய மனைவியாகப் பிற்காலத்தில் மாறிய துர்க்கையின் சிலைகளும் காணப்படுகின்றன. துர்க்கை எட்டுக் கரங்களையுடையவளாய்த் திகழ்கிருள். இந்திரனின் சிங்காசனத்தைப் பறித்த மகிசாசூரனுடன் போரிடக் கைகளில் ஒளிமிக்க ஆயுதங்களை வைத்துக

கொண்டு வீராவேசமாக நிற்கிருள். அவள் எப்பொழுதும் எருமை வாகனத்தின் மீதே ஏறி வருபவளாய்க் காணப்படு கிருள். நான்முகன் திருமால் சிலைகள் மேற்குவரிசையில் கோயிலுக்கு வெளியே இருக்கின்றன. கிழக்கு வரிசையில் உள்ள சிலைகளைப் பற்றி மேலே குறிப்பிட்டுள்ளோம்.

இச் சிவனது திருக்கோயிலில் இருபத்து நான்கு தெய்வ உருவங்கள் இருந்தனவாகத் தெரிகிறது. இதை ஆராய்ந்த குமாரி மார்ட்டின் டன்டை என்பவர் கிழக்கி லுள்ள உட்புகும் வாயிலில் தென்பக்கமாக உலோக பாலர்கள்—அஃதாவது உலகப் பாதுகாவலர்களாக அடியிற் கண்ட தெய்வ உருவங்கள் இருந்தனவாக உறுதிப்படுத்தி யுள்ளார். அஃது அடியில் வருமாறு :

1. இந்திரன், 2. பிரகஸ்பதி, 3, 4. அக்கினி, 5. அனுமான், 6, 7. எமன், 8. பிராமணஸ்பதி, 9. நாரதன், 10, 11. சூரியன், 12, 13. வருணன், 14. கார்த்திகேயன், 15, 16. வாயு, 17. காமன், 18. குபேரன், 19, சோமன், 20. விசுவகர்மன், 21, 22. சிவன், 23. நாரதன், 24. இந்திரன்.

சாவகத்தில் நிலவிய சைவம் பண்டைக்காலச் சைவ மன்று. அது சமணம், பௌத்தம் ஆகிய மதங்களை எதிர்த்து வீழ்த்திச் சுமார்த்த மதத்தோடு கூட்டுறவு கொண்டது. தனது சமய சாத்திரங்களைத் தேவநாகரியிலும் வடமொழியிலும் வரைந்தது. அதனோடு இந்து மதம் என்ற பொதுப்பெயரோடு எழுந்த இந்தத் தென் இந்திய சைவத் தில் சில வட இந்திய சுமார்த்த சமயக் கொள்கைகளும் அஃதாவது பிராமணியக்கொள்கைகளும் கலந்ததுண்டு. பிற் காலத்தில் பௌத்த மதத்தைக்கூட இந்து மதம் என்று

கூறப்பட்டுள்ளது. இதனைச் சுவாமி விவேகானந்தர்கூடத் தம் நூலில் குறிப்பிட்டுள்ளனர். இதனால் இதனை ஐரோப்பியர்கள் சைவத்தைக் காட்டிப் பிராமணியம் என்று கூறியுள்ளார்கள். இதனை அறிஞர் டாக்டர் ஜே. பி. எய்ச். வோகல் (Dr. J. Ph. Vogel) என்பாரும் தம் நூலில் ஏற்றுக் கொண்டிருக்கிறார்.*

### சிவபெருமான்

பெரம்பானன் கோயிலில் நடுப்பாகத்தில் சிவபெருமான் திருவுருவம் ஒன்றுளது. இத்திருவுருவம் தமிழகத்தில் உள்ள சிவபெருமான் சிலை, மகாதேவன் சிலையினின்றும் செப்புப் படிமங்களினின்று மாறுபட்டதாய்க் காணப்பட்ட போதிலும் மிகவும் அழகுவாய்ந்த அற்புதமான வடிவம் உடையதாய்த் திகழ்கிறது. இஃதன்றி மற்றொரு சிறு திருவறையிலும் ஒரு சிவனுடைய மற்றொரு மூர்த்தத்தைக் காட்டும் (மகாயோகியின்) சிலை உள்ளது. ஆனால் இங்குக் காட்டப்பட்டுள்ள உருவம் முதலாவது குறிப்பிடப்பட்

* The Cumulative evidence which we have been able to adduce points to Southern India as the homeland of Indo-Javanese Culture. The inscriptions however mentioned in this Connection are all Brahmanical. If now we turn to the two earliest Buddhist inscriptions known to exist in Java it is surprising to find that they are written in a Character which has been described as an early type of Nagari and which decidedly originates from Northen India. Are we then to assume that the Hindu emigrants who introduced Buddhism into Java came from North, as the promoters of Brahmanism in all likelihood hailed from the South of the Indian contenent? — The Relation between the Art of India and Java — Dr. J Ph. Vogel. London-1925.

டிருக்கும் சிவபெருமானின் (மகாதேவனின்) சிலையாகும். இங்கு இஃதன்றிக் கணபதியின் சிலையும் காணப்படுகிறது. அதனோடு லோரோசாங்கிராங் துர்க்கை மிகக் கெம்பீரமாக வாளேந்தி எட்டுக்கரங்களுடனும் கோபத்தால் திகழும் கண்களுடனும் காட்சி அளிக்கின்றாள். இந்திரனுடைய இருக்கையைக் கவர்ந்த மகிசாசூரனை வென்ற காட்சியாக இது சித்திரிக்கப்பட்டுள்ளது. தெற்கில் நான்முகன் திருஉருவம் மலமுற விளங்குகிறது. இத்திருக்கோயிலில் குடிகொண்டிருக்கும் சிவபெருமானின் அற்புதமான சிற்ப வடிவத்திற்கு முன்னே ஓர் எழில் மிகவாய்ந்த நந்தியின் உருவம் உள்ளது.

இந்தச் சிரிய சிவபெருமானின் சிற்பவடிவம் கண்கவர் வனப்புடையதாய்த் திகழ்கிறது. முகத்தில் சாந்தம் நிலவுகிறது. இத்திருவுருவத்தில் நான்கு கைகள் காணப்படுகின்றன. இரண்டு பழுதுற்ற நிலையில் உள்ளன. மார்பில் பூணூலும் வயிற்றில் உதரபந்தமும் காதிலும் கழுத்திலும் கைகளிலும், கால்களிலும் ஒருசில அணிகலன்கள் உள்ளன. இடுப்பில் ஆடைகளணிபெறத் திகழ்கின்றன. கைகளில் ஆயுதங்களும் தலையில் சடா மகுடமும் கபாலமுங் காணப்படுகின்றன. பீடம் தமிழகப் பாணியை அடிப்படையாகக் கொண்டு செதுக்கப்பட்டுள்ளது. இத்திருவுருவம் புடைச்சிற்பம்போல் காணப்படுகிறது. பொதுவாகக் கூறுவதானல், இந்தச் சிற்பவடிவம் தமிழகச் சிற்பவடிவங்களுக்குத் தாழ்விலாத முறையில் சாவகச் சிற்பிகளால் கைவண்ணமும் பண்பும் திகழும் வண்ணம் எழில்பெறச்

## திருமால் கோயிலில் கிருஷ்ண சிற்பங்கள்

I. அரக்கியாகிய பூதகி பாலகிருஷ்ணனை நாடுதல். கிருஷ்ணனுக்கும் அவனுடைய அண்ணன் பலராமனுக்கும் முலைப்பால் ஊட்ட முன்வருதல். அவளது முலைப்பால் நச்சு நிறைந்ததாய் இருந்தது. கிருஷ்ணன் பூதகியின் முலைக் காம்பில் வாய்வைத்துப் பாலை உறிஞ்சுவது போல் அவளது உயிருக்கு ஆதாரமான ஆவியையே உறிஞ்சி அவளைக் கொல்லல்.

II. கிருஷ்ணனைத் தூணில் கட்டிவைக்க முடிவு கட்டினாள் அவனுடைய வளர்ப்புத்தாய் யசோதை. அவள் அப்பொழுதுதான் தயிரைக் கடைந்து கொண்டிருக்கிறாள். இதற்கிடையில் கிருஷ்ணன் அதைக் குடித்திருக்கவேண்டும். ஆனால் பால் பானையை அவனுடைய தாய் நெருப்பின்மீது ஏற்றிக் கொதித்துக் கொண்டிருக்கும்பொழுது மீண்டும் குழந்தையைக் கீழே வைக்கிறாள்.

கிருஷ்ணன் இதனால் ஆத்திரம் அடைந்தான். புதிய வெண்ணெயை எடுப்பதற்கு அவன் தானே பூசி அதோடு குரங்குகளைப் பழக்கினான். அவனைத் தண்டிப்பதற்குத் தூணோடு கட்டிவைக்கிறாள். கயிறு மிகக்குட்டையாக இருக்கிறது. பல துண்டுக்கயிறுகளைச் சேர்த்து முடிந்து பார்க்கிறாள். என்றாலும் கயிறு குட்டையாகவே காணப் படுகிறது. அப்பொழுது கிருஷ்ணன் அசைவற்று நிற்கிறான். பிறகு அவன் தள்ளிக் கொண்டு போகிறான். அவனோடு தூணும் செல்கிறது. இரண்டு மரங்களுக்கிடையே சென்று மரங்களைக் கீழே தள்ளுகிறான். தூண்கள் இன்னும் இருந்தபடியே இருக்கிறது.

இந்தப் புடைச் சிற்பத்தின்மேல் பாதிப்பகுதி காணமற் போய்விட்டது. பின்னணியில் உள்ள மரம் கிருஷ்ணன் விழத்திய மரம். இரண்டுமரங்களில் ஒன்றுகப்பிரதிபலிக்கிறது.

III. இடதுபக்கமுள்ள தெங்கு மரம் ஒருபனந்தோப்பாக வெளிப்படுகிறது. அதில் வாசம் பண்ணும் கோபமான ஆவி தெனுகா ஒரு கழுதை வேடத்தில் தோன்றுகிறது. அது தன்னுடைய தோழர்களோடு பத்திரமில்லாத சோலையைக் கொடுத்தது. பலராமன் அதை முற்றுகையிட்டான். அஃது அவனை ஊஞ்சலாட்டி அவனுடைய தலைமீது திரும்பி அந்த விலங்கு மூச்சுத் திணறும் வரை ஆட்டுவித்தது. அவன் அதன்பேரில் தெங்கு மரத்தின் உச்சியில் அதை எறிந்தான். இவ்வாறு அவன் எல்லா அரக்கர்களையும் கொல்கிருன்.

IV. நான்கு மாடுமேய்க்கும் சிறுவர்கள் விளையாடிக் கொண்டிருக்கிருர்கள். அவர்களில் ஒருவன் சுருண்டுகிடக்கும் அரக்கர்களின் தலை மயிரை உடையவன். இது பரலம்பா என்னும் பூதமாகும். இது தன்னை மாடு மேய்க்கும் ஓர் இடைப்பையனுக உருவம் எடுத்து வந்து, பலராமனையும் கிருஷ்ணனையும் அழிக்கும் பொருட்டு விளையாடிக்கொண்டிருக்கும் அவர்களோடு கூடிக் காட்சி அளிக்கிறது.

V. வெளிப்படையாகப் பலராமன் தன் சுயரூபத்துடன் பெரும் போருக்குப்பின் பிரலம்பாவைக் கொல்கிருன். கிருஷ்ணன் தந்திரத்தின்மூலம், ஜோடி பார்ப்பதில் பரிகொடுப்பவன் வெற்றியைக் கொண்டாடவேண்டும் என்ற பிரலம்பாவைத் தோற்கடித்தபின் இங்குப் பலராமன் தன் முதுகின்மீது தூக்கிக்கொண்டு, அவன் தலைமீது தனது கையால் குத்தி அவனை வதைத்தான்.

VI. பசுக்களும், இடைச் சிறுவர்களும் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள் அரிஷ்டா என்ற பூதத்தை நோக்கித் திரும்பி உட்கார்ந்து கொண்டிருக்கிறான். அப்பூதம் ஒரு மாபெரும் எருது வடிவில் நின்று கொண்டிருக்கிறது. அவர்களுடைய வேதனையிலும் பயத்திலும் பசுக்கள் பருவத்திற்கு முன்னே தங்களுடைய கன்றுகளைத் தின்று கொண்டிருந்தன. பலராமன் கிருஷ்ணனுக்குப்பின் நின்று கொண்டிருக்கிறான். அவனை உதவிக்கு முன் நடக்கும் படி); கிருஷ்ணன் தன்னைச் சுட்டிக்காட்டிக் கூறுகிறான்; நான் அந்த எருதைக் கொல்லுகிறேன். இறந்த எருது இந்தச் சிற்பத்தில் • மந்தையில் திரட்டப்பட்ட எருதுகளைப் பிரதிபலிக்கிறது. அவ்வைகள் அனைத்தும் அரிஷ்டாவினால் கொல்லப்படுகின்றன. இன்னும் அரிஷ்டா ஓர் எருது தன்னுடைய கன்றின்மீது பாய்ந்து அதை வதைப்பதைப் பார்க்கிறான். அப்பால் ஓர் அரக்கன் உருவம் கீழே விழுந்து பிறகு ஓர் எருதாகச் செல்வதைக் கிருஷ்ணன் காண்கிறான். இஃது அரிஷ்டாவின் செயல் என்று கிருஷ்ணன் கண்டு அவனது கழுத்தின்மீது தன் பாதத்தை வைத்துக் கொண்டு நிற்கிறான்.

VII. ஒரு சிறு குழந்தையோடு இரு பெண்கள் விளையாடிக்கொண்டிருக்கிறார்கள்.

VIII. திரு அவர்த்தாவின் மரணம் தெளிவாகத் தெரிகிறது. முறுக்கேறிய மனிதன் (கைகள், தலைகள், கால்கள் முதலியவைகள் மேலே வியாபித்துள்ளன). திரு அவர்த்தா என்ற பூதம் கிருஷ்ணனை ஒரு குகைக்குள் தூக்கிக்கொண்டு செல்கிறது (இயற்கையாக விவரிக்கமுடியாதிருக்கிறது) கிருஷ்ணன் தன்னை மிகவும் பளுவுள்ளவனாக ஆக்கிக்கொள்கிறான். அதனால் அந்த அரக்கனால் அவனைத் தூக்கிச்

செல்ல முடியவில்லை. அரக்கனுடைய உடம்பில் ஒருவளைவு அமைக்கப்பட்டு அதில் ஒரு சிறுவன் நிற்கிறான். அந்தச் சிறுவன் கிருஷ்ணனாக அரக்கனை வதைத்து அவனை வீழ்த்துகின்றான்.

**IX.** கிருஷ்ணனும் பலராமனும் கண்கூடாகக் காட்சியளிக்கின்றார்கள். பாம்பு அரசன் காளிங்கனின் சுருண்டு கிடக்கும் உடம்பிற்குள் சிக்கிக்கொண்டு கிடக்கின்றார்கள். அவனுடைய வல்லமையால் உடம்பை விரிவுபடுத்தியதால் அவனைப் பாம்பு விடுவிக்க நேர்ந்தது. கிருஷ்ணன் தந்திரத்தால் தன்னை விடுவித்துக்கொண்டு பாம்பின்மேல் நின்று ஆடி அதைக் கொன்றான்.

**X.** ஒரு வேளை இந்தச் சிற்பத்தில் பாம்பு திறந்த வாயுடன் ஆற்றிலிருந்து வெளியே வருவதுபோலவும் காணப்படுகிறது. என்றாலும் கதையில் அகா என்னும் பூதம் பாம்பு கீழே நகர்வது போல் திறந்த வாயோடு காட்டில் காட்சி அளிக்கிறது. அங்குக் கிருஷ்ணன் மாடு மேய்த்துக் கொண்டிருக்கிறான். ஆடு மேய்க்கும் சிறுவர்கள் திறந்திருக்கும் பாம்பு வடிவமான பூதத்தின் வாயைக் குகை என்று எண்ணி அதன் உள்ளே புகுகின்றனர். கிருஷ்ணனும் உள்ளே புகுந்தான். அரக்கன் உள்ளே இருப்பவர்களைக் கொல்லத் தன் வாயை மூடிக்கொள்கின்றான். ஆனால் இப்பொழுதும் கிருஷ்ணன் தன் உடம்பைப் பெரிதாக்கிக் கொள்ள ஆரம்பித்தான். உடனே பாம்பின் தலை வெடித்தது. அதனால் ஆடு மேய்க்கும் சிறுவர்கள் காப்பாற்றப்பட்டனர்.

**XI.** ஒரு சமயம் சங்கசூடாவின் மரணம் எழுந்தது. ஓர் அரக்கனை இரு சிறுவர்கள் பின்தொடர்ந்து சென்றனர்.

அவர்களில் ஒருவன் அவனுடைய அரைக்கச்சையால் கட்டுண்டு பிடிபட்டான். மற்றொருவன் நல்ல உதைபட்டான். அந்த அரக்கன் ஒரு சிறு கபாலநெற்றி அணிகலனால் அலங்கரிக்கப்பட்டிருந்தான். ஆனால் ஒரு சங்கும் இல்லை.

இந்த அணிகலனைப்பற்றி மூல நூலில் அதிகமான விளக்கம் இல்லை. அடியிற்கண்ட ஒரு சிற்பவரிசையில் அரக்கன் அவனுடைய அரைக்கச்சையால் இறுகக்கட்டப்பட்டுக் கிருஷ்ணனால் அடக்கப்பெற்றான். ஒருவேளை இது முன் கூறிய காட்சிக்கு உரித்தானதாக இருக்கலாம். ஆனால் அஃது உயர்ந்த அளவில் சங்காசுடா இதிகாசத்தை விளக்கும் ஒரு கதையாக இருப்பது நிச்சயமற்றதாக இருக்கிறது.

XII. இரு பார்ப்பனர்கள் யாகஞ் செய்வதில் ஈடுபட்டிருந்தனர். ஒருவேளை பார்ப்பனர்களின் பிரதிநிதிகளுக்குக் கிருஷ்ணன் தூதுவர்களை அனுப்பி (தூதுவர்கள் பார்ப்பனர்களின் பின்னால் நின்றுகொண்டிருக்கின்றனர்). உணவு கேட்கும்படி செய்திருக்கலாம். (அவர்களால் அது மறுக்கப்பட்டது).

மற்றைய சிற்பப் பகுதிகளும் கிருஷ்ண சிற்பங்களைப் போல் அழகுடையவை என்று திட்டவட்டமாய்த் தீர்மானிப்பது கடினமாக இருக்கிறது.

# 8. போரோபுதூர் கோயிலும் பிற நினைவுச் சின்னங்களும்

மத்திய சாவகந்தான் சாவகநாட்டின் தலைசிறந்த சிற்பக் கருவூலங்கள் நிறைந்த இடமாக மிளிர்கின்றது. இங்கேதான் உலகப் பிரசித்தி பெற்ற போரோபுதூர் என்னும் கலைக்களஞ்சியம் நிலைபெற்று ஒளிர்கின்றது. இஃதன்றிச் சாண்டி மெண்டோயட், சாண்டிலோரே சோங்கிராங், சாண்டி சிவோய், சாண்டிபோப்ரா சாண்டிலோம்பாங் சாண்டிபிளாசஸ், சாண்டிகலசான் போன்ற கலை நலமிக்க பல சிறந்த நினைவுச் சின்னங்களும் உள்ளன.

கி. மு. மூன்றும் நூற்றாண்டிலே இங்குத் தமிழர்கள் குடியேற ஆரம்பித்துவிட்டனர். கி. பி. 1300 ஆம் ஆண்டு வரை தமிழர் நாகரிகம் நிலைத்திருந்தது. கி. பி. 4 ஆம் நூற்றாண்டில் சொர்ணத் தீவு எனப்படும் சுமத்திராவில் தென் கிழக்குப்பகுதியில் ஸ்ரீ விஜயம் என்ற ஆட்சி அரும்பியது. 7 ஆம் நூற்றாண்டில் ஜயநாசன் என்ற மன்னன் காலத்தில் ஸ்ரீ விஜயம் பெரிய பௌத்த கலாசாலையாகத் தோன்றியது. 8 ஆம் நூற்றாண்டின் இறுதியில் சைலேந்திரர் மரபினர் ஆட்சி தோன்றியது. இது மலேயாவில் தோன்றி எல்லாத் தீவுகளையும் தன் வயமாக்கிக்கொண்டது. இதன் கல் வெட்டுக்கள் பாண்டிய மன்னர்களின் சாசனங்களை ஒத்திருப்பதால் இவ்வரசர்கள் பாண்டிய மன்னர்களின் சம்பந்தமுடையவர்கள் என்று எண்ணப்படுகிறது. 8 ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த சஞ்சயன் தன் கல் வெட்டுக்களின் மூலம் சிவன் நான்முகன் திருமால் ஆகிய தெய்வங்களை அவன் வழிபட்டதாகத் தெரிகிறது.

இந்த அரசாங்கம் மஹாயான பௌத்த மதத்தை ஆதரித்தது. போரோபுதூர் பௌத்த பெருந்திருக்கோயில் இவ்வரசர்களால் கட்டப்பெற்றது. இதன் 9 மாடிகளிலும் லலித விஸ்தாரம் என்னும் பௌத்த நூலில் கண்டபடி புத்தர் வரலாறு செதுக்கப்பட்டுள்ளன. 9ஆம் நூற்றாண்டில் சைலேந்திர அரசனான பலபுத்திரதேவன் வங்கத்திலுள்ள நாலாந்தாவில் ஒரு பௌத்த விகாரத்தைக் கட்டினான். 11 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில்—இராசராச சோழன் காலத்தில் சோழர்களின் வலிமை வாய்ந்த கடற்படை இளவரசன் இராசேந்திரன் தலைமையில் சங்கிராம விசயோத்துங்க வர்மனை முறியடித்துக் கடாரம், மலைநாடு, ஸ்ரீ விசயம் சாவகம் முதலிய நாடுகளிலெல்லாம் வெற்றிக் கொடி நாட்டியது. அதன்பின் சைலேந்திரப் பேரரசு தளர்வடைய ஆரம்பித்தது. தமிழர்கள் கிழக்கு ஆசியா வெங்கும் பரவி வணிகம் வளர்த்ததோடு சமயத்தையும் கலையையும் நன்கு வளர்த்து வந்தனர்.

### கலை வளர்ச்சி

மத்திய சாவகத்திலுள்ள டியங் சமவெளியில் தமிழகத்தில் காணப்படும் மாமல்லபுரத்து இரதங்கள் என்று கூறப்படும் மாதிரிக் கோயில்கள் போன்ற ஆலயங்கள் பல காணப்படுகின்றன. குடமுனிவன் என்றும் சிவகுரு என்றும் தமிழ் வளர்த்த அகத்தியனின் குள்ள உருவமுள்ள சிலைகளும் இங்குக் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

இங்குள்ள அழகிய புரோத் பனூர் கோயில் எட்டாவது நூற்றாண்டில் அரும்பியதாக எண்ணப்படுகிறது. இந்தத் திருக்கோயிலில் திகழும் சிற்பவடிவங்கள், உலகிலே உயர்ந்தன என்ற உன்னதமான நிலை அளிக்கப்பட்டுள்ளன. இங்குள்ள

எழில் ஒழுகும் அரிய சிற்பங்களைக் கண்டு ஐரோப்பிய சிற்பக் கலைஞர்கள் பெரிதும் பாராட்டியுள்ளனர். இந்தச் சிற்ப வடிவங்கள் கெம்பீரமான தோற்றம் வாய்ந்தன. நுணுக்கமான சீரிய சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்தன.

இந்த அரும் பெரும் அற்புத ஆலயத்திலே சிறப்புகளை மரங்கள் செடிகள், மலர்கள் மரக்கலங்கள், பானை சட்டிகள் பூசாபாத்திரங்கள் ஆயுதங்கள் மக்கள் முனிவர், தேவர்கள் போன்றவைகளை உண்மை உருவங்களாகச் செதுக்கியுள்ளார்கள். இந்தச் சிற்பவடிவங்கள் மக்களோடு பேசுவது போல் காணப்படுகின்றன. • இங்குக் காணப்படும் ஒவ்வோர் உருவமும் கண்ணையும் கருத்தையும் கவர்வனவாய் அமைப்புத்திட்டத்திலே அணுவளவும் குறையாதனவாய் நிறைவுடையனவாய் நிலவுகின்றன.

இங்குச் சுமார் 1000 சிற்பத் தொடர்புள்ள கற்பாளங்கள் இருப்பதாகக் கணக்கிட்டுள்ளார்கள். இவைகளில் கல்லில் செதுக்கப்பட்ட புத்தரின் வாழ்க்கை வரலாறுகள் இந்திய பௌத்த கலாச்சார அடிப்படையிலே உருவாக்கப் பெற்றுள்ளன. இசையும் நாட்டியமும் நங்கையர்களின் உருவங்களும் மிகக்கவர்ச்சி அளிப்பனவாகும். இந்தக்கவின் பெரும் சிற்பவடிவங்கள் பாவங்களின் வித்து என்று பௌத்த நெறி அறைந்தாலும் சிற்பிக்குத் தன் சிந்தனையிலே தோன்றியவாறு அழகுப் பொருள்களை உருவாக்கச் சுதந்தரம் அளிக்கப்பட்டிருப்பதாகக் கருதப்படுகிறது.

மத்திய சாவகத்தில் பௌத்த சமயப் பற்றுமிக்க சைலேந்திரியர்களின் ஆட்சி மறைந்ததும், சைவநெறி தழைத்தோங்கத் தலைப்பட்டது. அதன் பலனைக் கி. பி. 860 முதல் 915 வரை திராவிடக் கலைகள் மறுமலர்ச்சி

பெற்றெழுந்தன. மகோன்னதமான மாபெரும் கோயில்கள் நாடெங்கும் தோன்றின. புரோத்பரூரிலுள்ள புத்தருடைய கோயிலுக்கு எதிரே பிரம்மவனம் (பெரம்பானம்) என்னும் இடத்தில் ஒரு பெரிய சிவன் கோயில் கட்டப் பெற்றது. 156 அறு மாடங்கள் நிறைந்த பிரகாரங்களைக் கொண்ட இக் கோயில் 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தட்சன் என்ற இளவரசனால் கட்டப் பெற்றதாகக் கூறப்படுகிறது. இங்கு இராமாயணக்கதை சிற்ப வடிவில் செதுக்கப்பட்டுள்ளது.

இந்தக் கோயிலின் திருவறையில் ஒன்பது அடி உயரமுள்ள சிவபெருமானின் பெரிய திருஉருவம் ஒன்று நிலை நாட்டப்பெற்றிருக்கிறது. •தமிழர் பாணியும் சாவகப் பாணியும் கலந்து கவினுற விளங்கும் இந்தச் சிற்ப வடிவம் உள்ளத்தைக் கொள்ளை கொள்வதாய் ஒளிர்கிறது. இந்த மகோன்னதமான இத்திருக்கோயில் இன்று சிதைந்து கிடக்கிறது. கி. பி. 950ஆம் ஆண்டிலே இக்கோயில் சிதைந்திருக்கலாம் என்று பல அறிஞர்கள் கருதுகிறார்கள். இதன் சிதைவிற்கான காரணம் புலப்படவில்லை.

மத்திய சாவகம் அழகிய பிரதேசம். எங்கு நோக்கினும் பச்சைப் பசேரென்று பச்சைக் கம்பளம் விரித்தாற்போன்று பசும்புற்கள் அழகுறக் காணப்படுகின்றன. எங்கும் பன்னிற மலர்களும், பழங்களும் பாங்குறத் திகழ்கின்றன. இனிமையான கரும்புத் தோட்டங்களும் கவின்பெரும் கழனிகளும் சிற்பச் சிறப்புமிக்க அழகிய கோயில்களும், சிலைகளும் அழகுறத் திகழ்கின்றன. பொற்பதுமைகளென்ன விளங்கும் ஆரணங்குகள் ஆடும் நாட்டியங்களும் ஆண் பெண் மக்களின் இனிய பேச்சும் இன்முகங்களும் பெயர்களும் தமிழகத்தை நினைவூட்டுவனவாய்க் காணப்படுகின்றன.

இங்குள்ள சிற்றூர்களில் சுதந்திரமாக நடைபெறும் அரசியல் முறைகள், ஆட்சி உறுப்புக்கள் எல்லாம் தமிழகத்தை ஒட்டியதுபோல் நேற்றுவரை காணப்பட்டன.

சீன வரலாறுகளில் கி. பி. 132 இல் சாவகத்தில் தேவ் வர்மன் என்னும் அரசர் ஆட்சி நடத்தியதாகக் கூறப்படுகிறது. தமிழக மன்னர்கள் தங்கள் பெயர்களோடு வர்மன் என்னும் பட்டத்தை உபயோகப்படுத்தி வந்ததாகத் தெரிகிறது. இந்திய மன்னர்களில் பலர் வர்மன் என்னும் பட்டத்தை உபயோகித்து வந்தனர் என்று நமது நாட்டு வரலாறு கூறுகிறது. எனவே தேவவர்மன் என்ற பெயர் நமது நாட்டு மன்னர்களின் பெயர்களோடு தொடர்புடையதாய் இருக்கிறது என்பதை நாம் மறப்பதற்கில்லை.

இஃதன்றிப், பாண்டியமன்னர்களும், பல்லவமன்னர்களும், சேர மன்னர்களும் தங்களுடைய பெயர்களுக்குப்பின் வர்மன் என்ற பட்டத்தைப் பயன் படுத்தி வந்துள்ளனர். அதைப்போன்று சாவக மன்னர்களும் வர்மன என்னும் பட்டத்தைப் பயன்படுத்தி வந்தது அவர்களுக்கும் தமிழ் நாட்டுமன்னர்களுக்கும் இடையே தொடர்பு இருந்து வந்தது என்பதை உறுதிப்படுத்துவதாக இருக்கிறது.

பண்டு தொட்டு நேற்றுவரை சாவகத்தை ஆண்ட மன்னர்களும் பெருநிலக்கிழார்களும், செல்வர்களும், தன வணிகர்களும் இராஜா, பிரபு, பூபதி, அதிபதி என்று பெயர்களைப் பயன் படுத்திவந்துள்ளனர் என்பதற்கு அவர்கள் வரலாறுகள் சான்று தருகின்றன. முற்காலச் சாவக அதிகாரிகள் மந்திரி, பதி, தியாக்ஷ (அதியாக்ச) போன்ற பட்டங்களை உபயோகப்படுத்திவந்தனர். அதோடு இன்

றுள்ள முஸ்லிம் பிரபுக்கள் சூரியபுத்திர சூரிய வினுத சாஸ் திரோவிதாக்த என்ற பட்டங்களைச் சூட்டிக்கொண்டு வருகின்றனர்.*

**போரோ புதூர் :**

சாவக நாட்டுமக்கள் பொதுவாக இந்தியர்களின் தொடர்பாலும் சிறப்பாகத் தமிழர்களின் தொடர்பாலும் சமய ஒழுக்கத்தாலும் கலை நுட்பங்களாலும் தூண்டப் பெற்றவர்களாய்த் தமிழகத்தின் உன்னதமான இலட்சியங் களுக்கிணங்கிய முறையில் சாவக நாட்டில் உள்ள போரோ புதூர் என்னும் இடத்தில் உலகப் புகழ் பெற்ற சிற்பக் கருவூலங்களைச் சீர்பெற உருவாக்கியுள்ளார்கள். கீழ் நாட்டில் சிறந்து விளங்கும் சீரிய சிற்ப அணியிலே இதற்கு இணையாக எடுத்துக்காட்டும் சிற்பங்களும் கட்டிடங்களும், காட்சிகளும் சிலவேயுள்ளன. சிரீசசான விசயதர்மோத் துங்கன் ஆட்சிக்காலந் தொடங்கி (கி. பி. 950 முதல்) சாவகம் அனைத்தையும் ஆண்டுவந்த மன்னர்பிரான் திரியுவனோத்துங்கன் காலம் வரை பௌத்த சமயம் சாவக மன்னர்களின் ஆதரவைப் பெற்று அரசாங்க மதமாய் ஒளி பெற்றிலங்கி வந்தது. எனினும் அங்குப் பிற சமயங்களும்

---

* Side by Side with the names of Arabic origin, and we may even say in perference to them the members of the Javanese nobility bear sanskritic names like Suryaputra and Suryavinata, the pronunciation having only slightly modified owing to a change of accent and a more o-like colouring of the a vowel. A young Javanese Scholar attached to the Leiden University has the very appropriate name of Sastrovidaghda—i.e., Skt. Sastrovidaghda, lit, "Versed in the Scriptures."—The Relation between the art of India and Java—by Dr. J. Ph. Vogel, London, 1925. P. 6-7.

பீடுற வளர்ந்து வந்தன. சைவநெறி அங்கு நன்கு துளிர்த்து கிளைத்துச் செழித்து வந்தது. கணிசமான அளவு சைவர்களின் எண்ணிக்கை அங்குக் காணப்பெற்றது. தமிழகத்தினின்று அங்குக் குடியேறியவர்கள்மட்டுமின்றி அங்குள்ள மக்களிற் பலர் சைவந்தழுவிச் சிவநெறியை ஓம்பி வந்தனர். அங்கு 10, 11, 12ஆம் நூற்றாண்டுகளில் பிரமவனம் (பிராம்பனம்) பனதரம் ஆகிய இரு பெரும் இடங்களில் இருபெரும் கோயில்கள் எழுந்தன. இங்குள்ள சிவன், திருமால் படிமங்கள் அழகிற் சிறந்தனவாய் மதிக்கப் பெற்றன. சாவகத்தில் எழுந்த இந்த மாபெரும் கோயில்களும் எழில்தரும் படிமங்களின் சிறப்பும் சைவர்களின் நாகரிகத் திற்கும் சிற்பச்சிறப்பிற்கும், கலைவளர்ச்சிக்கும் ஏற்ற எடுத்துக்காட்டாக மிளிர்ந்தன.

உலகிலுள்ள சிற்ப விற்பன்னர்கள் பலரும் போரோ புதூர்ச் சிற்பங்களை இவ்வுலகத்தின் அற்புதக் காட்சிகளில் ஒன்றாகக் கருதிப் போற்றி வருகின்றார்கள். இஃது எழு நிலைகளையுடைய ஓர் உயர்ந்த கலைமாளிகையாகக் காட்சி அளிக்கிறது. இதன் அடிப்படை 400 சதுர அடி உள்ளது. இதன் ஒவ்வொரு நிலையும் உலகம் என்றும் கண்டிராதவாறு, கைவண்ணம் வாய்ந்த சீரிய சிற்பிகளின் கூரிய உளியினால் செதுக்கப் பெற்றிருக்கும் அற்புதமான சிற்பங்களின் சிறந்த அழகினாலே உயர்வு பெற்று ஒளிர்கிறது. இங்கு இலங்கும் இணையிலாச் சிற்பங்களின் ஒவ்வோர் உறுப்பி லும் உயிர் ஒளிர்கிறது. இங்குள்ள புனிதமான படிமங் களின் ஒவ்வோர் அணுவிலும் அழகு பொலிகிறது. இந்த மாபெரும் சிற்பக் கருவூலங்களில் பொலியும் தத்துவ நுட்பங்களும், தெய்வ நிலையும், இயற்கைக் காட்சிகளும் கண்ணையும் கருத்தையும் கவர்வனவாய்க் கவினுறக் காட்சி

அளிக்கின்றன. இங்குச் சிற்ப உருவங்கள் தீட்டப் பெற்றிருக்கும் கற்பாளங்களை ஒன்றின் பக்கம் ஒன்றாக அடுக்கிக் கொண்டே போனால் சுமார் மூன்று கல் (மைல்) தொலைவிற்குமேல் உள்ள இடத்தைக் கவர்வனவாக இருக்கும்.

போரோபுதூர் கலைக்கோயில், பௌத்த சமயக் கதைகளின் கற்பனைச் சம்பவங்களினின்று எழுந்தது அல்லது சில உண்மையான நினைவுச் சின்னமாக அரும்பியது அல்லது புத்தரின் பரிசுத்த பல் அல்லது சாம்பலைப் போற்றிவைத்துப் பேணுவதற்கு முதன்முதலாகக் கட்டப்பட்டது என்றோ நம்மால் உணரமுடியவில்லை. ஆனால் சாவகத்தின் பெரிய நினைவுச் சின்னங்களாகத் தோன்றும் பௌத்த சமயக் கட்டிடங்கள பெரும்பாலும் அசலான தாகவும் அது தூய்மையான அங்கங்களைப் பேணிவைப்பதற் கென்றே உருவாக்கப்பட்டதாகவும் வடமொழியில் ஸ்தூபம், சைத்தியம், டகோபா (Modern dagoba) என்பவைகளை எடுத்துக்காட்டுவனவாகவும் இலங்குகின்றன. போரோபுதூர் ஐயத்திற்கிடமின்றி மத்திய இந்தியாவின் பண்டைக்கால ஸ்தூபிகளாக ஒளிரும் சாஞ்சி, பார்குத் கூர்நுனிக் கோபுரங்களின் வழியில் வந்ததுபோல் ஒளிர்கிறது. ஆனால், அதேபொழுது முதற்கண்ணோட்டத் திலே, மத்திய இந்தியாவின் எளிய வட்டமான, அரை யுருண்டை வடிவ ஸ்தூபிகளின் அமைப்பு அதன் கல்கிராதிச் சட்டங்களின் சிறந்த கலைச்சுவை, ஆகியவை களைச் சுற்றி ஒளிரும் உயர்ந்த கொத்து வேலைகள் நிறைந்த தோரணங்கள் முதலியவைகளினின்று முற்றிலும் மாறு பட்டவைகளாய்க் குளறுபடியான பெரிய கட்டிடங்களாய் எண்ணற்ற நிலைகளையுடையதாயும் கொத்துக் கொத்தாய்த்

துளையுள்ள டகோபாக்களை முடிகவிக்கப் பெற்றதுபோலவும் இலங்குகிறது.

சைலேந்திர அரச மரபினர் ஆண்மை மிக்கவர்களா யும் பக்தியிற் சிறந்தவர்களாயும் விளங்கினர். அவர்கள் சாவகத்தில் மட்டுமின்றிப் பௌத்த உலகம் அனைத்தும் புகழும் உலகிலே மிகப் பெரியதும் ஒப்பற்றதும் கலைவளம் மிக்கதுமான போரோ புதூர் ஸ்தூபிகளை எழுப்பிப் பேரும் புகழும் பெற்றனர். போரோபுதூர் கலைக் கோயிலின் வரலாறும், அதன் தோற்றமும் புதை பொருளாக மறைந் திருக்கின்றன. இந்த மகோன்னதமான பெருங்கோயில் என்ன சிறந்த கருத்தோடு எழுப்பப் பட்டது என்பதை நன்கறியத்தக்க ஆதாரங்களோ அல்லது ஆராய்ச்சியோ இதுவரை காணப்படவில்லை. உலகின் ஒப்பற்ற அதிசயங் களில் ஒன்றாக விளங்கும் போரோபுதூர் உள்ளங்கவரும் எண்ணற்ற வரிசைகளிலான சிற்பக் கற்பாளங்களை, ஆண்டாண்டுகளாய் ஆயிரக்கணக்கான திறமை வாய்ந்த கைகள் அணிபெற அடுக்கி அலங்கரிக்கும் பணியில் மிக விரைவாகவும் சுருசுருப்பாகவும் ஈடுபட்டிருக்க வேண்டும். சிற்பமேதை ஈ. பி. ஹேறவல், ஆசியாவின் பார்த்தினன், உயர்ந்த கலைத்திறனமைந்த உணர்ச்சியூட்டும் காட்சி என்று மதிக்கத்தக்கது என்றும் இந்தப் பெரும்புகழ் வாய்ந்த அக்ரோபோலிஸ் கோயில் கை வண்ணம் வாய்ந்த சிற்பியால் மிக நன்றாக வரிசையாக அமைக்கப்பட்டிருக்கிறது என்றும் கூறியுள்ளார். ஆனால், இந்த இரண்டு கோயில்களையும் எண்ண ஒரு சமய உணர்ச்சி வெவ்வேறாகப் பிரித்து அளவு கடந்த தூரத்தில் வைத்து விட்டது. பார்த்தீனனின் தள மட்டமான அகன்ற பட்டையுள்ள சிற்பம் எல்லாம் செய லாற்றும் நிலையில் உள்ளன. போரோபுதூர் சிற்பவேலை கள் எல்லாம் இளைப்பாறும் நிலையில் உள்ளன.

அறிஞர் ஹேவல் அவர்கள், "பார்த்தீனன் தளமட்டமான அகன்ற பட்டையுள்ள சிற்பங்களோடு அவைகளை ஒப்பிட்டுப் பார்ப்பது ஒரு நல்லபயனைத் தராது, என்றாலும் சிறந்த போரோபுதூர் சிற்பங்களின் உயர்ந்த தரமான கலைச்சுவை மிக்க அருஞ்செயல் ஒப்பிட்டுப்பார்ப்பதால் நஷ்டமுறாது. போரோபுதூர் பார்த்தீனன் சிற்பங்களின் கலைக்கொத்த சீர்மைக்கும் இடையே ஒரு சிறு பண்பொற்றுமை உண்டு. இந்த மேலான சமயப் பற்றுள்ளதும், தானாய் முளைத்ததுமான கலைக்கும், இந்திய ஹெலனிக் சமயச் சிந்தனைகளுக்கும் இடையே உறவுகள் இருப்பன போன்று காணப்படுகின்றன" என்று கூறுகிறார்.

சாவகம் சைலேந்திர மன்னர்களின் ஆட்சியில் கி.பி. 778 முதல் 879 ஆம் ஆண்டுவரை நலம் பெற்று எழுந்து வந்தது. அக்காலத்தில்தான் ஆண்டு அருங்கலைகள் பல அரும்பித் துளிர்த்து வந்தன. போரோபுதூரில் பௌத்த சைத்தியம் சிறப்புடன் எழுந்தது. போரோபுதூரில் தோன்றிய பௌத்த சமய சைத்தியங்கள் கூடப் பல்லவர்கள், சோழர்கள் கட்டிடப் பாணியை ஒட்டியே காணப்படுவதாக வரலாற்று அறிஞரான வின்சென்ட் ஸ்மித் அவர்கள் கூறியுள்ளார்கள். சைலேந்திர ஆட்சி வீழ்ச்சிக்குப் பின்னர்தான் சைவ சமய ஆட்சி மீண்டும் தலை தூக்கியது. போரோபுதூர் கலைக் கோயிலைப் போன்று சாவகத்தின் பல் வேறு பகுதிகளிலும் சைவத்திருக்கோயில்கள் அரும்பின.

ஏழாம் நூற்றாண்டில் சாவகத்திற்கு இதிசிங் (சீன வழிப் போக்கன்) சென்ற பொழுது சிரிவிசய இராச்சியத்தை சைலேந்திர அரச மரபினர்கள் ஆண்டு வந்ததாகத் தெரிகிறது. இவர்கள் போரோபுதூர் என்னும் ஊரில் கட்டிய பௌத்தக் கோயில் உலகிலுள்ள பௌத்தக் கோயில்கள்

அனைத்தினும் சிறந்தது. அதில் அமைந்துள்ள சிற்பங்கள் அழகு மிக்கவை என்றும் தெரிகிறது.

போரோபுதூர் பௌத்த ஆலயம் சதுரவடிவமானது. ஆறு தட்டுக்களையுடையது. அடித்தட்டின் ஒவ்வொரு பக்கமும் 497 அடி நீளமுள்ளது. இக் கோயிலில் 504 புத்தர் சிலைகள் உள்ளன. இந்தக் கோயிலின் கால மகர வேலைப்பாடு அதிக அற்புதமான அழகு வாய்ந்தது. இஃது இந்தியக்கலையோடு சாவகக்கலையும் இணைந்தது என்பதற்கு ஏற்ற எடுத்துக்காட்டாய் மிளிர்கின்றது. இந்தக் கோயிலில் செதுக்கப்பட்ட சிறந்த சிற்பங்கள் 1300க்கு மேல் உள்ளன. இதில் புத்தருடைய வாழ்க்கை வரலாறு செதுக்கப்பட்டிருக்கின்றது. இக் கோயில் எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கட்டப்பட்டது என்று அறிஞர்கள் கருதுகின்றார்கள்.

சாண்டி போரோபுதூர் புனித புத்தர் கோயில் கெடுவில் உள்ள பாவோன், சாண்டிஸ் மெண்டெட் என்ற திருக்கோயில்கள் ஒத்த காலத்தில் உருவானவையாகவும் தொடர்புடையனவாகவும் உள்ளன. இது சாவகமக்கள் கண்ட கோயில்களில் மிகப் பெரியதும் தலைசிறந்ததுமாகும். சாண்டிமெண்டெட் இந்தக்கோயிலின் அமைப்பில் உருவாக்கப்பட்டது, என்றாலும் அதற்குப் பக்கத்தில் இதைப் போன்ற சிறு கோயில்கள் கிடையா. அங்கு உள் சுவர்களில் திறந்த பெரிய தலைவாயில்களும் அதில் எழில்பெற விளங்கும் ஹாரிதி, பன்சிகா உருவங்களும் இல்லை. உள்ளறையின் மூன்று சுவர்களிலும் உள்ள மூவிதமாகப் பிரிக்கப்பட்ட சட்டங்களிலும், தாரா, போதிசாத்தவர் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் வண்ணப்படங்கள் அழகுறச் சித்திரிக்கப்பட்டுள்ளன. ஆதியில் நிலை நாட்டப்பட்ட

அழகிய சிலைகளில் உட்கார்ந்திருக்கும் கோலத்திலுள்ள புத்தர் உருவமும் இரு போதி சாத்தவர் உருவங்களும் உள்ளே இன்றும் காணப்படுகின்றன. இவை இந்தோ சாவகக்கலையின் உயர்ந்த தரத்தின் நாகரிகப் பண்பாட்டைப் பிரதிபலிப்பனவாக எழிலொழுக இலங்குகின்றன.

இந்தப் புனிதமான புகழ்பெற்ற போரோபுதூர் புத்தக் கோயில் நெடு சமவெளியின் நடுவில் நந்தா விளக்காய் நனி சிறந்தொளிர்கிறது. இத்திருக்கோயிலின் நாற்புறங்களும் நனி சிறந்த மரகதக் கற்களைப் பரப்பிவைத்தாற் போன்று நெல்வயல்களும் பசும்புற்றரைகளும் பாங்குடன் திகழ்கின்றன. தொலைவில் கோபுரங்களைப்போல் எண்ணற்ற எரிமலைகள் பல பாங்குடன் இலங்குகின்றன. இஃது அக்காலத்தில் அரும்பிய ஏனைய நினைவுச் சின்னங்களைவிட ஒப்புவமையற்ற கட்டிடக்கலையாய் ஒளிர்கிறது. ஒரு வட்டமான குன்று மேற்றளமிடப்பட்டுக் கல்லால் போர்த்தப்பட்டதாகக் காணப்படுகிறது. இதன் மத்திய மண்டபம் மாண்புடன் இதன் கேந்திர நிலையில் உள்ளது. இதனை மையமாகக் கொண்டு வட்டமாகச் சூழ்ந்து, மூன்று வரிசையாக எழுபத்திரண்டு சிறு ஸ்தூபிகள் உள்ளன. இந்தக் கூம்பு வடிவக் கோயிலின் ஒவ்வொரு பக்கத்திலும் நடுவில் மாடிக்குச் செல்லும் வழியுண்டு. அவை நேராக ஸ்தூபியின் மேற்றளத்திற்குச் செல்லுகின்றன. கீழேயுள்ள ஆறு தளங்களின் தரைப்படங்கள், சதுரமான உள் நோக்கிய மூலைகளையுடையன. மூன்று மேற்றளங்கள் வட்டமாக இருக்கின்றன. அதன் முழு அமைப்பின் உச்சியில் உள்ள பகுதி அரைவட்ட வடிவில் இல்லை—ஆனால் ஒரு வட்டத்தின் ஒரு பகுதியாக இருக்கிறது. ஒவ்வொரு கீழ்த்தளமும் நடந்து செல்லக்கூடிய நுழைமாடங்களையுடையது. அதன் சுவர்களில் புத்தரின்

வாழ்க்கை வரலாறு விளக்கமாக வரையப்பட்டுப் பொலிவுடன் திகழ்கின்றது. இவை காண்ட வியூபா, சுராவின் சாதகமாலா, திவ்வியவதனுவில் உள்ள கதைகளுக்கும் லலிதா விஸ்தார என்னும் இலக்கிய விதிகளுக்குமேற்பத் தீட்டப்பட்டுள்ளன. இந்தக் கோயிலின் அமைப்பு மிகச் சிறந்தது. இஃது ஒரு முனையிலிருந்து மற்றொரு முனை வரை ஐந்து கிலோமீட்டர் தொலைவுள்ளதாய் விரிந்து பரந்து கிடக்கின்றது. இதைச் சிறப்பித்துக் காட்டுவதானால் தீவிரமான அனுபவம் அல்லது உணர்ச்சிவகையில், அடித்தளத்திலிருந்து எழும் ஆன்மீக எழுச்சியை விடச் சிறந்த எல்லையற்ற இன்ப வாழ்க்கைப் பொருளாக இலங்குகிறது எனலாம். அங்கோர் வாட் என்னும் அரும் பெரும் சிற்பக் களஞ்சியத்தைக் கண்டு களித்தவர்கள் பெற்ற எண்ணத்தை இதனோடு ஒப்பிடுவதானால் இதற்கு உள்ளத்தை ஒருமுகப் படுத்தும் வேகம் இல்லை. நரம்பின் விறைப்பு உண்டாவதில்லை. போரோபுதூர் காற்றலையற்ற ஆகாயத்தில் முதிர்ந்த ஒரு கனிந்த சுவையுள்ள பழம் நிறைவான அதனுடைய அமைப்பு முறை, வெளிப்புறத்திலுள்ள கிரண சக்தி காட்டும் பருமனைவிட ஒரு முகபாவமுள்ள சிறந்த செல்வமாகத் தெரிகிறது. சுமத்திரேய சாம்ராஜ்யம் அப்பொழுது தன்னுடைய உயர்ந்த வெற்றி நிலையைத் தொட்டுநின்றது. பண்டைய நாகரிக உலகம் அனைத்துடனும் அஃது அதிகத் தொடர்பு கொண்டிருந்தது. பிந்திய ஆராய்ச்சியில் போரோபுதூர் சைலேந்திரர்களின் பண்பாட்டின் நினைவுச் சின்னமாக,—இன்னும் கூறுவதானால் பௌத்த சமய பக்தியின் கேந்திர நிலையமாக விளங்கியது. சுமத்திராவைச் சேர்க்காமல்—நமது வரையறுக்கப்பட்ட வரலாற்று அறிவில் சாவகத்தில் உள்ள நினைவுச்சின்னங்கள் ஒளியில் காணும் ஓர் அரிய அற்புதமாக மட்டும் ஒளிரவில்லை. ஏழாம்

எட்டாம் நூற்றாண்டில் மத்திய சாவகத்தில் சுமத்திராப் பேரரசின் உண்மையான கேந்திரத்திலும் சைலேந்திர மன்னர்களின் உறைவிடத்திலும் இந்த மகத்தான மாபெரும் கலைச்சின்னம் ஒளிவீசி நின்றது.

போரோபுதூர் புத்தர் கோயிலின் கட்டிட நுட்பங்களை நுணுகி ஆராய்ந்து பார்த்தால் மிக வியப்பிற்குரியதாக இருப்பதைக் காணலாம். ஆதியில் தீட்டப்பட்ட மூல நில வரைப் படத்தில் ஒரு பகுதியாகக் காணப்படாத தாழ்ந்த மாடி அடியில் மறைந்து ஒரு கனமான வெளிப்புறத்துச் சதுரக்கல் காணப்படுகிறது. ஆனால் இந்தக் கோயிற் பணி நடந்துகொண்டிருக்கும்பொழுது வரப்போகும் ஒரு பயங்கர மான பலவீனத்தைத் தடுப்பதற்கு இந்த மாற்றத்தை ஏற்படுத்தி இருக்கின்றனர். மேலே பலமான கட்டுமான வேலை யில் திரண்ட கற்களும் சாந்தும் அதிகப் பளுவாக எழுந்தது. இஃது அசம்பாவிதமானதன்று. முழு அஸ்திவாரத்தின் மேல் கட்டப்பட்ட திட்டத்தின் தீவிரமான மாறுதலே காரண மாகும். பல ஆண்டுகளாக அறிஞரின் ஆலோசனைக்கேற்பக் கட்டிடம் முழுவதும் ஸ்தூபம் ஆகக் கருதப்பட்டது. இந்தக் கோட்பாடு பலவிதமான ஆலோசனைகளையும் பயனற்றதாக்கி விட்டது. முதலில் இந்தோ-சீனம், அல்லது இந்தியாவில் எங்கும் இதேபோன்ற வட்டப் பகுதி காணும் கோயிலின் (a Segment Stupa) எடுத்துக்காட்டு இல்லை. இரண்டாவதாக நிறைவான ஸ்தூபங்கள் எழுபதைத் தாங்கி நிற்கும் ஒரு கட்டிட அமைப்பை, தர்க்க முறையில் ஒரு ஸ்தூபம் என்று அழைப்பது மிகக் கடினமாக இருக்கிறது. சாவக நாட்டில் காணப்படும் போரோபுதூர் புனித நினைவுச் சின்னத்தைப் பிரதிபலிக்கும் அல்லது அச்சிற்பக்கலை சார்ந்த அலங்கார அமைப்பைத் தவிர வேறு எந்த விதமான ஸ்தூபங்களும் எங்கும் காணமுடியவில்லை. சயாமியர் காலத்திற்கு முன்னர்

நடைமுறையில் கம்போசகத்திலும் எதுவும் இருப்பதாக எவரும் கூறமுடியாது. மற்றொரு பக்கம் பல ஆண்டுகளாக (சாண்டிஸ் லோரோ சோங்கிராங், சாகோ, சாபங், பனுதரன், பனேம்பாகன், பீமியனுகாஸ்) முதலிய இடங்களிலும், கம்போசக நாட்டிலும் சாவகத்திலும் உயர்ந்த தன்மை வாய்ந்த உப்பரிகைகளையுடைய பட்டைக் கூம்புருவம் ஒரு பெருங் கோயிலைத் தாங்கி நிற்பதை எவரும் பார்த்ததில்லை. பர்மாவில் உப்பரிகைகளையுடைய கூம்புருவக் கோயில்களின் அசல் உருவங்கள் காணப்பட்டன. என்றாலும் அவை பிந்திய காலத்தில் (மிங்கால செடி, ஸ்வஸாண்டவ், பாகன் போன்ற இடங்களில்) எழுந்தவை. அன்றியும் சம காலத்திய இந்திய இணைவுப் பொருத்தங்கள் காஷ்மீரில் காணமுடியும். அது சுமத்திராவில் மகாயான பௌத்தம் கண்ட குணவர்மன் மூலம் தோன்றியிருக்கலாம் என்று எண்ணமுடியும். எட்டாவது நூற்றாண்டின் முற்பகுதியில் பரிஹாஸ்புராவில் ஒரு பெருங்கோயில் லலிதாத்தியத்தின் அமைச்சர் சங்குணனால் உருவாக்கப்பட்டது. அதில் இரு தள மேடையோடு மாட மூலைகளும் ஒவ்வொரு பக்கத்திலும் நடுவில் மாடிக்குச் செல்லும் வழியும், உள்ளது. அதே பொழுது அவ்வழியில் இந்துக் கோயிலின் மத்திய கோயில் அடித்தளம் இரண்டு மேடைகளையுடையதாய் இருக்கிறது. இஃது ஒன்றின்மீது மற்றொன்றாக இரு வலம் வரும் (பிரதட்சணம் வரும்) வழியாக அமைந்துள்ளன. பல பழைய இந்திய ஸ்தூபங்கள்,—அஃதாவது பல்லாரர் (தட்சசிலம்) ஸ்போலா (கைபர்கணவாய்) மிராபூர் காஸ் (சிந்து) ஆகிய விடங்களிலும் மற்றொன்று ஆப்கானிஸ்தானத்திலும் ஒரு தனித்த சதுரமாக அல்லது நீண்ட சதுரமாக உள்ள மேடையாக நடு ஊடாக ஒரு பக்கத்தின் மேல் அல்லது நான்கு பக்கங்களிலும் சேருகிறது. பல

மேற்றளமுள்ள பட்டைக்கூம்புருவம் அமைப்புள்ள கோயில்கள் சாவகம் கம்போசகம், பர்மா ஆகிய நாடுகளிலும் இவ்வாறு சுத்தமாகச் செய்து செய்து திருந்திய ஓர் எளிய மூல முன்மாதிரியாக இருக்கின்றன.

ஓர் அரிய புதிய சிற்பக் கோட்பாடு சரியாகத் தோற்றமளிக்கும் முறையில் ஆராய்ந்து அடிப்படையிட்டிருக்கும் சாண்டி போரோபுதூர் முதன் முதலாக எழுந்த ஐந்து மாடியுள்ள பட்டைக் கூம்புருவக் கோயிலாகும். இதனோடு இணைந்து சிறிதான ஓர் உயர்ந்த மேடை தூபத்தைத் தாங்கிக் கொண்டு இருக்கவில்லை. ஆனால் ஒரு கோயிலையே தாங்கிநிற்கின்றது. அசல் திட்டத்தினின்று இப்பொழுதுள்ள அமைப்பு மாறுதல் செய்யப்பட்டதாகக் காணப்படுகிறது ஏனெனில் மேலே அதிகமான பளு ஏருதிருப்பதற்காக இம்மாற்றம் அவசியமாயிற்று. இருபுறமும் அரைகுறையாகத் திறந்த வழியையுடைய மூலத்திட்டம் தொடர்ந்து நடைபெற்றுச் சுவர்களிற் புத்தரின் வாழ்க்கை வரலாறு சித்திரிக்கப்பட்டுள்ளது. அஃது இப்பொழுது வேறுவழியில் புத்திக் கெட்டாத காரணத்தால் முதலாவது பூசையோடு முடிவுற்றது.

இந்த நினைவுச்சின்னம் எழுந்த காலத்தை அதன கட்டுமான முறைகளினின்றும் சாசனச்சான்றுகள் மூலமாகவும் நாம் நன்கு காட்டமுடியும். இதன் சாசனச்சான்றுகள் மூலம் இது கி. பி. 760 க்கும் 878 க்கும் இடைப்பட்ட காலத்தில் எழுந்ததாக இருக்கலாம் என்று முடிவுகட்டப்பட்டுள்ளது. இதன் மூலம் இஃது எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று திட்டவட்டமாகக் கூறமுடியும்—இந்தத் திருக்கோயிலின் கட்டுமான முறையை வைத்து ஆராய்ந்தால்

இஃது எட்டாவது நூற்றாண்டைச்சேர்ந்தது என்று இயம்ப முடியும்.*

## போரோபுதூர் புனித சிற்பங்களுக்குப் புலவர்களின் புகழ்மாலை

1927 ஆம் ஆண்டு, காலஞ்சென்ற கவியரசர் இரவீந்திர நாததாகூர் அவர்கள், சாவகத்திலுள்ள கலைக்கழகத்தின் அழைப்பின்மீது அங்குப் போந்தார். அங்குக் கண்ட இந்திய நாகரிகத்தை இந்தியாவில் உள்ள தம் நண்பர்களுக்குக் கடிதங்களாக எழுதி அனுப்பி வந்தார். அவைகளில் ஒன்று போரோபுதூரைப் பற்றியது. அதில் கவிஞர் போரோபுதூர் சிற்பச் சிறப்பை உலாந்தாப் பண்டிதர் மூலம் அறிந்து உலகிற்கு உணர்த்துகிறார். அஃது அடியில் வருமாறு :

"போரோபுதூர் கலைக் கருவூலங்கள் படிப்படியாக எத்தனையோ பாகங்களாகத் திகழ்கின்றன. இவற்றை ஒன்றாகச் சேர்த்து முடிக்கும் அந்தச் சிகரம் கீழ்ப்பரப்பின் சுற்றளவிற்கு ஒத்திருக்கவில்லை. கட்டிடத்தின் அடித்தளம் எவ்வளவு விசாலமாக இருந்தால்தான் என்ன? அது மிகவும் சிறிதாகவே காட்சி அளிக்கிறது. சிகரம் பல குண்டுக் கற்களைவைத்து எழுப்பிய ஒரு சிறு குன்றின்மீது ஒரு கிண்ணத்தைக் கவிழ்த்து மூடியது போல் காணப்படுகிறது. போரோபுதூரைப் பல செப்புக்களை ஏந்தி நிற்கும் ஒரு கூடை என்றால் பொருத்தமாக இருக்கும். புத்தரின் நூற்றுக்கணக்கான படிமங்கள், அவருடைய சாதகக் கதைகளை விவரிக்கும் ஓவியங்கள், ஆகியவைகளைத் தன்னுள் அடக்கமாக வைத்துக் கொண்டிருக்கும் ஓர் அற்புதமான பூக்கிண்ணம் போல் பொலிகிறது. உள்ளே

---

*History of Indian and Indonesian art by A. K. Coomaraswamy, London 1927. Page, 204, 205.

இருக்கும் அற்புதமான சிற்பங்களை நாம் உற்று நோக்கினால் நமது உள்ளத்தைத் திகைப்பூட்டுவனவாய் இருக்கின்றன. கல்லில் வடித்த கட்டழகு வாய்ந்த சிலைகள் சாதகக் கதைகளை விளக்குவனவாய்ச் சிற்பக் கலைக்கே சீரும் சிறப்பும் தருவனவாய் மிளிர்கின்றன. அந்தச் சிலைகள் உயிர்த்துடிப்புள்ளனவாய்க் காட்சி அளிக்கின்றன. அங்கு ஓரிடத்திலாவது நான் விரும்பத்தகாதவைகளை, அருவை நிறைந்தவைகளை, அவலட்சணமானவைகளைக் கண்டதே இல்லை. முன்னர் நான் பல கோயில்களில் தேவ தேவி மூர்த்தங்களையும் இராமாயணம், பாரதம் போன்ற கதைகளை விளக்கும் சிலைகளையும் பார்த்துள்ளேன். ஆனால் இங்கோ உலகையே பார்க்கின்றேன். மனிதர் வாழ்க்கையில் நிகழும் எல்லா நிகழ்ச்சிகளையும் இங்குக் காணலாம். இங்கு அரசன் முதல் ஆண்டி வரை அனைவரும் இடம் பெற்றிருப்பதை அறிந்தேன். பௌத்த நெறியின் மகிமையால் எளியவன் நீசன் உலகம் வெறுக்கும் பாதகன் முதல் அனைவரும் இங்கே இடம் பெற்றிருக்கச் செய்திருக்கின்றனர் இதை உருவாக்கிய சிற்பிகள். மனிதனோடு பல்வேறு உயிரினங்களும் இங்கு உருவம் பெற்றிருக்கின்றன. புத்த பகவான் பல்வேறு பிறப்புக்களில் பல்வேறு உயிர்ப்பிராணிகளாக அவதரித்த கதையை இதைப் படைத்த சிற்பிகள் துளியேனும் மறவாது தீட்டியிருக்கின்றனர். மக்களுக்கும் விலங்குகளுக்கும் இடையே நிகழும் வாழ்க்கைப் போராட்டத்தின் பிரவாகத்தினின்றே போதி சத்துவர்கள் பிறந்தனர் அல்லவா? எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் ஓர் உயரிய இலட்சியம் ஓர் அற்பமான சிறு உயிரின் சிலையினின்று வெளிப்படுகிறது. உயிரினத்துள் நிலவும் இந்த நுட்பமான நட்பு ஒவ்வொரு முடிச்சாகக் களைந்து நிர்வாண நிலைக்குக் கொண்டு போய்விடுகிறது. உயிர்கள் மாய்கையில் சுழல்வது

அது தன்னை மேன்மேலும் பிணைத்துக் கொள்வதாகக் கருதப்படுகிறது. இந்தப் பிணைப்பை அறுக்கும் வழியைத் தான் புத்தர் காட்டுகிறார். இளம் பிராயத்தில் நான் கண்ட ஓர் அதிசயத்தைக் கூறுகிறேன். கயிற்றால் கட்டுண்ட கழுதையிடம் ஒரு கன்று ஓடிவந்து அதன் உடலை நக்கிக் கொடுத்தது. இஃது எனக்கு வியப்பாக இருந்தது. புத்தர் எந்தப் பிறவியிலாவது இதைப் போன்ற பசுங்கன்றாக இருந்திருக்க வேண்டும். இதைக் கண்ணால் கண்ட பிறகு சாதகக் கதைகளைப் பொய்யென்று எப்படித் தள்ளிவிடுவது? நமக்கு அற்பமாகத் தோன்றுவது சாதகக் கதையில் பெரிய காரியமாக மாறுகிறது. இவ்வளவு பெரிய கோயிலின் சுவரில் அற்பமான உயிர்ப்பிராணிகளின் வாழ்க்கையைப் புனிதமான பக்தியுடன் தீட்டியிருக்கின்றனர்.

"இரண்டு உலாந்தா (ஹாலண்டு)ப் பேரறிஞர்கள் எல்லாச் சிறப்புகளையும் விளக்க எங்களுடன் வந்திருந்தனர். வேற்று நாட்டினரான அவர்கள் என்ன என்ன நிகழ்ச்சிகளையெல்லாம் திரட்டி வைத்திருக்கின்றனர்! அவர்களின் ஊக்கத்தை மெச்ச வேண்டும். ஊமைபோல் நிற்கும் கற்படிமங்களினின்று அவர்கள் இவ்வளவு நிகழ்ச்சிகளை எவ்வாறு தான் கிரகித்தார்களோ! அவர்களிடம் கல்விச் செருக்கு துளியேனுமில்லை. பாரத நாட்டின் பழம் பெரும் வரலாற்றை, விலையுயர்ந்த கலைநுட்பத்தை நன்கு அறிந்து கொள்ள வேண்டுமானால் அத்தகையோரைக் குருவாகக் கொள்ள வேண்டும். அவர்கள் அறிந்தவரை பாரத நாட்டின் பண்பாடும் கலையும், கல்வியும் வரலாறும் வெறும் வரட்டுச் செய்திகளாக இல்லை. வாழ்வு முழுவதும் அவர்கள் பெற்றெடுத்த தவப்பயனாகக் கொள்ளப்படுகிறது."*

---

*ஜாவா யாத்திரை — இரவீந்திரநாத் தாகூர்.

இவ்வாறு கவிஞர் போரோபுதூர் கலைக்கோயிலைத் தம் கலைக்கண் கொண்டும், தத்துவஞானக்கண் கொண்டும் உலாந்தாப் பேரறிஞர் மூலம் உணர்ந்து நமக்கு அறிவித்துள்ளார்.

கலைமேதை தஹேவல் என்னும் பேரறிஞர், போரோபுதூர்ச் சிற்பிகளின் பரமார்த்திக இலட்சியமானது பாரத நாட்டுச் சிற்ப வல்லுநர்களின் கடுமையான கட்டுப்பாடுகளையும் விதிகளையும் விலக்கிக் கலை மேதைகளும் சிற்ப விற்பன்னர்களும் இது சரி, இது தப்பு என்று குறைவு நிறைவு கூறும் நிலைகளைத் தாண்டித் தெய்வீக உணர்ச்சி நிறைந்த வார்த்தைகள் செவியுறுவோரின் உள்ளத்தில் ஆழமாகப் பதிவதைப் போன்ற உணர்ச்சியை உருவாக்குகின்றது. தெய்வீகச் சிறப்பின் எழுச்சி பொங்கித் ததும்பும் இந்த மகோன்னதமான அற்புதச் சிற்ப வடிவங்களின் உயர்வை ஆராய்ந்தால் உலகில் இதற்கு ஒப்பாக ஐரோப்பிய சிற்பங்களைக் கூட நாம் காண்பது அரிது. போரோபுதூர்ச் சிற்பிகள் இயற்கையின் எழிற் காட்சிகளைக் கலைநயம் பயக்குமாறு உருவகப்படுத்தும் அரும்பெரும் ஆற்றலை அதிகம் பெற்றவர்கள். அவர்களது அரிய உழைப்பும் கைத்திறனும் தெய்வீகத் திருப்பணியின் பொருட்டாகவே பெரிதும் அர்ப்பணம் செய்யப்பட்டுள்ளன. அந்த எண்ணத்தை நிறைவேற்றி வைப்பதில் இவ்வுலகில் வேறு எந்த நாட்டிலும் வேறு எந்தக் காலத்திலும் காண முடியாதவாறு உறுதியுடனும் நம்பிக்கையுடனும் உண்மையான உணர்ச்சியுடனும் தமது கடமையைத் திறம்பட நிறைவேற்றியிருக்கும் பாங்கை எண்ணுகையில் இவ்வுலகின் நாகரிக நற்கலையின் வரலாறு அரும்பிய நாள்தொட்டு இன்றுவரை நல்உருவப்படிமங்களை வடிக்கும் உயர்ந்த உழைப்பாளிகளின் அணியில் இவர்கள் முதன்மையான இடத்தைப் பெறுவதற்கு உரிமை பெற்றிருக்கிறார்கள் என்று கூறவேண்டும்.

"ஐரோப்பாவின் எல்லைக்குள் இப்பொழுது உயிருடன் வாழும் எந்தச் சிற்பியும் இத்தகைய பேரழகு ஒளிரும் ஓவியங்களையோ அல்லது சிற்ப வடிவங்களையோ உருவாக்கு வதற்கு உள்ளத்தாற்கூட உன்ன முடியாத நிலையில் இந்த மகத்தான கலை முறைகளும், எஞ்சி நிற்கும் சின்னங்களும் பாரத நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் இன்னும் உயிருடன் நிலவுவது கண்கண்ட உண்மையாய் இருக்கும்பொழுது நாம் ஐரோப்பிய சிற்ப இலக்கணங்களையும் நடைமுறைகளையும் தழுவிய முறையில் — ஐரோப்பியக் கல்லூரிகளில் கற்பிக்கப் படுவது போல் இவ்விரு நிர்மாணக் கலைகளையும் கற்பிப்பதற் காகப் பாரத நாட்டில் கல்லூரிகளை உருவாக்கியும் அந் நாட்டுக் கட்டிடங்களின் அலங்கார வேலைப்பாடுகளைத் தழுவி அழகு படுத்துவதற்காகச் சிற்ப வல்லுநர்களை மேனாட்டிற்கு அனுப்பியும் இன்னும் பல கண்காட்சிகள் போன்ற ஆடம்பர விழாக்களின் வாயிலாகவும் பாரத நாட்டு மக்களின் கலையுணர் வையும் நாகரிகச் சுவையையும் அபிவிருத்திக்குக் கொண்டு வருதற்காக அரிய முயற்சிகள் செய்துகொண்டு வருவதா கக் கருதி வீண் பெருமை பாராட்டி வருகின்றோம்" என்று நமக்கு நல்ல அறிவுரை தந்துள்ளார்.

மேலும், போரோபுதூர்க் கலைச் செல்வத்தைப் பார்த் தீனன் (Parthenon) Panathenaic (Fieze) தளமட்டமான அகன்ற பட்டையுள்ள சிற்பங்களோடு ஒப்பிடுவதைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது ஹேவல் கீழே வருமாறு குறிப்பிட் டுள்ளார்.*

---

*"Would serve no useful purpose, though as artistic achievements of the highest class the best Borobudur sculptures would not suffer by the comparison. There is as little kinship between the academic refinement of the

சைலேந்திர மரபினர்களின் ஆட்சிக்காலத்தில் எழுந்த ஒரு சைவக்கோயில் சாண்டி பனேன் என்று ஓர் எடுத்துக் காட்டைக் கூறமுடியும். இங்கு அகத்தியரின் ஒரு சிறந்த படிமம் கிடைத்துள்ளது. சாவகத்தில் முன்னர் அகத்தியர் சிவகுரு என்று கூறப்பட்டு வந்தார். இங்குள்ள ஒரு திருமாலின் படிமம் இப்பொழுது சொகர்த்தாவில் இருக்கிறது.

மத்திய சாவகத்தில்தான், உயர்ந்த வேலைப்பாடுகள் நிறைந்த வியக்கத்தக்க எடுத்துக்காட்டுகளைக் காண முடியும். இங்குப் பல பல சிலைகளை மட்டுமல்ல, தாந்திரிக பௌத்த தாதுப் படிமங்களிலான திருஉருவங்களையும் காணமுடியும். சில பொன்னாலும் பல செம்பாலும் வார்க்கப்பட்டவைகளாகும். எனவே மத்திய சாவகம் சிறிய புத்த உருவங்களை உருவாக்கும் கருப்பையாகக் கருதப்பட்டது. கிழக்குச் சாவகத்திலிருந்து பிற்காலத்தில் உண்டாக்கப்பட்ட சைவத் திருஉருவங்களையல்ல, இந்து திருஉருவங்களைப் பற்றி நீங்கள் நன்கறிவீர்கள். அவை வட இந்தியச் சிற்ப முறைகளைத் தழுவியனவாகும்.

860 ஆம் ஆண்டில் சுமத்திரர்களின் ஆட்சி வீழ்ச்சியுற்றது. சாவக மன்னர்கள் கிழக்குச் சாவகத்தினின்று இந்தக் காலத்தில் திரும்பி வந்து பெரம்பானனில் தங்கள் இருப்பிடத்தைப் பலப்படுத்தினர். அப்பொழுது பௌத்த மதமும் சைவ சமயமும், வடநாட்டிலிருந்து வந்த பெரிதும்

---

Parthenon sculptures and this supremely devout and spontaneous art, as there is between Indian and Hellenic religious thought"

E. B. Havell, "Indian Sculpture and Painting (London, 1908) P. 115.

சுமார்த்தக் கலப்புள்ள இந்து மதமும் அருகருகே அமர்ந்து நட்புரிமையுடன் தொடர்ந்து நிலைத்திருந்தது. ஆனால் அரசாங்க சமயமாக மீண்டும் சைவம் ஆட்சி பீடத்தமர்ந்தது. அவ்வமயம் (860-915) இந்து சாண்டி அசு, பௌத்த சாண்டிபிலவ்சான் போன்ற சிறு கோயில்கள் பல மறு மலர்ச்சி பெற்றன. மாபெரும் சாண்டி லோரோ சோங்கிராங் சாவகத்தில் உள்ள உயர்ந்த இந்து நினைவுச் சின்னமாக எழுந்தது. இது போரோபுதூர், சாண்டி சிவ ஆலயங்களோடு ஒப்புடையதாய் முற்றிலும் விளக்குதற்குரியதாய் விளங்கியது. எட்டுக் கோயில் இணைக்கப்பட்ட பலதிறப் பட்ட கூட்டொருமைச் சுவருள்ள ஒரு மாடியில் இடம் பெற்றுச் சுற்றிலும் சிறு பக்கக் கோயில்களும் இரண்டு வெளிச்சுவர்களும் உள்ளன. உட்புறத்திலுள்ள மூன்று பெரிய கோயில்கள் முறையே நான்முகன், சிவபெருமான் திருமால், ஆகிய தெய்வங்களுக்கு அர்ப்பணிக்கப்பட்டுள்ளன; அனைத்திலும் மிகப் பெருங்கோயிலாக விளங்குவது முக் கண்ணனாகிய சிவபெருமான் குடிகொண்ட மத்திய கோயிலே யாகும். இக்கோயில் அடிப்படைக் கூறு, கம்போசகத்தி லுள்ள பிராங்ஸ் என்னும் கோயிலை ஒத்திருக்கிறது. ஆனால் சிற்பநுட்பம் நன்கு உணர்ந்த அறிஞர்கள் இப்பெருந் திருக்கோயில் போரோபுதூர் மூலத்திட்டத்தை ஒத்திருக்க லாம் என்று அபிப்பிராயப்படுகிறார்கள். அஃதாவது இந்தக் கோயில் செங்குத்தாகக் கூழையாக்கப்பட்ட உப்பரி கையுள்ள பட்டையான கூம்புருவத்தை நுனியாகப் பெற்றுள்ளது. அதனுடைய மூன்று பக்கங்களிலும் ஒவ்வொன்றின் நடுவிலும், மாடிக்குச் செல்லும் வழிகளோடு ஒரு சதுரமான சட்டமும் உள்ளது. இதன் மூலம் பிரதான வாயிலுக்குப் போக முடிவதோடு பக்கத்தில் இணைந்துள்ள சிறு கோயிலுக்கும் போக முடியும். இக்கோயில் மேற்றளத்

திற்கு மேலாக உயர்ந்திருக்கிறது. உபதளம் மிகவும் அழகுற அலங்கரிக்கப்பட்டுள்ளது. இங்கு நின்ற கோலத்தில் காணப்படும் சிவபெருமான் திருஉருவம் ஒன்று கெம்பீரமாகக் காட்சி அளிக்கிறது. உப்பரிக்கையின் கீழே சுற்றிலும் மிக அதிகமான சிற்ப வேலைப்பாடுள்ள சிறு தூண்கள் தொடர்ந்து கோவையாகக் கோயிலை யணிசெய்து நிற்கின்றன. உட்புறத்தில் இராமாயணத்தின் முற்பகுதி சிற்பமாக எழில் ஒழுகச் செதுக்கப்பட்டுள்ளன. இப்பொழுது அதன் தொடர்ச்சி பெரும்பாலும் சிதறி வீழ்ந்து கிடக்கின்றது. வலதுபுறம் நான்முகன் கோயில் உள்ளது. திருமாலின் கோயில் கிருஷ்ண வட்டத்தில் சித்திரிக்கப்பட்டுள்ளது. பெரம்பானன் கோயில்கள் போரோபுதூரைவிட ஏதாவது சிறப்புடையதாக இருந்தால் நிச்சயம் சிறந்த காட்சியாக எண்ணப்படும். இக்கோயில்களின் தோற்றமும் அதன் உயர்ந்த அலங்காரமும் அதிகமான வீரமுள்ளதாகக் காணப்படுகின்றன. அஃது அறிவிற்குப் பொருத்தமாக எளிதாக எழிலுற்றிருப்பதோடு ஒரு கோயிலாகவும் அரசர்களின் அலங்காரச் சமாதியாகவும் விளங்குகிறது.

இந்தக் கோயில்கள் கட்டப்பட்ட கால அளவிற்குக் கூட அது நிலைத்திருக்கவில்லை. ஏனெனில் 915 ஆம் ஆண்டு மத்திய சாவகம் முழுவதும் திடீரென்று பாலைவனமாகி விட்டது. இதற்குக் காரணம் அங்கு எழுந்த ஒரு பெரும் இயற்கைக் கோளாறேயாகும். அஃதாவது நிலநடுக்கம் அல்லது கொள்ளை நோய் இரண்டிலொன்ருக இருக்கலாம் என்று எண்ண முடியும். கிழக்கில் இந்தோ - சாவகத்தில் எழுந்த பிந்திய அபிவிருத்தியை நாம் ஆராய்வது அத்தியாவசியமானது. அதை ஆய்வதும் அங்கீகரிப்பதும் மிக முக்கியமானது. என்ருலும் தொடர்ந்து எழுந்த இயற்கைக்

கோளாறுகளில் நில அமைப்பு ஒழுங்கு முறை குழம்பிக்கிடக்கின்றது. ஒரு பொழுதும் அது புதுப்பாணியாகாது. பெரம்பானன் கலை ஒரு கொள்கையைக் கடைப்பிடித்து அதை டையெங் மேட்டில் நிலைநிறுத்தியுள்ளது. இன்னும் அந்தத் திட்டத்தின் ஒற்றுமை காணப்படுகிறது. அலங்கரிப்பு, நிர்மாணப் பொருத்தம் ஆகியவை மிகவும் முற்போக்கானவை. அதன் அடிப்படையான மூலப்பொருள்களின் உள் தொடர்புகளும் கருத்துக்களும், மேற்கொண்டு எழுந்த முன்னேற்றங்களும் கிழக்குச் சாவகத்தில் நாம் உண்மையில் என்ன காண்கின்றோம் என்பதற்கு வழிகாட்ட முடியும். மற்றொரு பக்கம் முற்காலக் கிழக்கத்திய குன்னங்கன்சிர் நினைவுச் சின்னங்களும் (கி. பி. 977), பெலஹான் நுழைவாயிலும், சாண்டி சம்பர் நாஞஸ், சாண்டி சங்காரிதியும் மத்திய சாவகத்தின் பண்பைத் தெளிவாகக் காட்டுவனவாக இருக்கின்றன. சாண்டி லலாதுண்டா குளிக்குமிடம், சமாதி ஆகியவைகள் மகா எர்லங்காவின் தந்தை உதயணனுக்கு உரியனவாகும். பெலஹானுக்கு அருகில் மற்றொரு குளிக்குமிடத்தை எர்லங்கா தனக்கே (1010 - 1042) உரியதாக்கியுள்ளான். இந்தப் பகுதியிலே விஷ்ணு கருடவாகனத்தின்மீது அமர்ந்திருப்பது போன்ற அழகிய சிற்ப வடிவம் கிடைத்துள்ளது. இவ்வுருவம் தமிழகத்தில் மட்டுமன்று, இந்தியாவின் எந்தப்பகுதியிலும் காணமுடியாத ஒரு புதிய தோற்றத்தில் விஷ்ணு மனித உடம்பும் கருட முகமும் உள்ள ஒரு வாகனத்தில் அமர்ந்திருக்கும் காட்சியாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது.

**சிவபெருமான் :**

மத்திய சாவகத்தில் செபாங் என்னும் இடத்தில் உள்ள கோயிலின் வடக்குப்பக்கத்தில் உள்ள அழகிய



கபாலக் கணபதி - பாரா

(பக்கம் 162 - பார்க்க)



திருமால் (இருமனைவிகளுடன்)

(பக்கம் 165 - பார்க்க)



பிராச்னபரமிதா—சிங்கசாரி

(பக்கம் 170 - பார்க்க)



சாண்டி சிவோ

(பக்கம் 173 - பார்க்க)



சாண்டி சிவோ கோயிலின்
பரிவாரக்கோயில் மாடங்களில் ஒன்று

(பக்கம் 174 - பார்க்க)



போதிசத்தவர்
சாண்டி பிளாவோசான்

(பக்கம் 176 - பார்க்க)



கெடாங் சங்கா அழிபாடுகள்

(பக்கம் 180 - பார்க்க)



சண்டி பீமா

(பக்கம் 188 - பார்க்க)

மாடத்தில் ஓர் அற்புதமான வெள்ளைக்கல்லில் செதுக்கப் பட்ட சிவபெருமானின் சிறப்புமிக்க சிலை ஒன்று கிடைத் துள்ளது. இஃது எட்டாம் நூற்றாண்டில் செதுக்கப்பட்டது. அழிந்துகிடந்த இத்திருக்கோயிலைப் புதுப்பிக்கும் பொழுது இந்த மிகச் சிறப்பமைந்த சிவபெருமானின் சீரிய சிலை கிடைக்கப்பெற்றது. இதிலுள்ள சிறிய சிறிய பழுதுகள் கூடக் கண்டுபிடிக்கப்பட்டுச் செப்பனிடப்பட்டுள்ளன. இந்த அருள் ஒழுகும், தனிச்சிறப்பு வாய்ந்த சிற்பச்சிலை வடிவம் மிகவும் அழகானது. இந்தச் சிவபெருமான் சிலை உருவத் தில் காணப்படும் பங்க நிலை இது மிகப் பழைமையானது என்பதை எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது. சாவகத்தி லுள்ள பிற்காலச் சிற்பச்சிலை உருவங்கள் எல்லாம் பெரிதும் வளைவற்ற வடிவம் உடையனவாகவே இருக்கின்றன. அணி கலன்களும், மகுடமும் அனைத்திற்கும் மேலாக முகத்தின் தோற்றமும் இந்தச் சிற்பவடிவம் மத்திய சாவகத்திலுள்ள பழைய கற்படிமம் என்பதை எளிதில் கூறிவிட உதவுகிறது. இந்தச் சிலையில் சிவபெருமான் இரு கைகளையுடையவ ராகவே காணப்படுகிறார். மிகப் பழைமையான காலத்தில் வடஇந்தியாவில் உள்ள சிவ வடிவங்கள் இருகைகளை உடையனவாகவே இருக்கின்றன. அவரது தலையில் சடாமகுடம் இல்லை. இரத்தினமகுடம் உள்ளது. காதில் தமிழ்நாட்டுச் சிற்ப வடிவங்களைப் போல் குண்டலங்கள் தொங்குகின்றன. கழுத்திலும் இடுப்பிலும் ஒரு சில அணி கலன்கள் காணப்படுகின்றன. மார்பில் பூணூலும் வயிற்றில் உதரபந்தம் போன்ற உருவமும் நன்கு தெரிகின்றன. ஒரு கரம் சேதப்பட்டுள்ளது. மற்றொரு கரத்தில் கடகங்கள் பொலிகின்றன. கையில் கயிறு போன்ற உருவமும் காணப்படுகிறது. தலைக்குப் பின் வட்டமான ஒளிவீசும் உருவம் ஒன்றும் காணப்படுகிறது. இதன் கால்களும்

சேதப்படுத்தப்பட்டுள்ளன. இவ்வுருவம் மிகஅழகு வாய்ந்த தாய்த் தமிழ்நாட்டுச் சிலைகளைப் போல் சிறப்புமிக்கதாய் விளங்குகிறது.

**கணபதி**

கிழக்குச் சாவகத்தில் உள்ள பாரா (Bara) என்னும் இடத்தில் உள்ள கணபதி உருவம் குறிப்பிடத்தக்கதாகும். இந்தப் படிமம் இந்தோ - சாவகப்பாணியும் இந்தோனேசியப் பாணியும் இணைந்து மிகவும் ஆச்சரியப்படத்தக்க முறையில் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சிலையின் முன்புறத் தோற்றம் இந்தியச் சிற்பமுறையின் பொதுத் தோற்றத்திலும் பண்பிலும் உறுப்பமைப்பிலும் உருவாக்கப்பட்டதாகக் காணப்படுகிறது. மேலும் இது மிக உயர்ந்த முறையில், தமிழகச் சிலைகளையொத்த வண்ணம் கலைநயம் வாய்ந்ததாய்த் திகழ்கிறது. இந்தச் சீரிய சிற்பஉருவம் கிழக்குச் சாவகத்தின் இந்தோ சாவகப்பாணிக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக இலங்குகிறது.

ஆனால் இந்தக் கணேசரின் சிலை வடிவத்தின் பின் பகுதியை ஆராய்ந்தால் உண்மையான இந்தோனேசியப் பாணி திகழ்வதைத் தெள்ளத் தெளியக் காணமுடியும். உண்மையான கணபதி வடிவம், அதனுடைய சிறந்த அணிகளைப் பெற்றதாயும், நிறைவான சாந்தம் உடையதாயும் தெய்வீக சாந்தி இலங்கும். யானைத் தலையையுடைய கடவுளின் வடிவில் உருவகப்படுத்தப்பட்டதாகக் காணப்படுகிறது. பின்புறத் தோற்றம் இந்தோனேசிய முறை அமைப்பில் கலைச்சுவையும், கவர்ச்சியும், கவினுறு காட்சியும், அமைந்து காணப்படுகிறது. நமது முன்னர் நாம் காணும் வாயங்மாதிரியில் உள்ள உருவம் என்று திட்டவட்டமாகக்

கூறுவதற்கில்லை. இது போரோபுதூர் வாயின்மீது இருக்கும் காலா தலையை ஒத்ததென்று கூறமுடியும். எனவே இஃது உண்மையில் திராவிடமூலக்கலை அம்சத்தில் உருவாக்கப்பட்டது. ஆனால் திராவிடக்கலை பல நூற்றாண்டுகளாகச் சுதந்திரமாக அபிவிருத்தி அடைந்து கடைசியாக இந்தோனேசியக் கலை மாதிரி பரிணமித்துள்ளது.

இந்தக் கணபதியைக் கபாலக் கணபதி என்று கூறலாம். இதன் பீடம் வரிசையாகப் பல கபாலங்கள் இருப்பதுபோல் அமைக்கப்பட்டிருப்பது ஒரு சிறந்த அம்சமாகும். இந்தக் கணபதி உருவம் குறுகி உட்கார்ந்திருப்பது போல் காணப்படுகிறது. தமிழ்நாட்டுக் கணபதி உருவம்போல் தலை நிமிர்ந்து கெம்பீரமான பார்வையில் காணப்படவில்லை. மகுடமும் உயர்ந்து அழகுறப் பொலியவில்லை.

### திருமால் (மகாவிஷ்ணு)

சாவக மக்கள் உள்ளம் சமயப்பற்று நிறைந்ததாய் மலர்ந்தது. அவர்கள் தெய்வ உருவங்களை மனிதவடிவிலும் அல்லது மனித உருவமும், விலங்குகள் பறவைகள் உருவமும் கலந்த வடிவிலும் உருவாக்க முனைந்தனர். தமிழ்த் தாயகம் உருவாக்கியதைப் போன்று சாவகத்தில் எல்லாக் கலைகளையும் அதன் உச்சகட்டத்திற்கு உயர்த்தினர். சாவகக் கோயில்களின் உள்ளே வாயிலில் துவாரபாலகர்கள் காவல்காத்து நின்றனர். பூதங்கள் குள்ளவடிவில், பெரிய கண்களும், அடர்ந்த மீசையும், கூரிய பற்களும் உடையவர்களாய் வெளிப்புறம் காவல்காத்து வந்தனர். கையில் வாள் அல்லது அதிகார முத்திரைக்கோலும் தாங்கி மார்பில் பூணூல் தரித்தாற் போன்று பாம்பையும் அணிந்து

மூழுந்தாளில் நின்று திருக்கோயிலைக் காவல் புரிவதுபோல வாயில்பக்கம் சிலைகள் பல உள்ளன.

மற்றோர் அற்புதமான சிலை, மனித உருவம் தாங்கிய கருடன்மீது திருமால் (விஷ்ணு) அமர்ந்திருப்பது போல் காட்சியளிப்பதாகும். முற்காலத் திராவிடசிற்பங்களில் திருமாலின் வாகனமாகிய கருடன் பறவை வடிவிலே இருந்தது. ஆனால் இடைக்காலச் சிற்பவடிவங்களில் வளைந்த கூரிய அலகையுடைய ஒரு மனிதனுடைய உருவிலே மாறியது. இந்த இந்திய மூலப்படிமத்தை அனுசரித்துச் சாவகச் சிற்பிகள் இந்தப் பெருமைமிக்க மனிதக் கருடாழ்வாரை உருவாக்கி விட்டனர். இந்த ஆழ்வார் பெரும்பாலும் மனித உருப்பெற்றிருந்தாலும் முன்னே நீண்டு தள்ளிக்கொண்டிருக்கும் அலகும் இறக்கைகளும், நீண்ட அழகிய வாலும், நகங்களும் அது பறவையின் மூலத்தினின்று பிறந்தவை என்பதை எடுத்துக்காட்டுகின்றன.

முதன் முதலாக இராமனுடைய துணைவனாக இருந்த சடாயு (கருடன்) விஷ்ணுவின் வாகனமாக இருப்பதை நாம் அறிகிறோம். ஆனால் பெலகான் என்னும் இடத்திலுள்ள விஷ்ணுவின் ஆச்சரியமான திருஉருவம் மிக்க கோர உருவமுடைய கருடனை வாகனமாகப் பெற்றிருக்கிறது. அது கிழக்குச் சாவகத்திலுள்ள பழைய சிலைகளில் மிகச் சிறந்த தொன்றாகக் காணப்படுகிறது. இதை உருவாக்கிய சிற்பி மிகக் கவர்ச்சியான முறையில் குரூரமான கருடன், நாகத்தைத் தன்னுடைய பன்றிபோன்ற தலையாற் பயங்காட்டிக் கொக்கி போன்று வளைந்த கூரிய நகங்களால் இறுகப் பிடித்துக் கொண்டு நிற்பது போலமைத்துள்ளார். மிகஉயர்ந்த தெய்வமாகப் போற்றப்படும் திருமால் தம்முடைய சிறந்த

ஆசனமாகிய தாமரையில் அமைதியாகத் தூங்குவதை விட்டும் ஆழ்ந்த தியானத்தைவிட்டும் இந்தக் கருடன்மீது அமர்ந்துள்ளார். மக்களின் இன்னல்களைப் போக்கும் திருமால் கீழான இச்சைகளை அலட்சியம் செய்தவராகத் திகழ்கிறார் அல்லது தத்துவமொழியில் சொல்வதானால் தாமச, ராட்சச குணங்களை வென்று தமது உயர்ந்த நிலையான சத்வகுணம் உடையவராகத் திகழ்வதாகக் கூற முடியும். சாவகச் சிற்பி உள்ளத்தில் எவ்வித சிந்தனை அரும்பி இத்தகைய உயர்ந்த படிமத்தை உருவாக்கினாலும் இதற்கு இணையான திருமாலின் உருவம் இந்தியாவிலே பார்ப்பது அரிது என்று அறிஞர் டாக்டர். ஜே. பிஎய்ச் வோகல் அவர்கள் கூறுகிறார்கள்.*

பெலஹான் என்னும் இடத்திலுள்ள திருமாலின் திருஉருவம் உயர்ந்த கலை அம்சம் நிறைந்ததாகும். அஃது ஒரு சிறப்பான வரலாற்றுப் புகழ்வாய்ந்த சிற்பக் கருவூலம். நாம் அறிந்த அளவில் அஃது உண்மையான நாட்டுப் பழங் குடிகள் வாழும் இடமாக இருந்தது. பண்டைக்காலச் சாவகப் பழக்க வழக்கங்கள் அங்கு ஏற்றுப் போற்றிப் புகழ்ந்து வரப்பட்டன. இந்திய நாட்டில் இத்தகைய சிற்ப உருவம் எக்காலத்திலும் நிலவியதாக நமக்குத் தெரிய வில்லை. பழைய சாவக வரலாறுகளில் மன்னன் மறைந்தால்

---

*The Relation between the art of India & Java - by Dr. J. PH. Vogel - London. 1925. P. 48.

In the first number of Ruparn (January 1920) the image in question is reproduced side by side. With a late mediea-val sculpture from Varendra representing the same subject. Nothing certainly could more clearly bring out the superio-rity of Javanese Plastic art than the Juxtaposition of these two Sculptures.

அவன் உடல் சுடப்படும். அந்தச் சாம்பலின்மீது கோயில் கள் கட்டும் வழக்கம் பெரிதும் இருந்து வந்தது. அந்தச் சாம்பலின்மீது புத்தர் அல்லது சிவபெருமான் திருஉருவம் அமைக்கப்படும். அதனால் அரசன் தெய்வீக நிலையைப் பெறமுடியும் என்ற நம்பிக்கை மக்களிடமும் அரச குடும்பத் தாரிடமும் நிலவியது.

திருவுடைய மன்னர்கள் எல்லாம் திருமாலின் அவதாரம் என்று எண்ணும் தமிழ்நாட்டு வைணவ சம்பிரதாயம் சாவக நாட்டிலுள்ள மக்களிடமும் பரவி இருந்தது. இந்த அபிப் பிராயம் கிரேக்க நாட்டிலும் இருந்தது. இந்தியாவிலும் தமி ழகத்திலும் முற்காலத்தில் மன்னர்களை மக்கள் தெய்வீகத் தன்மை வாய்ந்தவர்களாகவும் தெய்வ அவதாரமாகவும் கருதி அவர்களுக்குச் சிலை உருவாக்கித் தொழும் வழக்கம் பெரும் பாலும் இல்லை. இந்தியக் கலையில் அரசனுடைய உருவங் களைச் சிலையில் வடித்துத் தொழும் வழக்கம் கிடையாது. ஆனால் பிற்கால அரசர்களின் உருவங்கள் கோயில்களில் தெய்வங்களை வணங்கும் நிலையிலும் தொண்டாற்றும் முறை யிலும் செய்து வைக்கப்பட்டுள்ளன.

பெலஹானில் காணப்படும் விஷ்ணு சிலை (கருட வாக னத்தின்மீது வீற்றிருக்கும் சிற்ப வடிவம்) கிழக்குச் சாவகத் திலுள்ள முதலாவது மகா மன்னன் ஜர்லங்காவின் உருவமே என்று பேராசிரியர் கிரோம் (Krom) உள்பட பல அறிஞர்கள் கருதுகிறார்கள்.

கிழக்கு ஆசியத் தீவுகளில் திருமால் (விஷ்ணு) புத்தர், சிவன் முதலிய தெய்வங்களோடு ஒப்புடையதாகக் கருதப் படுவதில்லை; இரண்டாந்தரத் தெய்வமாகவே எண்ணி வணங்கப்படுகிறது. கிழக்கு ஆசியாவில் காணப்படும்

இறந்துபோன அரசர்களின் உருவங்கள் சிவன் அல்லது போதி சாத்தவர் அல்லது மஹாயான சமயத்தின் தியான புத்தர் உருவங்களில் ஒன்றைப் போல இருக்கும். சாண்டி ஜாகோவில் உள்ள விஷ்ணுவர்த்தனரின் சமாதிக்கோயில் கி. பி. 1268ஆம் ஆண்டில் இறந்துபோன சிங்காசாரியின் மிகப் பிரசித்திபெற்ற மன்னருடையதாகக் கருதப்படுகிறது. எனவே, மிகவும் சின்னுபின்னமுற்ற அந்தக் கோயிலில் காணப்படும் லோகேஸ்வர அமோக பாஷாவின் திருஉருவம் (போதிசாத்தவ அவலோகீஸ்வரரின் அமைப்பில் உள்ளது) கிழக்குச் சாவகத்தில் உள்ள மாமன்னனின் படிவமாகவே இருக்கவேண்டும். நாகரா-கிரேட்காமா (Nagara - Kretagama) வில் குறிப்பிடப்பட்டுள்ள புத்தராக* வழிபடும் உருவம் சிவபெருமானுக இருந்தாலும் இருக்கலாம்.

எடுத்துக் காட்டாக 1929 இல் கொலை செய்யப்பட்ட சிங்காசாரியின் இறுதி மன்னனை அறிவிலா கிரட்டனுகரா சிவபெருமானைப் போலவும் புத்தபகவானைப் போலவும் அதே கோயிலில் திருஉருவம் அமைத்து வணங்கப்பட்டு வரு கின்றுன். தவறுன வழியில் ஆளுநர், இறந்தபின் சிவ-புத்த பெயரால் போற்றப்படுகிறுர்கள். பட்டேவியா தொல் பொருள் காட்சிச்சாலையில் காணப்படும் மாஜபாகித் என்னும் மன்னனின் அழகிய படிமமும் சிம்பிங் கோயிலில் வைத்து முன்னர் வணங்கப்பட்டது. செம்பிலான்சில் சிவனுகப் போற்றப்பட்டுவந்தது.

சாவகக் கலைஞர்கள் தெய்வப் படிமங்களை உருவாக்கு வதில் தங்களுக்கு அதிகமான சுதந்தரம் உண்டு என்று நம்பி வந்தனர். அவர்கள் ஒரு சிலையின் உருவத்தில் சங்கு

*Indian Sculpture and Painting by E. B. Havell Plate XXVI.

திகழும்படி செய்துவிட்டால் அது மகாவிஷ்ணு உருவமாய் விடுகிறது என்றும், ஒரு சிலையின் கையில் திரிசூலம் அல்லது உருவமுத்திரைக்கோலும் இருக்கும்படி செய்துவிட்டால் சிவபெருமான் உருவம் ஆய்விடும் என்றும் எண்ணிக் கொண்டனர். அரியும் (சிவனும்) அரனும் (விஷ்ணுவும்) இணைந்த உருவமாகிய சங்கரநாராயணன் (ஹரிஹரன்) உருவம் இஃது என்று முடிவு செய்வதில் சாவகத்தில் பெருங் கடினமாக இருக்கும்.

என்றாலும் இந்தச் சாவகக் கலையில் காணும் தலை சிறந்த படைப்பு உயர்ந்த கலைக்குரிய சிறப்புடையதாய், இருவிதமான அபிப்பிராயங்களுக்கு இடமில்லாதவாறு காணப் படுகிறது. அதனுடைய சாயலில் அஃது இப்பொழுது வழக்கில் இல்லாத அங்கப் பொருத்தத்தைப் பேணி வருகிறது. மேலும் அஃது எல்லாவிதமான நீளியல் மரபு முறையைத் தீவிரமாக அகற்றி உருவங்கள் நிமிர்ந்து உண்டான அரசபாவனையுள்ளதாய் மிளிர்கிறது. சாவகத்தில் காணும் சிலைகளின் உறுப்புக்கள் ஆச்சரியப்படத்தக்க விலையுயர்ந்த அணிகளினால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. அணிகலன்கள் உயர்ந்த கிரீடங்களும், நுட்பமாகச் செய்யப்பட்ட காதணிகளும் எண்ணற்ற பல்வேறு விதமான கழுத்தணிகளும், அஸ்தகடகங்களுமாகத் திகழ்கின்றன. இடுப்பிற்குக் கீழே உள்ள உறுப்புக்கள் உயர்ந்த வேலைப்பாடுகள் உள்ள ஆடைகளால் அணிசெய்யப்பட்டுள்ளன. இரு பக்கங்களிலும் தெய்வீகத் திருஉருவங்களுக்கு இலைகளோடும் நீண்ட தண்டுகளோடும் திகழும் தாமரை மலர்களும் இடைஇடையே அரும்புகளும் அழகுறத் திகழ்கின்றன. அரசனுடைய சிலையில் தலைக்கு அருகே இடது புறமும் வலதுபுறமும் அம்புயமலர்கள் அணியுறத் திகழ்வது அற்புதக் காட்சியாக

இருக்கிறது. இந்த விதமான இயற்கைப் பண்பாடு நிறைந்த தாமரை அணிகலன்கள் கிழக்குச் சாவகக் கலையின் அடையாளமாக இருக்கிறது. அது சிலைக்கு உயிர் ஊட்டுவதாய் ஒளியையும் அழகையும் உயர்த்துவதாய் இருக்கிறது. மாஜபாகித் காலத்திய சிலைகளில் பாதங்களின் இருபக்கங்களிலும் இரு பூந்தொட்டிகளில் தாமரை நீண்டு மலர்களோடும் அரும்புகளோடும் இலைகளோடும் காணப்பட்டுவந்தது. பண்டைக்காலச் சிங்காசாரிக் கலையில் அடித்தண்டிலிருந்தே தாமரை எழுவது போல் காட்டப்பட்டது இப்பொழுது இரு பூந்தொட்டிகளில் தாமரை, மறைவாக இரு பெண் பணியாளர்களுக்குப் பின்னால் நிற்பதுபோல் செய்யப்பட்டிருக்கிறது. இது கிரட்ராஜஸ அரசரின் பிரதான இரு அரசிகளின் உருவத்தின் பக்கத்தில் மிகச் சிறிதாகக் காணப்படுவதாகும். பட்டேவியா தொல்பொருள் காட்சிச் சாலையில் நான்கு கைகளையுடைய பெண் தெய்வத்தின் சிற்ப வடிவம் ஒன்றுள்ளது. அது சிம்பிங் என்னும் இடத்தில் உள்ள ஹரிஹரன் என்று கூறப்படும் உருவத்தோடு நெருங்கிய தொடர்பு உடையதாய் இருக்கிறது. இஃது அதே அளவுடையதாய் அதே பாணியில் அதே வேலைப்பாடுடையதாய்க் காணப்படுகிறது. இந்த இரு உருவங்களும் ஒரே சிற்பியால் செய்யப்பட்டது என்று திட்டவட்டமாகக் கூறக் கூடியதாய் இருக்கின்றது. பெண் உருவம் நீண்ட காலத்திய பழங் காலப் பண்பாட்டில் எழுந்த பார்வதியின் திருஉருவத்தைப் போல் எல்லா அணிகலன்களும் உடையதாய் இருக்கிறது. ஆண் உருவமும் ஆணிற்குரிய எல்லா அணிகலன்களும் பூணப் பெற்றதாய்த் திகழ்கிறது. இதைக் கூடக் கெரட்ராஜஸ அரசனுடைய பட்டத்து அரசியின் உருவமாக எண்ணப் போதிய இடமுண்டு. ஒருவேளை இந்த உருவம் சிவபெருமானுடைய தெய்வீகத் துணைவியான பரமேசுவரி

திரிபுவனையின் தன் மகத்தான நிலையினது எனக் கருத லாம் என்று அறிஞர்கள் மொழிகின்றார்கள். இந்தச் சிற்பச் சிலை உருவிலும் தாமரைப் பூந்தொட்டிகளிலிருந்து எழுந்து சாவக அரசியின் உருவத்திற்கு ஓர் ஒப்பற்ற ஒப்பனையை ஊட்டுவிப்பதுபோல் திகழ்கிறது.

இஃதன்றி மற்றொரு சிலை கிழக்குச் சாவக அரசியைப் பிரதிபலிப்பதாக இருக்கிறது. இது மிகத் தொன்மையான காலத்திலுள்ள சீரிய சிலைக்கு ஓர் எடுத்துக் காட்டாக இருக்கிறது. இஃது உலாந்தா நாட்டிலுள்ள லெய்டன் தொல்பொருட் காட்சிச் சாலையில் உள்ள பிராச்னபரமிதா (Prajnaparamita) என்ற பிரசித்திபெற்ற சிற்பச் சிலையாகும். இந்த எழில்மிக்க சிலை வடிவம் (உயரம் 1 மீ. 26) பலமுறை பல அறிஞர்களால் நிழற்படமாக வெளியிடப்பட்டுள்ளது. இஃது உண்மையில் சாவகநாட்டில் உள்ள ஓர் ஒப்பற்ற சிற்ப உருவங்களில் ஒன்றாக மதிக்கப்படுவதாகும். மேலே குறிப்பிடப்பட்டது பார்வதியின் திருவுருவம் போன்று தெய்வீக ஒளியை வீசுவதாக இலங்குகிறது. ஆனால் அது தெய்வீகத் தன்மையுள்ள வனப்பு சேர்ந்திருக்க வேண்டும். இதனைப்பற்றிக் கலை அறிஞர் ஹேவல் ஒரு சிறந்த அபிப்பிராயம் தந்துள்ளார். அஃதாவது "இது கிழக்கு மேற்குக் கலைகளிலும் ஒரு சிறந்த ஆத்மீகப் படைப்பாகத் திகழ்கிறது" என்பதாகும்.*

பிராச்னபரமிதா என்னும் தெய்வ உருவம் சாவக அரசியின் உருவச் சிலை என்றாலும் பௌத்த நெறியானது, மிக உயர்ந்த ஞானத்தின் குறிக்கோளை அவள் தனது தெய்வீக வடிவின் மூலம் வழங்குவது போல் காணப் படுவதாகக் கூறப்படுகிறது. ஒருவேளை அந்த அரசி

* Indian Sculpture and Painting P. 51. and Plate XIV.

பௌத்த சமயத்தின் பெண் தெய்வத்தின் சிறந்த ஞானக் கோட்பாடுகளைப் பெற்றவளாக இருந்தாலும் இருக்கலாம். 1222ஆம் ஆண்டில் சிங்காசாரியின் முதலாவது முடிமன்னர் கெடிரி அரசனைக் காண்டர் (Ganter) போரில் தோல்வியுறும் படி ஒரு புதிய அரச மரபை அடிப்படையிட்டவள் ஆனாள்.

பிராச்னபரமிதா தேவியின் திருஉருவம் இங்கு நிலை நாட்டப்பட்டது ஒரு நல்ல குறியாகவே எண்ணப்படுகிறது. இந்த அரிய சிலை சாவக நாட்டின் பிற்கால வரலாற்றில் இந்து - சாவகக் கலையின் உயர்ந்த நிலையைக் காண ஏற்ற எடுத்துக் காட்டாக இலங்குகிறது. சாவகத்தின் ஏழு அல்லது எட்டாவது நூற்றாண்டின் வரலாற்றில் இத்தகைய உயர்ந்த சிலை எதுவும் எழுந்தது என்று எடுத்துக் காட்டுவ தற்கு இல்லை. நாம் சாவகத்தின் மிகச் சிறந்த சிலைகளையும் கட்டிடங்களையும் தெளிவாக ஆராய்ந்தே இந்த அபிப்பிராயத் திற்கு வந்துள்ளோம். சாவகக் கலையின் உயர்ந்த தன்மை யையும், அதனுடைய சிறந்த தனிப் பண்பையும் பற்றி நன்கறிய இஃது ஒரு சிறப்புமிக்க எடுத்துக்காட்டாகும். முதலாவது இந்தக் கலை தமிழகத்தினின்று அதன் மூல சக்தியைப் பெற்றிருக்கிறது என்பதை எவரும் மறந்து விடக் கூடாது. ஜாவகத்தின் வரலாறு முழுவதும் பொதுவாக இந்திய, சிறப்பாகத் தமிழகத்தின் சமயங்களோடு நெருங்கிப் பிணைந்தது. தமிழகச் சிற்பிகள் சாவகத் தில் சிறந்த கட்டிடக் கலையையும் கற்சிலைகளையும் தாராளச் சிந்தனையோடு தமது தேசிய மரபிற்கேற்ற முறையில் உருப்படுத்தியுள்ளனர். எனவே மேனாட் டறிஞர்கள் சாவகக் கலையை இந்தியக் கலையாகப் பாவித்து ஆராய்ந்துள்ளனர். சாவகக் கலை, இந்திய சமய உத்வேகத்தினால் உந்தப்பெற்று இந்திய மூலத்திற்கு மாண்

படாவண்ணம் சாவக மண்ணில் துளிர்த்தெழுந்துள்ளது. அதன் மீது சாவகச் சாயல் படிந்திருக்கிறது. இது நமது முடிபு மட்டுமன்று, அறிஞர் ஆனந்தகுமாரசுவாமி போன்ற கலைமேதைகளின் எண்ணமும் ஆகும்.

இந்தியாவில், இஸ்லாமிய வெற்றி, நாட்டின் தேசிய சமயங்களின் பல கோயில்களை அழித்தது. ஆனால் பல பெரிய நகரங்களில் அயல் நாட்டுப் பாணியில் பல உயர்ந்த பள்ளிவாயில்களை எழச் செய்தது. சாவகத்தில் முஸ்லிம்கள், தமது சமயத்தை நிலைநாட்டும் பொழுது குறைந்த அளவு பலாத்காரத்தைத்தான் பயன்படுத்தியுள்ளனர். எண்ணற்ற பழம் பெரும் கோயில்களையும் விக்கிரகங்களையும் அழிக்காது விட்டு விட்டனர். இந்தோனேசிய இஸ்லாமியர்கள் இந்தியாவில் செய்தது போல் அங்குப் பெருங்கலைகளை உருவாக்க முன்கையை நீட்டவில்லை. இந்தோனேசியச் சிற்பிகள் சிறிய தொழில்களில்தாம் ஈடுபட்டுள்ளனர். என்றாலும் இன்னும் தமது கைவண்ணத்தையும், கலைத் திறமையையும் காட்டி வருகின்றனர்.

இந்து - சாவகக் காலத்திய சமய நினைவுச் சின்னங்கள், சாவக நாட்டின் மாபெரும் தேசிய சிறப்பிற்கு உறைவிடமாய், இந்தியச் சிந்தனைகளை வெளியிட்டு உலகிலுள்ள பேரறிஞர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொள்வனவாய் இன்றும் நிலவுகின்றன. இந்தியச் சமயங்களும் கலைகளும் சாவக மக்களை அடிமைப்படுத்தவில்லை. தம் கலைகளை அந்நாட்டு மக்களின் தலைமீது சுமத்தவில்லை. இந்தியமக்கள் சாவக மக்களோடு கலந்தனர். அவர்களின் சமயமும் கலைகளும் பண்பாடுகளும் நாகரிகமும் சாவகச் சமயத்தோடும் சாவகக் கலைகளோடும் சாவகப் பண்பாடுகளோடும் நாகரிகத்தோடும் கலந்து புத்துயிரும் புதுவாழ்வும் பெற்றன.

---

## 9. ஐம்பெரும் நினைவுச் சின்னங்கள்

### 1. சாண்டி, செவோ (Tjandi Sewoe)

பெரம்பானன் பெருந்திருக் கோயிலுக்குச் சிறிது தொலைவில் இந்தக் கோயில்களின் முக்கிய கட்டிடம் உள்ளது. அது மேற்றளத்தின் அமைந்திருக்கிறது. மேற்றளத்தைச் சுற்றி நான்கு—கிட்டத்தட்ட—சதுர வடிவ சுற்றுக்களாலான சிறிய பெட்டகக் கோயில்கள் மொத்தம் 240 இருக்கின்றன. இவை ஒரு பௌத்த கோயில் தொகுதியாகும். இவை இருக்கும் நிலையை உற்று நோக்கினால் முற்றிலும் வேலைகள் முடிக்கப்பெற்ற கோயில்களாகப் புலப்படவில்லை. இரண்டாவது சுற்றுக்கும் மூன்றாவது சுற்றுக்கும் இடையே ஐந்து பெரிய கோயில்கள் உள்ளன.

நடுவில் உள்ள கோயில் மேற்றளத்திற்குச் செல்லும் நான்கு படிக்கட்டுக்களாலான பாதைகளை உடையதாய் இருக்கிறது. அது கிரேக்கச் சிலுவை அமைப்பில் கோணங்கள் முன்னே துருத்திக் கொண்டிருப்பது போல் காணப்படுகிறது. இங்கே நீண்ட சதுரங்கள் ஒரு நீண்ட வழியில் முன்னே தள்ளிக்கொண்டு நிற்கின்றன. ஒவ்வொன்றிற்குள்ளும் ஓர் அறை அடங்கி இருக்கிறது. கிழக்குப் பக்கத்து மண்டபத்தின் வழியே சென்றால் நடுவில் உள்ள அறையை அடைய முடியும். அங்கு நீண்டகாலமாகச் சிலை எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை. இப்பொழுது நாம் இங்கிருந்து மீண்டும் எளிதாகத் திருக்கோயிலின் உட்புறம் செல்ல முடியும். இதன்மீது நான்கு நீண்ட சதுரமான கட்டிடம் கோயில்களுக்கு எதிராகக் கட்டப்பட்டு ஒரு தாழ்ந்த

கூரையுடையதாய் இருக்கிறது. மேலும் அது நடுக்கட்டிடத்திற்கும் அதன் கூரைக்கும் மேலே உயரமாக நீண்டு கொண்டிருக்கிறது. அந்தக் கட்டிடத்தைச் சுற்றி ஒரு குறுகிய கலைக் காட்சிக்கூடம் உள்ளது. அது பக்கத்துச் சிறிய நுழைவாயில் வழியாய்க் கடந்து செல்லக் கூடியதாக இருக்கிறது. மேலும் அது தாழ்ந்த சுவரால் வெளியே உள்ள மாடத்திலிருந்து தனித்து நிற்கிறது. வெளியேயுள்ள கட்டிடம் மிகவும் நல்ல அலங்காரம் செய்யப்பட்டதாக இருக்கிறது. ஒவ்வொரு கோயிலும் ஒரு நல்ல தலைவாயிலையும் முகமண்டபத்தையுமுடையதாக இருக்கிறது.

ஒவ்வொரு நிலப்படத்திலும் (Plot) கோயிலின் குப்பைக் குவியல்களின் இடையே தியான புத்தர் உருவம் காணப்படுகிறது.

இந்தப் பகுதி முழுவதும் ஒரு சதுரமான சுற்று மதில்கள் உடையதாக இருக்கிறது. அதன் ஒவ்வொரு பக்கத்திற்கும் ஒரு பெரிய நுழைவாயில் இருக்கிறது. ஒவ்வொரு வாயிலிலும் இரு துவார பாலகர்கள் கெம்பீரமாக நின்று கொண்டிருக்கின்றனர். அவர்கள் இராட்சதர்கள் என்று கூறப்படுகிறார்கள். அந்த வாயில்காப்போர் கைகளில் ஆயுதங்களுடன் பயங்கரத் தோற்றத்தோடு சிலை வடிவில் நிற்கின்றார்கள்.

திருமதிலுக்கு வெளியேயுள்ள இடத்தைச் சுற்றிச் சிறிது தூரத்தில் ஒவ்வொரு நுழைவாயிலுக்கும் எதிரே ஒரு சிறு கோயில் இருக்கிறது. சாண்டி போயிபரா (Tjandi Boebrah) என்ற நான்கு கோயில்களுக்கு எதிராகப் பல கட்டிடங்கள் தென் கோடியில் இருந்தன என்று எண்ணுவதற்குரிய அடையாளங்கள் இன்றும் இருந்து வருகின்றன.

## 2. சாண்டி லோயம் போயெங் (Tjandi Loemboeng)

சாண்டி செவோய்க்குத் தென்பக்கத்தில் சாண்டி லோயம் போயெங் என்ற சிறு கோயில் கூட்டம் உள்ளது. அது பெரிய கோயிலின் அழிபாடாகும். அதைச் சுற்றிச் சதுர வடிவம் வாய்ந்த பதினாறு சிறிய கோயில்கள் இருந்திருக்கின்றன.

நடுவில் இருந்த கோயில் இருபது உருவம் அமைந்த செங்குத்துக் கோட்டிற்குச் செங்கோணத்திலுள்ள ஒரு பகுதி காட்சி அளித்துக் கொண்டிருக்கிறது. உள்ளே மாடங்கள் உள்ளன. ஆனால், அதில் சிலைகள் இருப்பதாகத் தெரிய வில்லை. வெளியே போதிசாத்தவர் சிலை நின்ற கோலத்தில் செதுக்கப்பட்டுள்ளது.

இந்தக் கோயில், பொதுப்படக் கூறுவதானால் சாண்டி செவோ போன்றதாக இருக்கும். ஆனால் தலைவாயிலில் முக மண்டபம் எதுவும் இல்லை. அவைகள் அலங்கரிக்கப்படவு மில்லை. சாண்டி லோயம் போயெங் வேலை முழுதும் முடிந்த கோயில் என்று சொல்வதற்கில்லை.

இன்னும் கிழக்கே சென்றால் பிற்காலச் சாண்டிலோரோ சேங்கிராங் என்னும் புனித பூமிக்கு அருகில் மாபெரும் பௌத்த கோயிலான சாண்டிசெவோ என்னும் 9 ஆம் நூற்றாண்டில் தோன்றிய புனித ஸ்தலம் இருக்கிறது. இங்குப் பெரிய மத்திய கோயில் மேலும் கலசான் வகை மாதிரி அபிவிருத்தியடைந்து பக்கவாட்டிலுள்ள வழி பாட்டிடங்கள் வெளிப்பகுதிவரை திறந்திருக்கிறது. அதன் மாடங்களும் வளைவுகளும் ஆதியில் உள்ள திருவுருவங்க ளோடு நிறைந்த அலங்காரங்களைப் பெற்றிலங்குகிறது. முக்கியமான கோயில் உள்ளறை ஓர் அமர்ந்தகோல சாக்கிய

முனிவரின் (புத்தரின்) திருவுருவைப் பெற்றிருக்கிறது. மத்திய கோயிலைச் சுற்றிப் பரந்த நிலப்பரப்பில் சிறிது தொலைவில் சுவர் அருகில் இரண்டு வரிசையுள்ள சிறு தனித்த வழிபடும் இடங்கள் உள்ளன. இவைகள் எண்ணிக்கையில் இருநூற்று ஐம்பது இருக்கும். "இந்தத் திருக்கோயிலின் வெவ்வேறு விதமான அமைப்பு முறைகளையும் வேறுபட்ட எழில்மிக்க வேலைப்பாடுகளையும், அலங்காரங்களின் அழகையும், காட்சிமூலம் அளவிட்டுணர முடியாது.

## 3. சாண்டி பிளாவோசான் (Tjandi Plaosan)

சாண்டி செவோவிற்கு வடகிழக்காகச் சாண்டி பிளாவோசான் என்ற ஒரு சின்ன இடம் இருக்கிறது. இந்தக் கோயிற் றொகுதிகளைப்பற்றி மக்கள் 19 ஆம் நூற்றாண்டின் நடுவில்தான் முதன்முதலாக அறிய முற்பட்டனர். இந்தக் கோயிற் றொகுதிகள் சீர்குலைவதற்கு முக்கிய காரணமாய் இருந்தது கி. பி. 1867 ஆம் ஆண்டில் ஏற்பட்ட பெரிய பூமி அதிர்ச்சியாகும்.

இரண்டாவதாக முடியும் சுவரின் உள்ளே ஒரு நீண்ட சதுர நிலப்பகுதி உள்ளது. அஃது இடையே சுவரால் இரு சிறு சதுரமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு சதுரமும் ஒரு விஹாரமாகக் (துறவோர் இறக்குமிடம்) கட்டப் பட்டுள்ளது. இது சாண்டிசாலியோடு ஒத்திருப்பதாகத் தெரிகிறது. இங்குக்கூட மேல்மாடி குடியிருக்கக் கூடியதாகக் காணப்படுகிறது. இது குடியிருக்கவும் சமயச்சடங்குகள்" செய்யவும் ஏற்றதாக அமைக்கப்பட்டிருக்கிறது. இங்குப் பல போதிசாத்தவர்கள் சிலை உருவங்கள் காணப்படுகின்றன. அவைகளில் பெரும்பாலானவற்றை ஜோஸ்ஜாவில் (Djocjca) உள்ள புதைபொருள் ஆராய்ச்சித் துறையினர் தங்கள்

காட்சிச் சாலைக்கு எடுத்துக்கொண்டு போய்விட்டனர். சிலைகளின் உடைந்த பகுதிகள்கூட அங்குச் செல்லும் பார்வையாளர்களால் குறைக்கப்படுகின்றன. ஒருநாள் காலையில் போதிசாத்தவரின் சாயலையுடைய மைத்திரேயரின் அழகிய ஒரு தலை உடைபட்டுக் கிடந்ததை உலாந்தாப் புதைபொருள் ஆராய்ச்சி அறிஞர் ஒருவர் கண்டு வருந்தினர். அதன் சிற்பச் சிறப்பைக் கண்டு களித்து விட்டுச் சென்றார். மறுநாள் அவர் சென்று பார்த்தபொழுது அந்த அழகிய உடைந்த சிலையின் தலைப்பகுதி எங்குப் போய்விட்டது என்று அவரால் கண்டு பிடிக்கமுடியவில்லை. இதுவரை அதற்குத் துப்பே துலங்கவில்லை என்று வருந்திப் பத்திரிகையில் எழுதினர். சில ஆண்டுகளுக்கு அப்பால் அந்த அழகிய சிலையின் தலை கோபன்ஹாமில் உள்ள ஒரு பழைமையான பொருட்காட்சிச் சாலையில் காணப்பட்டது.

இரண்டு விஹாரைகளுக்கும் முன்னுள்ள கட்டிடம் வாயில் முக மண்டபம் போல் காணப்படுகிறது. இந்த முகமண்டபத்தின் பக்கச் சுவர்களில் மாடங்கள் உள்ளன. அதில் சில உருவங்கள் உள்ளன. அறைகளின் பின்னுள்ள சுவர்களின் எதிரே பீடங்கள்மீது சிலைகள் உள்ளன. இதைப் பற்றி அறிஞர் இஸர்மான் (Yzerman) அவர்கள் ஆராய்ந்து கண்டுபிடிக்குங் காலத்தில் போதிசாத்தவர் உருவங்கள் 18 இருந்தன. அவைகள் இன்றும் பீடத்தின் மீது உட்கார்ந் திருக்கும் நிலையில் இலங்குகின்றன. இப்பொழுது அவை களில் பல உருக்குலைந்து போய்விட்டன. பக்கத்தில் உள்ள அறைகளில் பலகணிகள் உள்ளன. முடியும் இரண்டு சுவர்க ளுக்கு இடையே மூன்று வரிசையான சிறு கோயில்களும் (முதல் வரிசையில்) வட்டவடிவமான பீடங்களும் (2 ஆவது 3 ஆவது வரிசையில்) உள்ளன. இந்தப் பீடத்தின்மேல்

ஸ்தூபங்கள் இருந்திருப்பதாகத் தெரிகிறது. மணி வடிவமான சிறு கட்டிடத்தின் உச்சிப் பகுதியில் உள்ள பகுதிகள் இன்னும் ஆங்குச் சிதையாது காணப்படுகின்றன. இந்த ஸ்தூபங்களின் வரிசைகள் ஒவ்வொரு மூலையிலும் சிறு மாடங்களைப் பெற்றிருக்கின்றன. இந்தச் சிறு மாடத்தில் தியான புத்தரின் உருவங்களில் சிலவற்றை அறிஞர் இஸர்மான் கண்டுபிடித்துள்ளார். இந்தச் சிறு ஸ்தூபிகள் இறந்து போனவர்களின் சாம்பல்கள் புதைக்கப்பட்ட இடமாக இருக்கலாம்.

விகாரத்தின் வடபகுதியின் எல்லை ஒரு நீண்ட சதுர வடிவமாக இருக்கிறது. அதன் நடுவில் சதுரமான மேற்றளம் முடிகிறது. அங்கும் பல தியான புத்தர் உருவங்களும் போதி சாத்தவர் உருவங்களும் இருந்த அடையாளங்கள் உள்ளன. தெற்குப் பக்கத்தில் முதலில் ஒரு திறந்தவெளி காணப்படுகிறது. அதன் நடுவே மேற்றளமுள்ள நீண்ட சதுரமான சுவர்கள் உள்ளன. அவற்றின்மீதும் மூன்று சிலைகள் உள்ளன. வடக்கில் நீண்ட சதுரமும், வட்டமானதுமான ஸ்தூப பீடங்கள் அடங்கி நிற்கின்றன. தெற்குப் பகுதியில் ஒன்று கூடுதலாக இரண்டு வரிசையான பெட்டகக் கோயில்கள் உள்ளன.

## 4. இராட்டோ போகோவிலுள்ள கிரேட்டன் (The Kraton of Ratoe Boko)

பெரம்பானன் தெற்கில் காலி ஒபாக் (Kali Opak) என்ற பகுதியுண்டு. தெற்கில் உள்ள மணற்கல் பகுதியில் இராட்டோ போகோவின் கிரேட்டன் என்று சொல்லப்படும் இடம் உண்டு. இது பழங்கதைகள் கூறும் இராட்சச இளவரசன் இருந்த இடமாகும். ஒருவேளை பழைய மாத்ராம் என்னும் மன்னன் வாழ்ந்த இடமாகவும் இருக்கலாம்.

இங்கு எண்ணற்ற கற்கட்டிடங்கள் காணப்படுகின்றன. இதனுடைய ஒருபகுதி கோயிலாக இருக்கமுடியாது என்று எண்ணப்படுகிறது. மற்றையவை சுற்றிலும் அகழ்சூழ்ந் திருக்கும் அரண்மனையாக இருக்கலாம். அழிபாடுகளுக்குச் செல்லும்வழியில் இரண்டு செயற்கைக் குகைகள் காணப்படு கின்றன. அவைகள் பாறையை நோக்கிச் சாய்வாக வெளியே வெட்டப்பட்டிருப்பது தெரியும். சாவகமக்களின் பாரம்பரியக் கொள்கைப்படி இந்தக் குகைகள் அரசர்கள் தற்காலிகமாக வசிப்பதற்காகச் செய்யப்பட்டிருக்கலாமெனத் தெரிகிறது. மன்னர்கள் முக்கியமான சில பெரிய குறிப்புக்களை ஆய்ந்து ஒரு முடிவிற்கு வருவதன் முன்பு தனித்திருக்கவும், அல்லது அவர்கள் எப்பொழுதாவது - வேண்டும்பொழுது சிலநாட்கள் மறைந்து வாழவும் இவை பயன்படுத்தப்பட்டன, இராட்டோ போகோ குன்றில் பெரம்பானன் சமவெளியில் கோயில் கட்டுவதற்காகக் கற்பாளங்களைப் பெயர்க்க அவசியமாகச் செய்யப்பட்ட அறிகுறிகள் இன்றும் நன்குகத் தெரிகின்றன. பெரம்பானன் கோயிலுக்கு அடிப்படையிடவும் சுவர்கள் கட்டவும் முக்கியமாக உபயோகப்படுத்தப்பட்ட கரடுமுரடான கற்கள் இங்குத்தான் கிடைத்தன. ஆனால் அவைகள் சிலைகள் வடித்தெடுக்க உபயோகப்படுத்துவதற்கு ஏற்றதல்ல.

## 5. கெடாங் சங்கா (Gedong Sanga)

கெடாங்காவின் அரிய தொல்பொருள்கள் பல குரோயென்குரோயெங்கானின் (Kroengroengan) தெற்குப் பகுதியில் வைக்கப்பட்டுள்ளன. அஃது ஒயென்காரன் மலையுச்சியில் இருக்கிறது. அதை அடைய நல்லவழி, அம்பாரவா என்னும் இடத்திலிருந்து மோட்டார் மூலம் பாண்டோயெங் வழியாக டாரக்கோன் என்னும் இடத்திற்குப்

போகவேண்டும். அங்கிருந்து குதிரை மீதேறி டாரோயெம்மின் சிற்றூர் வழியாகப் போய்ச் சேரலாம். இஃதன்றிப் பண்டோயெங் வழியாய்ச் சோயமோஞே போய் அங்கிருந்து குதிரையின் மூலம் கெடாங் சங்காவிற்குப் போய்ச் சேரவும் முடியும்.

கெடாங் சங்காவின் திருக்கோயில்கள் சாவகத்தில் உள்ள கோயில்களில் மிகப் பழைமையான கோயில்களாகும். இதைச் சுற்றிப் பல கோயில்களும் உள்ளன. டையெங் பீடபூமியின்மீது அர்ச்சுனன் கோயில் இருக்கிறது. கெடாங் சங்காவில் பல கோயில்கள் இருந்தாலும், சமவெளியில் எந்தக் கோயிலும் இடம் பெற்றிருக்கவில்லை. ஆனால் சில கோயில்கள் மலையுச்சியில் இடம் பெற்றுள்ளன. எனவே ஒவ்வொரு கோயில்களினின்றும் ஒரு மகத்தான காட்சியைக் கண்டுகளிக்க முடிகிறது. இந்தக் கோயில் தொகுதிகள் ஒன்றாக இணைந்து இருப்பதாகக் கூறிக் கொண்டாலும் ஒன்றற்கொன்று வெகுதொலைவில் இருக்கிறது.

டாரோயெம் என்னும் சிற்றூரிலிருந்து வந்தால் வந்ததும், முதல் தொகுதியை அடையலாம். அங்கு ஒரே யொரு கோயில்தான் இருக்கிறது. இந்தக் கோயில் அதனுடைய மிகச் சிறப்பான அழகிய அலங்கார வேலைப்பாடுகளால் மிக உயர்ந்து விளங்குகிறது. அதனுடைய மேற்கூரை மூலத் தோற்றத்தைப் போதிய அளவு வெளிக்காட்டிக் கொண்டு நிற்கிறது. இதனைப் புதுப்பிப்பதுகூடச் சாத்தியமானதாய் இருக்கிறது. என்றாலும் இக்கோயில் அழிவு நிலையை அண்மித்து நிற்கிறது.

தொகுதி ஒன்றிலிருந்து ஒரு காலடிப்பாதை தொகுதி இரண்டிற்கு இட்டுச்செல்கிறது. இந்தக் காலடிப்பாதை

வழியாகச் சிறிதுதூரம் சென்ருல் பழங்கால மக்கள் சென்ற யாத்திரை மார்க்கத்தை அடையலாம். அஃது இந்துசமயம் சிறப்புற்று அங்கு வாழ்ந்தகாலத்தில் சாண்டிகிராமத்திலிருந்து மலையடிவாரத்தின் வழியாக நெக்லரங்காலின் சிற்றூர் மூலம் மலைக்கோயிலை அடைய உதவியது. இந்த வழியில் பல சாலைகள் குறுக்கிடுகின்றன. இந்த யாத்திரை மார்க்கம் கெடாங் சங்காவை அடையுமுன் பல கோயில்களைத் தரிசிக்க இடந்தருகிறது. சாண்டி நெக்லரங்கான் ஆகிய இடங்களிலும் சில கோயில்கள் உள்ளன.

இரண்டாவது தொகுதியில் மூன்று கோயில்கள் அடங்கி இருக்கின்றன. பிரதான கோயில் இன்றும் பெரும்பாலும் பழுதுருமல் தலைநிமிர்ந்து நிற்கிறது. அதன் கூரையின் பெரும்பகுதி இன்றும் குலையாதிருக்கிறது. இதைப் பழுதுபார்ப்பது மிகச் சுலபம். இந்தக் கூரையின் அமைப்பு உள்ளத்தைக் கவர்வதாய் இருக்கிறது. அதன் எழில் மிக்க மாடத்தின் உறுதிப்பாடு அதன் பருமனுக்கேற்ப அமைந்திருக்கிறது. அதிலுள்ள எழிலொழுகச் செதுக்கப்பெற்ற ஏந்திழையின் கற்சிலை அல்லது ஆணின் தலை அற்புதமாகக் காணப்படுகிறது. பிரதான கோயிலின் முன் ஒருவர் வரும்பொழுது அங்குள்ள ஒரு சிறு கட்டிடம் இன்னும் அழகு அழியாத கட்டுக்குலையாத கவினுறும் கட்டிடமாகப் பாதுகாத்து வைக்கப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். இது மூன்ருவது தொகுதியைப் போலவே டையெங் சமவெளியின் (சாண்டி செமார்) மீது இருப்பது போலக் காணப்படுகிறது.

அடுத்து மூன்ருவது தொகுதி வருகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக இது குறிப்பிடத் தக்கதாக எழில்மிக்கதாகத் திகழ்கிறது. இது நல்ல சுற்றுச் சார்பில் இருக்கிறது.

இங்குப் பல மாடிப்படிகள் காணப்படுகின்றன. பாதைகளில் கற்கள் பரப்பப்பட்டுள்ளன. இவை பிற்காலத்தில் அமைக்கப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகின்றன. அதை உற்று நோக்கினால் மூலக்கோயிலாக எண்ண இடம் ஏற்படுகிறது. பழைய அடிப்படை, அஃது இணைக்கப்பட்ட சுவரிலும் மாடிக்குச் செல்லும் படியிலும் இருப்பது நன்கு தெரிகிறது. மூன்றாவது தொகுதியின் பிரதான கோயில் மத்திய சாவகத்தில் உள்ள கோயில்களில் குறிப்பிடத்தக்க தாகும். அங்குச் சிலைகள் கோயிலின் வெளிப்பகுதியின்மீது இன்னும் காணப்படுகின்றன. அவைகள் வாயிலுக்கருகில் தெற்கில் மகாகாலனும் வடக்கில் நந்திகேஸ்வரனும், கோயில் கட்டிடத்தின் பின்பக்கம் கணேசனும் தென்பக்கத்தில் குருவும் வடபக்கத்தில் துர்க்கையும் காணப்படுகின்றனர். பிரதான கோயிலுக்கு எதிரே ஒரு சிறிய கட்டிடம் இருக்கிறது. (அது மிகவும் பழுதுற்றிருக்கிறது) அஃது இரண்டாவது தொகுதியில் குறிப்பிட்டதைப்போல் வடக்கில் பிரதான இரண்டாவது கோயிலாக எழுந்திருக்கிறது. மேற்கூரைகள் நிலைகுலைந்துள்ளன. இங்கு உபதளத்தின்மீது மாடம் காணப்படுவது குறிப்பிடத்தக்க உயர்ந்த அம்சமாகும். அங்கே யானையின் ஞாபகார்த்த சிலைகள் உள்ளன. நாம் அறிந்த அளவில் சாவகத்தில் உள்ள திருக்கோயில்களில் இஃது ஒன்றே இத்தகைய மாடத்தைப் பெற்றிருக்கும் கோயிலாகும்.

பிரதான கோயிலின் தென்கிழக்குப் பகுதியில் மூன்றாவது கோயிலின் அடிப்படை இருந்தது. அது முழுவதும் மறைந்து விட்டது. தென்மேற்குப் பகுதியில் கற்குவியல்கள் உள்ளன. அஃது 1829, 1830ஆம் ஆண்டுகளில் இராணுவ உபயோகத்திற்காக மேனாட்டார் கட்டியவைக

ளாகும். இவைகள் இராணுவத்தினரின் சமையலறையாகு மெனத் தெரிகிறது.

மூன்றுவது தொகுதிக்குச் செல்லும் கெடோவிற்கும் சாமராங் குடியிருப்பிற்கும் இடையே எல்லை அமைப்பாக ஆழமான கணவாய் வழியாகச் செல்கிறது. அதில் பத்து மீட்டர் தொலைவு இந்தக் கால்நடைப்பாதை வழியாகச் சென்றுல் கெந்தகச்சுரங்கம் இருக்கிறது. அதை ஒயன்காரன் எரிமலை என்று கூறுவர்.

இந்தக் கணவாய்க்கு வெகு தூரத்தில் தெற்குக் கோடியில் நாலாவது கோயில் தொகுதி இருக்கிறது. அதுவே கிட்டத்தட்ட மிக உயர்ந்ததெனக் கூறலாம். இந்தக் குன்றின் உச்சியில்தான் இந்தத் தொகுதி இருக்கிறது. கெடோ, அம்பாரா ஆகிய இடங்களின் உன்னதமான காட்சி இங்குத் தெரியும். லாவோவிலிருந்து பிரஹோவரை மத்திய சாவகத்தின் வலுவான எரிமலைகளின் கூட்டுத் தொகுதிகள் உள்ளன. நாலாவது தொகுதிக் கோயில் ஒன்று இன்னும் நன்ருக நிமிர்ந்து நிற்கிறது. இரண்டாவது கோயிலின் உடைந்த ஒரு துண்டுச் சுவர் இன்னும் தெளிவாகத் தெரிகிறது. உபதளத்தில் நான்கு பகுதிகளும் இன்னும் காணப்படுகின்றன.

நான்காவது தொகுதிக்கு வடக்கே சிறிது உயரத்தில் முற்காலத்தில் கோயிலோடு சேர்த்துக் கட்டப்பெற்ற குருக்களின் மடங்கள் இருக்கின்றன. இஃது ஐந்தாவது தொகுதிக்கு வடக்கே காணப்படுகிறது. கெடாங் சங்காவின் உள்ள எல்லாப் பகுதியிலும் இது மிக விசாலமானது. பிரதானமான கோயிலைச் சுற்றி இத்தொகுதியைச் சேர்ந்த 8 சிறிய கோயில்கள் இன்றும் உள்ளன. இங்கு உபதளம்

மட்டும் விடப்பட்டுள்ளன. இந்தக் கூட்டுத் தொகுதியின் வடக்கே நான்கு கோயில்கள் உள. அதில் பல அழகிய சிலைகள் காணப்படுகின்றன. ஆனால் அவைகள் பத்திரமாகப் பாதுகாக்கப்பட வேண்டும். இவற்றுள் மிக வனப்பு வாய்ந்தவை எல்லாம் பார்வையாளர்களின் முரட்டுக் கைகளால் வருந்தத்தக்க முறையில் சேதப்படுத்தப் பட்டுள்ளன.

ஐந்தாவது தொகுதிக்கு வடக்கே அதே தூரத்தில் ஆறுவது தொகுதி உள்ளது. இங்கு மிகச் சிறிய இரு கோயில்கள் அடங்கியிருக்கின்றன. அதற்குப் பக்கத்தில் மிக அவலட்சணமான சிலைகள் சில உள்ளன.

எஞ்சியவைகள் இந்தக் கோயிலைச் சுற்றியுள்ள நிலப் படத்தில் உள்ளன. அவைகளில் சில கோயில்களும் கட்டிடங் களும் கோயில் தொகுதிகளும் உள்ளன. அவைகள் மேனாட்டி லிருந்து வரும் சுற்றுப் பயணிகளுக்கு முக்கியமானவையல்ல.

## 10. டையெங் மேடு (The Dieng Plateau)

டையெங் என்னும் மேடு, கடல் மட்டத்திற்கு 6500 அடிக்கு மேல், பெகாலாங்கன் (Pekalongan) பாஞ்சோமஸ் (Panjoemas) கெடோ (Kedoe) செமராங் (Semarang) என்ற நான்கு குடி இருப்புப் பகுதிகளின் எல்லையில் இருக்கிறது. கோயனோயெங் பிராஹோ (Goenoeng Prahoe) என்ற சங்கிலித்தொடர்போல் தொடர்ந்து சூழ்ந்து நிற்கும் மலை உச்சிக்களுக்குக் கிழக்கிலும் கோயனோயெங் பங்கோனங் (Goenoeng Pangonang) என்ற மலைக்கு மேற்கிலும் டையெங் மேடு புடலங்காய் போன்று நீண்டு ஒடுங்கிய மேட்டுநிலமாக இருக்கிறது. அஃது ஒரு புராதன எரிமலைக்குழி யின் அடிப்பகுதியேயன்றி வேறன்று.

இந்த மேட்டு நிலப்பகுதி சைவ சமயக் குருமார்களான சிவபக்தர்கள் வாழ்ந்த மிகப்பெரிய இருப்பிடமாகும். பெரும்பாலும் டையெங் மேடு முழுவதும் கோவையாகக் கட்டப்பட்டுக் கற்பதித்த பாதைகளால் ஒன்றோடொன்று பொருந்தும்படி இணைக்கப்பட்டிருக்கிறது. அங்கு இன்னும் அதன் பழைய அடிச்சுவடுகள் தென்படுகின்றன. இப்பொழுது அதன் பெரும்பகுதி வீழ்ந்து அழிந்து மறைந்து விட்டது. ஆனால் ஒரு சில அழிபாடுகள் இன்னும் ஓரளவு ஆராயத்தக்க நல்ல நிலையிலே இருக்கின்றன. இந்த மேட்டு நிலத்திற்குக் கஷ்டப்பட்டுச் செல்பவர்கள் மனச்சாந்தி பெறுவதற்குப் போதிய அளவிற்கு மேலாக அங்குக் கலைச் செல்வங்கள் விட்டு வைக்கப்பட்டுள்ளன என்பதில் எவருக்கும் கருத்து வேற்றுமை இருக்க முடியாது.

இந்த உயர்ந்த சமவெளியின்மீது குளிர் நிறைந்த இடத்தில் சிறந்த சிவன்கோயில்களையும் சைவத் திரு மடங்களையும் கட்டுவித்ததன் காரணம் இந்தத் தொகுதியிலுள்ள மலைகளின் தீத்தன்மை தீரலாம் என்ற நம்பிக்கையே யாகும். சாவகமக்களின் எண்ணம் இந்தப் பகுதியில் உள்ள சில மாவட்டங்கள் பல்வேறு இயற்கைக்கு மாறான சக்திகளால் ஆளப்படுகிறது என்பதேயாகும். இந்தப் பழங்கால சாவகமக்களின் பயத்தைப் போக்க அங்குச் சிவபெருமானின் திருக்கோயிலை எடுப்பித்துச் சிவபெருமானை வேண்டினால் இத் தீய சக்திகளெல்லாம் மறைந்து எங்கும் இன்பம் நிலவும். யாவரும் இன்புற்று வாழ்வர் என்று கூறி இம் மலைமீது திருக்கோயிலை எழுப்பினர். இதனால் மக்கள் பேய் பிசாசு போன்ற தீய சக்திகளின் பயம் நீங்கப் பெற்றனர். அதனால் மக்கள் மனதில் சிவபெருமான் நிலைத்து நின்றார். இதன்மூலம் எங்கும் சிவன் கோயில்கள்

துளிர்த்தன. சைவசமயம் தழைத்தது. பொதுவாகச் சாவகத்தில் திராவிடமக்களின் செல்வாக்கும் சிறப்பாகத் தமிழ்மக்களின் செல்வாக்கும் வளர்ந்தன. சக ஆண்டு 841 இல்(=கி. பி.919 இல்) எழுதப்பெற்ற ஒரு சாசனத்தில், டையெங் மேடு சாவகத்தின் பரிசுத்தமான மலைகளில் ஒன்று என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அதோடு டையெங் மீதுள்ள நகரம் சைவசமய குருவிற்குரிய நன்னகரும் பரிசுத்த யாத்திரைத் தலமுமாகும். இதற்குப் பாகலன், பெகாலோங்கன் சமவெளிகளிலிருந்தும் லோவா பிளாக்கி லிருந்தும் வெட்டப்பட்ட படிக்கட்டுக்கள் வழியாகச் செல்ல முடியும். இந்த மேற்றளத்திற்குச் செல்லும் படிக்கட்டுக்கள் 1860க்கும் 1870க்கும் இடைப்பட்ட காலத்தில் கண்டு பிடிக்கப்பட்டது. டையெங் மேட்டைப் பற்றிய வரலாறுகளில் ஒன்றும் காணப்படவில்லை. அதனுடைய ஆரம்ப காலத்தைப் பற்றியும் வீழ்ச்சிக் காலத்தைப் பற்றியும் துல்லியமாகச் சொல்லக்கூடிய ஆதாரங்கள் இதுவரை எதுவும் கிடைக்க வில்லை. ஆனால் இந்தப் பீடபூமி குறைந்தது நான்கு நூற்றுண்டுகளுக்குப்பின் கைவிடப்பட்டுப், பின் மீண்டும் 1830 ஆம் ஆண்டு மக்கள் குடியேற ஆரம்பித்துள்ளனர். அந்தக் காலத்தில் மரங்களும் செடி கொடிகளும் வளர்ந்து புதரடைந்து மெதுவாக இரு சிற்றூர்கள் எழுந்தன. அதற்கு அந்தப் பரிசுத்தமான திருக்கோயில்களின் அழிபாடுகள் சிறிது உதவியாக இருந்தன.

அவர்கள் முதலாவது அங்கு ஆராய்ச்சி செய்வதற்காகச் சென்று பார்த்தனர். கட்டிடம் பாதி புதையுண்டு கிடந்தது. நாளாவட்டத்தில் இந்தச் சமவெளி பூமியினின்று ஆறு அடி உயர்ந்துவிட்டது. சுற்றி இருந்த மலை உச்சியினின்று மண்ணை மழைநீர் அடித்துக்கொண்டு வந்து இந்தச் சமவெளியை உயர்த்திவிட்டது.

பாரத மக்களில் வடபகுதியில் உள்ளவர்கள் சிறப்பாகக் கொண்டாடும் இதிகாசம் மகாபாரதமாகும். அது தமிழகத்தி லும் மொழிபெயர்க்கப்பட்டுத் தமிழர் உள்ளத்தையும் கவர்ந்து விட்டது. அந்த மகாபாரதத்தில் காணப்படும் முக்கியமான பேர்வழிகளுக்கும், இந்த உயர்ந்த மண்மேட்டின் மீது கட்டப்பட்ட கோயிலுக்கும் இடையே ஒருபெரும் தொடர்பு தோன்றிவிட்டது. இதனால் சாவக மக்களிடையே பாரதக் கதை பரவ ஆரம்பித்துவிட்டது. மகாபாரத காவியத்தில் கூறப்படும் சம்பவங்கள் சில சாவகத்தோடு இணைந்து சாவகச்சாயம் ஏற்றப்பட்டன. எனினும், அந்த இதிகாசத்தில் வரும் வீரர்களின் பெயர்கள் மட்டும் கோயில்களுக்கு இடப்படவில்லை. ஆனால், இந்திய மகாபாரதத்தில் காணப்படாத இரு பெயர்கள் அதில் புகுத்தப்பட்டுள்ளன. என்றாலும் சாவகத்தில் பிறந்த அதனுடைய மொழிபெயர்ப்பில்தான் அதைப் புகுத்தி யுள்ளார்கள்.

1836இல் அழிவுற்ற எண்ணற்ற கட்டிடங்கள் இன்னும் நிலைத்திருக்கின்றன. அவற்றோடு அவற்றின் மேற்றளங்கள் கூட இன்னும் பார்க்கக் கூடிய நிலையில் நிலவுகின்றன. அந்த மேற்றளத்தை ஆயிரக்கணக்கான சுற்றுப் பயணிகள் பார்வையிட்டு வந்துள்ளார்கள். நல்ல பகுதிகளில் பெரும் பாலன மறைந்துவிட்டன. முதல்முதலாக அகழ்ந்தெடுக்க முயன்ற ஆராய்ச்சியாளர்கள் 32 அழிபாடுகளையும் அடிப் படைகளையும் கண்டுபிடித்துள்ளனர். வடக்கிலுள்ள பெரும் பாலான அழிபாடுகளும் வடக்கு ஓரத்திலுள்ள சமவெளியில் காணப்படும் சாண்டி டோரோவதி (Ijandi Dorowati)யும் இன்னும் நல்ல நிலையில் உள்ளன. பேஸங்கிரஹாமின் மேற்குப் பகுதியிலுள்ள நடுப்பீடபூமியில் இருக்கும்

அர்ச்சுனன் தொகுப்பு தென்மேற்கு ஓரத்திலுள்ள சாண்டி பீமோ அல்லது வெர்க்கோடோரா சமவெளியின் அருகில் இருக்கிறது.

சாண்டி அர்ச்சுனு (Ijandi Arjuno) அர்ச்சுனு தொகுதியின் (Arjuna group) வடக்குப் பக்கத்தில் இருக்கிறது. அடுத்தாற்போல் இருப்பது சாண்டி சிரிக்காண்டி (Ijandi Srekandi), சாண்டி பண்டாடிவோ (Tjandi Puntadewo), சாண்டி செம்போட்டிரோ (Tjandi Sembodro) ஆகியவைகளாகும். சாண்டி அர்ச்சுனுவிற்கு முன்னர் நிற்கும் சாண்டி செமார் (Tjandi Semar) முன், இரண்டு, மாடிக்குச் செல்லும் வழிகளையுடையதாய் இருந்தது. ஒரு நெருங்கிய சுவர் இரு கோயில்களையும் சுற்றி நின்றது. அவை இரண்டும் சாண்டி சிரிகாந்தியினின்று பிரிக்கப்பட்டிருந்தன. அதன் அடிப்படை தோண்டி ஆராயப்பட்டதாய் இருந்தது. சாண்டி பண்டாடிவோவும் அதன் துணைக்கோயிலும் சுற்றுமதில்களால் சூழப்பட்டிருந்தன. சாண்டிபண்டாடிவோ ஒரு துணைக்கோயிலைப் பெற்று இருந்ததோடு சுற்றுச் சுவர்களும் நிலைத்து நிற்கின்றன—ஆனால் அது சாண்டி செம்பொட்டிரோவில் அன்று.

சாண்டி பீமோ நன்கு பாதுகாக்கப்பட்ட திருக்கோயிலாக எஞ்சி நிற்கிறது. அது மேற்கூரையுள்ள ஐந்து மாடிகள் அமைக்கப்பட்டு மாடங்களில் மனிதத் தலைகளின் உருவங்களால் அலங்கரிக்கப் பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

டோமிஸில் வரையப்பெற்ற ஒரு புராணக்கதை, அந்த எழுத்தைப் பயின்ற அறிஞர்களால்தான் வாசிக்க முடியும்.

அஃது 1825ஆம் ஆண்டில் டையெங்கில் எழுதப் பெற்றது. அந்தப் புராணக் கதையில் மற்றொன்று பின் வருமாறு :

"சாவகமக்களின் பாரம்பரியத்துவத்தையும், ஒருமுறை இந்தப் பகுதியில் குடியேறியிருந்ததைப் பற்றியும் ஓரளவு கொஞ்சம் குறிப்பிடுகிறது. இந்தச் சமவெளி பாண்டு நிவோ நோட்டோ (Pandu Dewo Notto) அஃதாவது ரஜுனுவின் தந்தையின் முக்கிய இடமாக இருந்தது. இந்த அரசன் முதலில் மகிழ்ச்சியாக அரசாண்டார். ஆனால் தம்மை உயர்த்திக் கொள்ளும் எண்ணம் அவர் உள்ளத்தில் எழுந்தது. எனவே அவர் இராசகுருவினால் (இறைவனால்) விரட்டப்பட்டார். இராசகுரு கோபத்தால் கிளப்பிவிடப் பட்டார். இந்தத் தகாத செய்கையால் எழுந்த கோப நிலையால் அவர் தூக்கியெறியப்பட்டு, அக்னியைக் கக்கும் சாண்டிசோடிமோயெ கோவில்* அவர் தண்டிக்கப்பெற்றார். அதேபொழுது அங்குள்ள ஐந்து கோயில்களைத் தவிர ஆட்சி முழுவதும் நொறுங்கியது. அந்தக்காலத்திலிருந்து அவர் மகன் முன்வந்து, அவனுடைய துர்ப்பாக்கியனை தந்தையின் நினைவுக்குறியாக இந்த மாபெரும் குடியேற்றத்தைச் செய்து தனது இறுதி மூச்சுள்ளவரை விடாமுயற்சியோடு இந்தக் காணிக்கையைச் செலுத்தி விமோசனம் பெற்றான்."

பாண்டு என்பவன் தேவநோட்டோ, அர்ச்சுனன், பீமன் ஆகிய பாண்டவர்களின் தந்தையாவான். இங்குள்ள கோயில்களில் ஒன்று பாண்டுவின் பெயரால் அடிப்படையிடப்பட்டுள்ளது. ஒருவேளை பாண்டுதேவன் என்ற பெயர் மருவி பண்டாடிவோ என்று அழைக்கப்பட்டிருக்கவும் கூடும். பிராஹோவின் (Braho) உச்சியில் காணப்படும்

---

* One mile away from Tjandi Bimo.

கற்குவியல், பிரத்தியட்சமான ஒரு பழைய ஈமவிறகுக் குவியல்போல் இருக்கின்றது. சாவகப் பரம்பரை வழக்கிற் கேற்ப இது பாண்டுவின் சாவுச் சடங்கிற்குரிய விறகுக் குவியலாக எண்ணப்படுகிறது. (இந்தக் குறுகிய நோக்க முள்ள புராணக்கதையை இன்று அறிஞர்கள் நம்புவதற் கில்லை.)

இராமாயணப் பாரதக் கதைகளுக்கும் தமிழகத்திற்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லை என்றாலும் பிற்காலத்தில் உள்ளோர் இக்கதைகளோடு தமிழகத்தைப் பிணைத்து வைத்துள்ளனர். பாரதப்போருக்குத் தமிழக மன்னர்களிடம் உதவி கேட்டதாகவும், சேரன் உதவியதாகவும் ஒரு கதை. பாண்டிய மன்னனின் மகள் ஒருத்தியை அருச்சுனன் மணந்ததாக மற்றொரு கதை. மகாபலிபுரம் என்று கூறப் படும் மாமல்லபுரத்தில் உள்ள பல்லவர்கள் ஒற்றைக்கல் கோயில் மாதிரிக் கோயிலாக எழுப்பப்பெற்றது. இதனைப் பஞ்ச பாண்டவர் இரதம்—அஃதாவது தருமராஜரதம், பீம ரதம் அர்ச்சுனரதம், நகுலரதம், சகாதேவரதம் என்றெல் லாம் கூறும் கட்டுக்கதைகளைப் போல் தமிழர்கள் குடியேறிய சாவகத்திலும் கூட இந்தப் புராணக் கதைகளில் இடைச் செருகல்களைச் செய்து சாவகத்தோடு இணைக்கப் பட்டிருப்பது அறிஞர்கள் ஆராயத்தக்க தொன்றாகும். இதேபோன்று சயாமில் இராமகதை புகுந்து சயாம் நாட்டோடு புகுந்து இராமன் சயாம் நாட்டான் என்றும் இராமகாதை அங்கு நடந்த கதை என்றும் சயாம் மன்னர்கள் இராமனுடைய வழித் தோன்றல்கள் என்றும் கூறப்பட்டு வருவதும் நாம் சிந்திக்கத்தக்கதாகும்.

டையெங் சமவெளியில் சதுப்பு நிலத்தின் நிலை அங்குச் செல்லப் பன்முறை அடிக்கடி முயன்றும் திருப்திகர

மான வழி கிட்டவில்லை. ஆனால், பண்டைக்கால இந்து சகாப்தத்தில்தான் இதற்கு நல்ல வழி கண்டுபிடிக்கப்பட்டிருந்தது. முன்னர்க் குடியேறி இருந்த இடத்தில்கூட இன்னும் நீரோடிக் கொண்டே இருக்கிறது.

"கடல் மட்டத்தினின்று 6,500 அடி உயரத்தில் கவின் பெற இலங்கும் டையெங் மேட்டில், அன்னியர்களுக்கு உபயோகமில்லாமல் தனித்துப் பரந்து கிடக்கும் இந்தக் கோயில் தொகுதிகள் நமது உள்ளத்தைக் கவரக் கூடிய உயர்ந்த இன்பந் தரும் இடமாகும். தத்துவார்த்தம் தரும் ஐந்து வேறுவேறான கோயில் தொகுதிகள் உள்ளன. அவைகளில் சில நன்கு பாதுகாக்கப்பட்டுள்ளன. ஏனையவைகள் வெறும் கற்குவியல்களாகக் காணப்படுகின்றன. பஞ்சபாண்டவர்களின் புகழ்மிக்க பரம்பரையால் அடிக்கடி ஆரோபிக்கும், இந்தியாவில் ஆதியில் எழுந்த பழம்பெரும் கோயில் என்பது உலகப் பிரசித்தி பெற்றதாகும். இதற்கு நல்ல எடுத்துக் காட்டாக இலங்குவது சென்னைக் கடற்கரையில் எடுப்பிக்கப் பெற்ற ஒற்றைக் கல் கோயில் தொகுதியாகும் அவை தர்மராஜ, பீம, அர்ச்சுன, சகாதேவ, அவர்களின் பொதுவான பத்தினியான துரோபதை ஆகியவர்களின் இரதமாகப் பெயர் தரிக்கப்பட்டுள்ளன. அவை நமது சகாப்தத்தின் ஏழாவது நூற்றாண்டைச் சேர்ந்தவை' என்று கட்டிடக் கலையில் பெரும் நிபுணராய் விளங்கும் பேரறிஞர் வெர்கூசன் அவர்கள் மொழிந்துள்ளார்கள். *

தமிழ் நாட்டில் எழுந்துள்ள இதே எண்ணம் சாவகத்திலும் எழுந்து ஐந்து கோயிலாகப் பஞ்சபாண்டவர்கள்

* History of Indian and Eastern Architecture by Fergusson Revised edition (London) 1910 - Vol.1-pp 327 ff

பெயரில் காணப்படுவது ஆச்சரியப்படுவதற்குரிய அருஞ் செயலாகக் கருத முடியாது. சாவகத்தில் உதிஷ்டிரருக்குச் சாண்டி பாண்டதேவ என்ற பெயர் வழங்கப்படுகிறது. சாண்டிபீம, சாண்டி அர்ச்சுன என்பன போன்ற பெயருள்ள கோயில்கள் எழுந்துள்ளன.

டையெங் மேடு ஒரு நாகரிகமான தலைநகராகப் பிரதிபலிக்கவில்லை. ஆனால் புனிதமான தெய்வீக யாத்திரைக்குரிய இடமாக மிளிர்ந்தது. இது கிட்டத்தட்ட மதுரை, திருப்பரங்குன்றம், கன்னியாகுமரி, திருச்செந்தூர், சீர்காழி, திருக்கடையூர், சிதம்பரம் போன்ற புனித இடமாகும். இங்கு நிரந்தரமாகச் சமயப் புரோகிதர்களும், கோயிற் பணியாளர்களும் குடியிருந்தார்கள். இஃதன்றிப் புனித யாத்திரைக்காரர்கள் தங்கும் இடங்களும் உண்டு. ஆண்டிற்கொருமுறை இங்குப் பார்வையிட வரும் மன்னரும் ஏனையோரும் தங்குவதற்குத் தக்க இடங்களுமுண்டு. இந்தக் கோயில்கள் சிறியன. ஒவ்வொன்றும் சுதந்திரமானது. மிகப் பெரியனவற்றுள் எட்டுக் கோயில்கள் மட்டும் இப்பொழுது உள்ளன. பொதுவாக இதனுடைய தோற்றம் பெட்டி போன்றது. அல்லது உச்சியுள்ளதும், செங்குத்தான ஒழுங்குமுறையைப் பலமாக வற்புறுத்தும் கனசதுரமான கட்டுமானத்தை யுடையதுமாய் இருக்கிறது. ஒவ்வொரு கோயிலும், வெளிச்சுவரின் ஒருபக்கத்திலிருந்து தலைவாயில் வெளியே பிதுக்கிக்கொண்டு நிற்கும் அல்லது ஒரு வாயில் மண்டபத்தால் நெருங்கி இருக்கும் ஓர் உறுதியான தனி மாடம் இருக்கும். ஏனைய மூன்று சுவர்களின் மேற்புறங்களின் மேற்பூச்சுகள் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு மூன்று மாடங்கள் அல்லது சிற்ப அரங்கம் வெளியே துருத்திக்கொண்டு இருக்கும்: கூரை பிரதான மாடத்தினின்று தனது

அமைப்பைத் திரும்பச் செய்கிறது. உட்புறம் ஒரு வெளியான குழல்வடிவமான சரிசமத்திண்மம் உடைய தாய்க், கூரையின் உள் துளையுள்ள கூம்புவடிவப் பொருளிற்குக் கீழே, ஒரு தனிக்கல்லால் மூடக் கூடியதான எஞ்சிய இடங்கள் வரைக்கும் உட்சுவர்கள் நெருங்கி இருக்கின்றன. ஒரு விசித்திரமான உருவந்தாங்கிய கீர்த்திமுகம் (கலா மகரமும், உலாந்தா ஆசிரியர்களின் பாஞ்ஸ் பகுதியும்) வாயிலையும், மாடங்களையும் அணிசெய்து நிற்கின்றது. மகரம் அபி விருத்தி செய்யப்பட்டும், மலர் உருவங்களால் ஒப்பனை செய்யப்பட்டும் அரிதானதென அறிஞர்களால் அங்கீகரிக்கப்பட்டுமுள்ளது.

**கலா மகரா :**

கலா மகரா என்பது வாயில்களையும் மாடங்களின் முன்புறங்களையும் அலங்கரித்துக் காட்ட ஒரு விசித்திரமான விலங்கு வடிவைச் செடிகளாலும் கொடிகளாலும் செய்து கட்டும் ஓர் அழகிய தோரணமேயாகும்.

மேற்றளம் ஒன்றிலிருந்து மற்றொரு மேற்றளத்தின் வழியாக மத்திய டகோபாவிற்குச் செல்லும் படிக்கட்டுகள் நான்கு திசை திரும்பாக் கூறாக முக்கியமான குறியாக இருக்கிறது. அது தெளிவாகக் கோயிலின் புனிதப் பொருள்களின் புனிதமாய் இருக்கிறது. மேற்றளத்தின் உட்புகவிருக்கும் மகத்தான பெரிய நுழைவாயில் ஒவ்வொன்றும் அழகு செய்யப்பட்டிருக்கிறது. அமைப்பு முறைகள் எவ்வாறு வேறுபட்டிருப்பினும் மத்திய இந்தியாவின் முற்கால ஸ்தூபங்களின் புகழ்பெற்ற தோரணங்களின் அலங்கரிப்பு முறையை அடுத்துப் போரோபுதூர், இன்னும் எண்ணற்ற கோயில்களின் வாயில்களின் மேல் உள்ள தோரண அலங்கரிப்பு முறை சந்தேகத்திற் கிடமின்றி இந்திய

மூலத்தை உடையதாக இருக்கின்றது. மிக விசித்திரமான இந்தப் பெரிய நுழைவாயில்களின் சிறந்த இயற்கைக்கு மாறான தலைவாயில் மேலே அலங்காரமாக அமைக்கப் பட்டிருக்கின்றது. அது பயங்கரமான தெய்வமாகிய காலாவின் மாதிரி உருவமாக மதிக்கப்படுகிறது. இந்தியாவில் இந்த அலங்கார வேலைப்பாடுகள் எல்லாம் ஒரு யாளியின் தலையை வைத்தே அணி செய்யப்படும். தெக்காணத்தில் உள்ள திராவிடக் கட்டிடக் கலையில் இன்னும் யாளியின் உருவம் காணப்படுகிறது என்று திராவிடக் கட்டிடக் கலையைப்பற்றி நன்கு ஆராய்ந்த சிற்பவிற்பன்னரும் பிரஞ்சுப் பேரறிஞருமான ஜாவே' துபரே அவர்கள் கூறியுள்ளார்கள். * இப்பொழுது காலா தலை என்று கூறப்படும் ஒரு புதிய உருவத்தைச் சாவகச் சிற்பிகள் சாவக நாட்டுக் கட்டிடங்கள் பலவற்றிலும் இணைத்து அலங்கரித் துள்ளனர். இஃது இந்தியாவில் சிற்பிகள் வாயில்களின் இரு புறமும் வைத்து அணி செய்யும் மகரத் தலைபோல் சாவகச் சிற்பிகள் இதைப் பயன்படுத்தியுள்ளனர்.

கலா - மகரா சிறப்புக் கூறு ஓர் இணைக்கப் பெற்ற அலங்கரிப்பு என்று உலாந்தா புதைபொருள் ஆராய்ச்சி அறிஞர்கள் கூறி வருகின்றார்கள். இஃது இந்தோ - சாவகக் கலையின் அலங்கரிப்புத் திட்டங்களில் மிகச் சிறந்ததாகத் திகழ்கிறது. இந்தியச் சிற்பக்கலையில் கூட மகரம் ஓர் அபூர்வமான சிற்பப பொருளாகக் கருதப்படுகிறது ஆனால் அதனுடைய மூலத் தோற்றத்தைப் பற்றி மாறுபட்ட கருத்துகள் அறிஞர்களிடையே தோன்றி யுள்ளன. அதனுடைய சுருண்ட துதிக்கை யானையைச்

* Archaeologie de Sud de l "Inde-G. Jouveau Dubreuil, (Paris) - 1914-Vol-1 P. 61.

சுட்டுவதாக இருக்கும். ஆனால் இந்திய இலக்கியங்களில் மகாரம் என்பது மாற்றக் கூடாத சாயல் காட்டும் நீரில் வாழும் ஒரு மிருகம்போல் இருக்கும். நாம் மகர காலர முகரவின் பொழுது போக்குக்குரிய விநோதக் கதையை நினைவுகூர முடிகிறது. அதோடு பஞ்சதந்திரக் கதைகளில் இராக்கத முகக் குரங்கையும், பௌத்தர்கள் படிப்பினைக்காக இயற்றப் பட்ட சாதகக் கதையையும் நினைவுபடுத்த முடிகிறது.* நீரில் வாழும் மகர மீனையும் நிலத்தில் வாழும் யானையையும் இணைத்து ஒரு விநோதமான பிராணியைச் சிற்பவடிவில் கண்டதைப் பேராசிரியர் குருன்வெடல் என்பவர் நீர் யானை என்னும் பெயரால் குறிப்பிட்டுள்ளார்.† என்று லும் மகர உருவம் முன்னர் இந்தியக் கலைகளில் ஒரு விலங்காகவே பயன்படுத்தப்பட்டு முதலை வடிவு ஒரு விசேட அலங்காரப்படுத்தப்பட்டு எங்கும் எவரும் கண்டிராத ஒரு புதிய உருவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. வட இந்தியாவில் பீகாரில் உள்ள லோமஸ் முனி குகையில் மகரம் அதன் பழங்கால உருவில் சித்தரிக்கப்பட்டிருப்பதை நாம் பார்க்க முடிகிறது. இந்தியாவின் பழங்காலக் குகைகளில் கண்ட இயான வடிவமுள்ள மிருகத்தினின்று படிப்படியாக உருமாற்றமுற்று இறுதியாகச் சாவகக் கலையின் விசித்திரப் பாணியில் அமைந்த விசித்திரப் படைப்புயிராக எழுந்தது. அஃது அடுத்து ஒரு புதிய அமைப்பைப பெற்று அபிவிருத்தி

* The story is given in two Jatakas - namely the "Vanarinda jataka" and the "Sumsumara jataka" which are Nos. 57 and 208 respectively of the Pali Collection Cf. E. B. Cowell, "The jataka or stories of the Buddha's Former Births" (Cambridge 1895, 1913) Vol I-pp. 142 f. and vol II., pp. 110,—112.

† "Buddhist Art in India (London 1901), p. 57.

யுற்றுத் தோரணமாகக் காணப்பெற்றது. இத்தோரணங்கள் மத்திய இந்தியாவில் பார்ஹூத்திலுள்ள புகழ் வாய்ந்த ஸ்தூபாவில் காணப்படுகின்றன. அதிலுள்ள இரு நுனிகளும் மூவிதமான தூணின் உச்சியிலுள்ள பரற்கட்டையின் மீதுள்ள பகுதியில் மகர உருவத்தோடு இணைக்கப்பட்டுள்ளன. இன்னும் அனைத்தும் முதலையினுடைய மூலத் தன்மைகள் மாருமலும் அழியாமலும் எஞ்சிநிற்கின்றன.*

எனவே இவைகளையெல்லாம் நன்காராய்ந்த அறிஞர் டாக்டர். சே. பியெச் வோகல் அவர்கள் தம் நூலில் பொதுவாகச் சாவகத்தில் காணபபடும் கலா மகர அலங்கார வேலைப்பாடுகள் நிச்சயமாக இந்தியக் கலையைச் சார்ந்தனவே என்பதை உறுதிப்படுத்தியுள்ளார். போரோபுதூர் புனித ஆலயத்தின் பெரிய நுழைவாயிலின்மீது சித்திரிக்கப் பட்டுள்ள கலா மகர தோரண வேலைப்பாடுகள் இந்தியச் சிற்ப நுட்பங்களினின்று சிறிது மாறுபட்டதாகக் காணப்படினும் இந்திய மூலவடிவினின்று அபிவிருத்தியுற்றுச் சாவகப் பண்போடு கலந்துள்ளது என்று கூறலாம் என நன்கு விளக்கி இருக்கின்றார். †

இந்தக் கலாமகர தோரண சிற்பம் மத்திய சாவகத்தில் மிக முக்கியத்துவம் பெற்றதாக இருக்கிறது.

---

* The Stupa of Bharhut - Alexander Cunningham - London 1870 Plates VI and IX. For the further development of the Makara in Indian art cf. H Cousens "The Makara in Hindu Ornament. Annual Report Archaeological Survey of India 1903—1904 (Calcutta 1906) Mr. Cousens' supposition that the development of the Makara has been influenced by the rhinoceros and the tapir we find it somewhat difficult to accept.

† The Influences of Indian art-by Dr. G. PH. Vogel. (London)

இது கிழக்குச் சாவகத்தின் சின்னமாகவும் விளங்கியது. மத்திய சாவகத்திலும் கிழக்குச் சாவகத்திலும் காணப்படும் கலாமகர அலங்கார வேலைப்பாடுகள் அடிப்படையில் சில வேறுபாடுகளையுடையன. மேலும் கிழக்குச் சாவகத்தில் அதிகமாகக் காணப்படுவதில்லை; ஆனால் அங்கு இதற்கு அதிக மதிப்பு அளிக்கின்றனர். *

இங்கு நாம் காட்டிய விளக்கங்கள் சாவகத்தில் உள்ள அர்ச்சுனன் தொகுதி என்ற நான்கு கோயில்களும் முறையே சாண்டிஸ் அர்ச்சுனா, சிரிகாண்டி, பாண்டதேவா, செம்பத்தரா எனப்படும். சாண்டி காட்டேகாசா எனப்படுவது நீண்ட சதுரமுடைய சிறிய சாண்டி செமர் ஆக முடியாது. ஒருவேளை ஆரம்பத்தில் பொக்கிச சாலையாக இருந்து அப்பால் அர்ச்சுனன் தொகுதியில் ஒரு பாகமாக இதை அமைத்திருக்கலாம். தனித்து ஒற்றையாக உயர்ந்து நிற்கும் சாண்டி பீமா இவைகளினின்று முற்றிலும் வேறுபட்டதாகக் காட்சி அளிக்கிறது. இந்தக் கட்டடத்தின் கீழ்ப்பகுதி நாம் ஏற்கெனவே விவரித்த கட்டடங்களையொப்ப இருக்கிறது. ஆனால் கூரை தெளிவாகப் பட்டைக் கூம்பு வடிவுடையதாக விளங்குகிறது. அது மேற்பூச்சோடு அடித்தளத்தின் அமைப்பு முதலிலேயே திரும்பத் திரும்பச் செய்யப்பட்டு இருக்கிறது. அதனுடைய அரங்கங்கள் குறைத்துச் செங்குத்தானதாகத் திகழ்கின்றன. மற்றையவை தலையை ஒட்டிச் சைத்திய பலகணி பூவணி வேலைகள் உடையனவாய் அலங்கரிக்கப்பட்டுள்ளன, அல்லது பிரதிமைகள் உயர்ந்த ஆதரவுள்ளனவாய் நான்காவது ஆறுவது நிலைகளின் கோணங்களாக முதிர்ந்த தாமரைக்

* The meaning of the Kala-Makara Ornament—by Dr. Willem F. Stutterheim, PH. D.

காய்களால் நிரப்பப்பட்டுள்ளன. ஓர் அழகிய தன்மையில் ஒரு நிறைவான தாமரைக்காய் உச்சியை இராஜரீகம் செய்கிறது. இவ்வாறு கூரை அமைப்பு இந்தோ - ஆரிய சிகர அமைப்பை ஒப்ப இருக்கிறது என்று கலை மேதைகள் சிலர் கூறுகிறார்கள். இது தஞ்சாவூரிலுள்ள இராசராசேச்சுரத்தைப்போல் மிக அபிவிருத்தியடைந்த நிலையில் மிக நெருக்கமுடையதாகத் துலங்குகிறது.

டையங்மேடு பல சிலைகளை எடுத்துக் காட்டாகப் பெற்றிருக்கிறது. சாண்டி சிரிகாண்டியின் பிரிவில் உள்ள விஷ்ணு (திருமால்), நான்முகன். சிவன் முதலிய உருவங்கள் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். அதன் சிற்பவேலைப் பாடுகள் நுட்பம் வாய்ந்து அபிவிருத்தியடைந்துள்ளன. சாண்டி பீமாவின் மாடத்திலுள்ள சைத்தியப் பலகணியின் உச்சி அமைப்பு மிகக் கவர்ச்சி தருவனவாகும். இது சிற்பி யின் சொந்த முயற்சியின் பயனாக எழுந்ததாகும். இதன் தலை, சாவகக்கலையின் புராதன முறையைத் தழுவியதாக இருந்தாலும் அலங்கார வேலைப்பாடுகளும் சின்னங்களும் முற்றிலும் பொருத்தமாக இல்லை என்பதற்குச் சான்றாக உள்ளன.

டையங்மேட்டின் கிழக்கிலும் தெற்கிலும் எண்ணற்ற சிறு கோயில்கள் காணப்படுகின்றன. இவைகள் எல்லாம் அடிப்படையில் இதே முறையில் அமைக்கப்பட்டவைகளாகும். ஆனால் சற்றுத் தாராளமாகவும் அடிக்கடி விசித்திரங்கள் காட்டும் முறையிலும் அலங்கரிக்கப்பட்டுள்ளன. சம்பிங் மலை அருகில் உள்ள சாண்டி சிகிரியும் கி. பி. 850 ஆம் ஆண்டில் அரும்பிய சைவ சாண்டிபிரிங்காப்பஸ் என்பதும் எடுத்துக்காட்டுகளாகக் காணப்படுகின்றன. மிக முக்கிய மான கோயில் கெடாங் சங்கா ' எனப்படும், உங்காரனின்

கோயில்களின் பகுதிகளாகும், அவைகள் ஒன்பது சிறு கோயில்களின் தொகுதிகளாக அடங்கி மலை உச்சியில் அமைந்துள்ளன. அவை நல்ல புனித யாத்திரை மார்க்கத்தில் இருக்கின்றன.

இப்பொழுது டையங் கோயில்கள் அப்பொழுதுள்ள பெயர்களில் வழங்கப் பெருது சாண்டி பீமா, சாண்டி அர்ச்சுன என்ற பெயர்களில் வழங்கப்பட்டுவருவது நாடோடி மக்களின் கதையை அனுசரித்துப் பார்க்கில் அது மிகவும் கவர்ச்சியாகவே இருக்கும். ஆனால் அதன் வரலாற்றையும் மூல உற்பத்தியையும் உணர்வதற்கு எவ்விதத் துணையும் உதவியும் தரமுடியாது. அங்குள்ள பல படிமங்களும் சைவ சமயப்படிமங்களாகவே தெரிகின்றன. அவை ஒரு காலத்தில் சிவபெருமானை வணங்குவதற்காக அர்ப்பணிக்கப் பட்டிருக்க வேண்டும். இத்தீவகத்தில் இக்கலை புத்த சமயத்தோடு அருகருகே இந்து சமயமுறையும் பிரபலமாய்ச் சாவக வரலாற்றில் இந்து சகாப்தம் முழுவதிலும் வளர்ந்து வந்துள்ளது. நாளாவட்டத்தில் இரு சமய நெறிகளும் வியக்கத்தக்க விதமாகக் கூடி இருந்திருக்கின்றன. சாவகத்தில் சிவபெருமான் பல்வேறு முறையில் வணங்கப் பட்டாலும் பத்திரகுரு என்ற பெயரில் பெரிதும் போற்றப் பட்டார். அவர் யோகியாய், தாடியும், தசைப்பற்று முடையவராய்க் கையில் கமண்டலமும் ஜெபமாலையும் உடையவராய்க் காணப்பட்டார்.*

மத்திய சாவகத்தில் சுமத்திரர்களின் ஆட்சியில் (கி. பி. 732 முதல் 860) - அஃதாவது சைலேந்திர மரபினர் ஆட்சியில் அரும்பிய பல முக்கிய நினைவுச் சின்னங்களை நாம் இப்பொழுது ஆலோசிக்க வேண்டும். 778 ஆம்

* Neerland Indie - H Colign Vol. 1 p. 225.

ஆண்டில் எழுந்த சாண்டிக்கலசான் சாவக மண்ணில் தலை தூக்கிய பௌத்த நினைவுச் சின்னமானது முதன்முதலாகத் தோன்றிய விலைமதிக்க வொண்ணாத முக்கியமான நிகழ்ச்சியாகும். அங்குக் கிடைத்த சாசனம் மூலம் சைலேந்திர மன்னன் அர்ப்பணித்த தாரா தேவியின் திருஉருவம் மத்திய மண்டபத்தில் இடம் பெற்றிருந்தது என்று அறிகிறோம் இந்தக் கோயில் பெரம்பானன் கோயிலுக்கு மேற்குப் பக்கத்தில் இடம் பெற்றிருந்தது. இந்த மேடு அதிக நெருக்கமான மக்கள் வாழும் நிலப்பரப்பாக இருந்தது. ஒரு முக்கியமான தலைநகரத்தின் பகுதியாக அல்லது மத்திய சாவக ஆட்சிக் காலம் முழுவதும் தலைநகரமாக இருந்தது. டையங் மாதிரியில் இருக்கும் சாண்டிக் கலசான் புதுப்பிப்பதற்கு முன்னும் பின்னும் தனி வாயில் உள்ள பக்கக் கோயில்களாக அபிவிருத்தி அடைந்து அருகே புடைத்திருக்கும் மாடங்களைப் பெற்றிருந்தது. பிரமாண்டமான கீர்த்திமுகா என்னும் கலாமகரத் தோரணம் பிரதான வாயிலையும் மாடங்களையும் அணி செய்தது. மகரதோரண வளைவுகள் கீழே முழுவதும் விசித்திரமான சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்தனவாக மாற்றப்பட்டன. சுவர்கள் சுவைமிக்க பட்டைகளால் அலங்கரிக்கப்பட்டன.

---

# 10. அன்னியர் ஆட்சியில் ஆய்வு

இரண்டு நூற்றாண்டுகளாகச் (கி. பி. 1619 முதல் 1798 வரை) சாவகம் டச்சு, கிழக்கிந்தியக் கும்பினி ஆட்சியில் இருந்து வந்தது. இந்த அன்னிய ஆட்சியாளர்கள் இங்கு வணிகக் கண்ணோட்டத்தோடு புகுந்து பின்னர்ச் சாவக நாட்டைக் கவர்ந்து அதை அடிமைப்படுத்தி ஆண்டு வந்தனர். அந்த நாட்டை இயன்ற அளவு சுரண்டிக் கொண்டு வந்தனர் என்றாலும் இந்த வணிக மனப்பான்மை கொண்ட வெள்ளையர்கள் அங்குப் பரவிக் கிடந்த நாகரிகத்தையும் நினைவுச் சின்னங்களையும் கோயில்களையும் அழிபாடுகளையும் மிக்க ஆச்சரியத்தோடு பார்த்து வந்தனர். பதினெட்டாவது நூற்றாண்டின் இறுதிவரை அவர்களிடம் ஒரு விதப்பரிவு உணர்ச்சியோ அல்லது ஒரு தெளிவான விளக்கமோ அரும்பவில்லை. ஆனால் ஒரு மேலெழுந்தவாரியான அபூர்வமான கண்ணோட்டம் அபிவிருத்தி அடைந்து கல்வியுணர்ச்சியாக எழுந்து ஆழ்ந்த ஆராய்ச்சியில் இறங்கத் தூண்டியது. 1778 ஆம் ஆண்டு "பட்டோவியா, விஞ்ஞானக் கலைக்கழகம்" ஒன்று காணப்பட்டது. அதனுடைய நோக்கம் விசயங்களை ஆராய்வது மட்டுமன்று, விவசாயம், வணிகம் இந்தக் குடியேற்ற நாட்டின் செல்வச் செழிப்பில் அக்கரை செலுத்துவதுமாகும். ஆனால், அதோடு இயற்கை வரலாறு, பண்டைக்கால நினைவுச் சின்னங்கள், பழக்கவழக்கங்கள், மக்களின் பண்புகள் ஆகியவைகளையும் ஆய்தலாகும்.

இவைகளைப் பற்றி முதன்முதலாக அக்கரை கொண்டு சாவகத்தின் பழம்பெரும் சின்னங்களை ஆய முன் வந்தவர்

களில் குறிப்பிடத்தக்கவர் அங்கு 1801 ஆம் ஆண்டு முதல் 1808 ஆம் ஆண்டு வரை வடகிழக்குக் கடற்கரைக் கவர்னராக இருந்த நிக்கோலஸ் எங்கல்ஹார்ட் என்பவராகும். அவரது தூண்டுதலின்மீது பெரம்பானன் அழிபாடுகளும் இன்னும் பல கோயில்களும் சுத்தப்படுத்தப்பட்டுப் பரிசோதிக்கப் பட்டன. டச்சு கவர்னர் இந்தப் பழம் பொருள்களின் ஆராய்ச்சி ஆர்வத்தால் அதிகாரபூர்வமாகப் பல அரும் பெரும் படிமங்களையெல்லாம் கோயிலினின்று அவரது செம்ராங் (Semarang) என்னும் இடத்தில் நாட்டுப்புற இல்லமாகிய "டி வருச ஹிட்" என்னும் இடத்திற்குக் கொண்டு போக உத்தரவிட்டார், அப்பால் இவைகளெல்லாம் உலாந்தா நாட்டிலுள்ள லெய்டன் நகரிலுள்ள மனித இனப் பரப்புப் பற்றிய ஆய்வியல் (Ethnography) பழம் பொருள் காட்சிச்சாலையில் இடம் பெற்றன,

அப்பால் பிரிட்டிஷ் ஆட்சியின் செல்வாக்குச் சாவகத்தில் வளர்ந்திருந்தபொழுது (1811 - 16) சிறந்த அறிவாளியாயும், அரசப்பிரதிநிதியாயும் (Governor-General) ஆக விளங்கியவர் சர் ஸ்டாம்போர்டு ரேவல்ஸ் (Sir. Stamford Raffles) என்பவர் ஆவர். அவர் வரலாற்று ஆராய்ச்சி, புதைபொருள் ஆராய்ச்சி ஆகிய இருபெருந் துறைகளிலும் அக்காலத்திருந்த எவரையும் விடச் சிறந்து விளங்கினர். அவரது ஆதரவில் சாவகத்தில் பழம் பொருள் ஆராய்ச்சி தொடர்ந்து பெரிய அளவில் நடைபெற்று வந்தது. அதன் விளைவாகச் "சாவகத்தின் வரலாறு" (லண்டன் 1817) என்ற அரும்பெரும் நூல் வெளிவந்தது. இந்தச் சிறந்த நூல் வெளிவந்ததன் மூலம் ரேவல்ஸ்க்கு மிகுந்த கௌரவம் வந்தது. சாவகப் புதைபொருள் ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டுள்ள இன்றைய மாணவர்களுக்குங்கூட அவரது

நூல் மிகவும் பயனுள்ளதாக இருக்கிறது. ஆனால் வரலாற்றுப் பகுதியில் பெரும்பாலானவை நம்பக்கூடிய தகவல்கள் அல்ல - அவைகள் நாட்டுப்புற மக்களின் குறிப்பு களினின்றும் சாசனங்களின் மிகைப்படுத்திக் கூறப்பட்ட வாசகங்களினின்றும் எழுதப்பட்டவைகளாகும். எனவே அவைகளை மிக எச்சரிக்கையோடு எடுத்தாள வேண்டும். அவருக்குப் பின் வந்த ஆசிரியர் ஜேம்ஸ் பெர்கூசன் (James Fergusson) என்பவர் ஆவர். அவர் ரேவல்ஸ் நூலை நம்பி, வரலாறு சம்பந்தமான தகவல்களை மெய்யென நம்பித் தம் நூலில் பல இடங்களில் மேற்கோள் காட்டிப் பெருந் தவறுக்கு ஆட்பட்டார்.

பழம்பெருஞ் சாவகத்தின் நினைவுச் சின்னங்களையும் கோயில்களையும் ஆராய விரும்பிப் பல அறிஞர்கள் தமது விலைமதிக்க ஒண்ணு காலத்தையும் சக்தியையும் கடந்த நூற்றுண்டின் இறுதியில் செலவிட்டுள்ளனர். அவர்களுள் பலர் டச்சு நாட்டைச் சேர்ந்தவர்களாவார்கள். அவர்கள் அந்நாட்டின் பல்கலைக் கழகத்தில் பயின்று உயர்ந்த கலைப்பட்டங்கள் பெற்றவர்களாவார்கள. அவர்களில் நான் இங்குக் குறிப்பிடத்தக்கவர் பேராசிரியர் ஹெண்டிரிக் கெர்ன் (Hendrik Kern). அவருக்கு வடமொழியிலும் சாவக மொழியிலும் நல்ல புலமையுண்டு. சாவகத்தின் பண்டைக்கால நூல்கள் எழுதப் பெற்றிருந்த காவி மொழியையும், அவர் கற்றிருந்தார். சாவகத்தில் வடமொழியிலும், காவி மொழியிலும் வரையப்பட்ட சாசனங்களை வியக்கத்தக்கவாறு அவர் பதிப்பித்துள்ளார். வேறு பல அறிவாளிகளின் நூற்களோடு அறிஞர் கெர்ன் எழுதிய பழைய சாவக இராமாயணமும் பதிப்பிக்கப்பட்டது. அதனோடு அதன் டச்சு மொழி பெயர்ப்பும் வெளி வந்துள்ளது.

அறிஞர் கெர்ன் என்பவரின் திறமை மிக்க மாணவர் டாக்டர் பிராண்டஸ் என்பவராகும். அவர் இந்தோனேசிய ஆட்சிப்பரப்பில் வாழ்பவர். கலைத்துறையிலும் புதைபொருள் ஆராய்ச்சித் துறையிலும் நன்கு பயிற்சிபெற்றவர். பழைய மொழிகளிலும் நவீன மொழிகளிலும் அரிய அறிவுத்திறம் பெற்றவர். சாவக நினைவுச் சின்னங்களை ஆராய்வதற்காகப் பட்டேவிய அரசாங்கத்தால் நியமனஞ் செய்யப்பெற்றவர். அவர் எழுதிய இரண்டு தனிப்பெரும் நூல்கள்—அஃதாவது ஒன்று ஜாகோவின் கோயிலைப் பற்றியது (1904). மற்றது அவர் இறந்த பின் வெளிவந்த நூல்களாகிய சிங்காசாரியைப் பற்றியும் பனதாரனைப் பற்றியதுமாகும் (1909). இருமாதிரி நூல்களும் அழகிய படங்களோடு இயன்ற அளவு முயன்று நிறைவுடைய நூலாக வெளியிடப்பட்டன.

1905 ஆம் ஆண்டு அறிஞர் பிராண்ட்ஸ் அவர்களின் அகால மரணத்திற்குப் பின் ஐந்து ஆண்டுகள் உருண்டோடின. அப்பால் அவரது இடத்தில் டாக்டர். என். ஜே. குரோம் நியமிக்கப் பெற்றார். அவர் ஒரு புதைபொருள் ஆராய்ச்சிக் குழுவை நிர்மாணித்து ஆராய்ந்து வந்தார்.

அப்பேராராய்ச்சியின் பயனாகச் சாவகத்தின் பழைய கலை, வரலாறு, கல்வெட்டு ஆகியவைகளைப் பற்றிப் பல அரும் பெரும் ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவந்தன. அப்பால் அவர் 1915 ஆம் ஆண்டில் ஓய்வு பெற்ற பின்னர் இந்து சாவகக்கலையின் கைநூல்* (Hand Book of Hindu Javanese Art) என்ற ஓர் உயர்ந்த நூலை எழுதி இரண்டு தொகுதிகளாக வெளியிட்டார்.

---

* N-J. Krom, "Inbiding tot de Hindu Javanese **kunst**" (with an archaeological map and 100 Plates), 2 vols. (The Hague 1920)

(Hague 1920) அந்நூல்கள் நிறையத் திட்டவட்டமான தகவல்களையும் படங்களையும் உடையனவாக இருந்தன. போரோபுதூரின் தலைசிறந்த நினைவுச் சின்னங்களால் சாவகத்தின் புதைபொருள்களை விளக்கும் மாக்னம் ஆபஸ் (Magnum opus); 444 பெரிய பக்கங்களைக் கொண்ட உயர்ந்த வழுவழுப்பான தாள்களில் மிகச் சிறந்த அழகிய நிழற்படங் களைக்கொண்ட சிறந்த அழகிய நூலாக வெளிவந்தது.*

1919 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் டாக்டர் குரோம் லெய்டன் பல்கலைக் கழகத்தில், சாவகப் புதைபொருள் ஆராய்ச்சித் துறைக்காக ஆரம்பிக்கப்பட்ட புதிய இடத்திற் குப் போராசிரியராய் நியமனஞ் செய்யப்பட்டார். அவருக்குப் பின் அந்த இடத்திற்கு வந்தவர் சாவகத்தின் புதை பொருள் ஆராய்ச்சித்துறைத் தலைவராய் இருந்த டாக்டர் வெ. டி. கே போஸ்ச் என்பவராவார். அவருக்கு ஒரு சிறிய உதவி நிபுணரும் இருந்து வந்தார். இப்பொழுது அவரே பழம் பொருள்களைப் பாதுகாத்தல் ஆராய்தல் என்னும் இருபெரும் பணிகளையும் நடத்தி வருகின்றார். அவரது சிறந்த பணி அதிகாரிகளுக்கும் அரசாங்கத்திற்கும் பெரும் மதிப்பை அளித்துள்ளது. இதன் மூலம் சாவகத்தில் எழுந்த இந்து நாகரிகத்தின் சிறப்பு உலாந்தாவில் மட்டு மின்றி ஐரோப்பா முழுவதிலும் பரவியது.

சாவகத்தில் உள்ள மக்களும் இன்றுவரை விழிப் புற்றுச் சாவகத்தில் பீடுற நின்ற கலைக் கருவூலத்தை ஆராயமுன்வரவில்லை. ஆனால் சுமார் நாற்பது ஆண்டு களுக்குமுன் வங்காளத்தில் மாபெரும் இந்தியக்கழகம் (Greater India Society) என்ற ஒரு நிறுவனம் கண்டு

* N. J. Krom and I. Van Erp. "Beschrijving' van Baraboedoer" Vol. 1, Archaeologische beschrijving" (The Hague 1920).

சிறிது காலம் சாவகக் கலைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்ய முயன்றனர். அந்த உணர்ச்சி நீண்டநாள் நிலைத்து நிற்க வில்லை. இன்று சாவக அரசாங்கம் முஸ்லீம் அரசாங்கமாய் இருப்பதால் இந்துக் கோயில்களையும், படிமங்களையும்பற்றி ஆராய்வதற்கு அக்கரை கொள்ளவில்லை. இந்திய அரசாங்கம் மதச் சார்பற்ற அரசாங்கமாய் இருப்பதால் சாவகத்தில் நிலவிய இந்துக் கலைகளைப்பற்றி ஆராயமுற்படுவது அரசாங்கத்தின் மூலக்கொள்கைக்கு மாறாக இருக்கும் என்று எண்ணிக் கொண்டிருக்கலாம் என்று கருதப் படுகின்றது.

பிரிட்டன், பிரஞ்சு அரசாங்கங்கள் கிறிஸ்தவ அரசாங் கங்களாக இருந்தாலும் சாவகத்திலுள்ள இந்தியக் கலைகளில் அக்கரை செலுத்தியது கண்டு நாம் பெரிதும் பாராட்டவேண்டியவராய் இருக்கின்றோம். இங்கிலாந்து போன்ற நாட்டிலிருந்து அவர்களின் குடியேற்ற நாடாக இருந்த இந்தியா, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், இந்தோனேசியா, இந்தோ சீனா முதலிய நாடுகளுக்கு வந்த புதைபொருள் ஆராய்ச்சித் துறையினர் மட்டுமின்றி ஆட்சிசெய்த கோட்டத்தலைவர் ஆளுநர் போன்றவர்களும் தங்களின் அரசாங்கப்பணியோடமையாது, இதர கலைத் துறைகளிலும் அக்கரை செலுத்திப் பெரும்பணி செய்து வந்திருப்பது நம்மால் என்றும் மறக்கற்பாலதன்று. இன்றைய சுதந்திர இந்தியாவின் பிரதிநிதிகளாயும் தூதுவர்களாயும், வணிகக் குழுவினர்களாயும், காரியதரிசிக ளாயும் இருப்பவர்கள் அந்த நாட்டில் உள்ள இந்தியக் கலைகளையும் நாகரிகத்தைப்பற்றியும் சிந்திக்க வேண்டும்.

இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னர்-கி. பி. 1746 இல் மத்திய சாவகத்தில் உள்ள பெரம்பானனில் அரசப்பிரதி

நிதியாக (கவர்னர் செனரலாக) இருந்தவர் வான் இம்ஹோவ் என்பவர் ஆகும். அவர் பெரம்பானன் பகுதியில் உள்ள தொல்பொருள்களைக் கண்டுகளிக்க விரும்பி அங்குச் சென்றதாகச் சாவகத்தைப்பற்றி முதன்முதலாக எழுதிய ஆசிரியர் ஒருவர் குறிப்பிட்டுள்ளார். அங்கு அரசப்பிரதிநிதி கண்ட பொருள்கள் பலவற்றில் துர்க்கையின் வெண்கலப் படிமமும் ஒன்று. அதைக் கண்டதும் அவருக்கு அடியில் வரும் எண்ணம் எழுந்தது. அது, "சாவகர்கள் முன்னர், யூதர்களோ, கிறிஸ்தவர்களோ, இஸ்லாமியர்களோ, இல்லாத புறச் சமயத்தார்களிடையே யுள்ள பிராமண வகுப்பினராக இருக்க வேண்டும்" என்பதேயாகும். ஆங்கிலேய அதிகாரிகள் 19 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும், இந்தியாவில் சேவை செய்தபின் சாவகத்திற்கு மாற்றப்பட்ட பின்னரும் இந்தியாவிலும் சாவகத்திலுமுள்ள நினைவுச் சின்னங்களைப் பற்றி ஆராய முற்பட்டனர் என்பது குறித்து ஆச்சரியப் படுவதற்கில்லை. இந்தியாவிற்கும் சாவகத்திற்குமுள்ள தொடர்புகளையும் வேறுபல செய்திகளையும் பற்றி அவர்கள் நுணுகி ஆராய்ந்துள்ளனர். சர் உல்லியம் ஜோன்ஸ், மார்ஸ்டன் போன்றவர்கள் இந்தோனேசிய மொழிகளிலுள்ள வடமொழிப் பதங்களைப் பற்றியெல்லாம் ஆராய்ந்து வந்தனர். உய்ல்ஹெல்ம் வான் ஹம்போல்ட் (Wilhelm Von Humbolt) என்பவர் எழுதிய பெரிய நூலாகிய உபர் டை காவி-ஸ்பிராச் (Ulber die Kauvi - Sprache) என்பது அவர் இறந்தபின் கி. பி. 1836 ஆம் ஆண்டில் வெளியிடப் பெற்றது.* அதில்,

சாவகத்தின் வரலாறு சம்பந்தப்பட்ட ஆதாரங்களை ஆராய முற்பட்டால் எண்ணற்ற சாசனங்களின் மூலம் இந்தியர்களின் செல்வாக்கு அவர்களின் மொழி,

*Cultural relation between India and Java by A. J. Bernet Kempers, Ph. D. Calcutta. 1937: p. 3.

எழுத்து, கலை, சமயங்கள் மூலம் பரவி இருந்தன என்பதைத் தெளிவாக அறியமுடியும். சாவகத்தின் வரலாறு சம்பந்தமாக எழுதப்பெற்ற இரு நூல்கள் சாவகத்தில் உள்ளன. அவை பழைய சாவக மொழி அல்லது காவி மொழியில் உள் நாட்டின் வரலாறு புதைபொருள் ஆராய்ச்சி முதலியவைகளைப்பற்றி வரையப்பட்டனவாகும். அவைகளில் ஒன்றான "நாகாகிரேட்டகாமா" (Nagara-kratagam) என்பது 1894 ஆம் ஆண்டு லோம்போக் படையெழுச்சியின்போது கண்டுபிடிக்கப்பட்டது. அஃது இறுதியாக இருந்த பாலித் தீவின் தலைவன் தீ மூட்டிய பொழுது இந்தக் கையெழுத்துப் பிரதி டாக்டர் பிராண்டஸ் என்பவரால் காப்பாற்றப்பட்டது. இந்த நூல் எப்படி இருப்பினும் அது கி. பி. 1365 ஆம் ஆண்டு நிறைவு செய்யப்பட்டது. இருநூற்றாண்டுகளாகக் கிழக்குச்சாவகத்தில் ஆட்சிபுரிந்த மரபினர்களைப்பற்றியது. இதில் இந்தியாவிற்கும் சாவகத்திற்குமுள்ள பண்டைக்காலத் தொடர்புகள் எவையும் காணப்படவில்லை.

சீனநாட்டு வழிப்போக்கன் வரைந்த பயணக் குறிப்புக்களிலும் சீன அரசாங்கத்தின் காலக்கிரமமான வரலாற்றிலும் காணக்கிடக்கும் தகவல்களைக் கொண்டும் நினைவுச்சின்னங்கள் காட்டும் சில சான்றுகளைக் கொண்டும் இந்திய-சாவகத் தொடர்புகளை ஒருவாறு அறியலாம். பழங்காலத்தில் வந்த பரிசுத்த பயணிகளில் பாஹியன் (Fa Hien) என்பவர் இலங்கையினின்று சீனம் போந்தான். புயலால் அவனது கப்பல் தாக்கப்பட்டு அல்லல்களுக்கு ஆளாகி (அவன் குறிப்பிடும்) ஈ-போ-தி (Ye - Po - Ti) என்னும் இடத்தை அடைந்தான். அது சாவகம் அல்லது சுமத்திராவாக இருக்கவேண்டும்.

அவர், "இந்த நாட்டில் ஏற்பமைதி இல்லாத கோட்பாட்டில் பற்றுடையவர்களும், புரோகித மதத்தில் நம்பிக்கையுடையவர்களும் நிறைந்திருக்கிறார்கள். ஆனால், புத்த பகவானின் விதிகள் அவர்களுக்கு அதிகம் தெரியாது" என்று கூறியுள்ளார்.

இவர் தரும் தகவல் மூலம் கி. பி. 400ஆம் ஆண்டில் இங்குச் சைவசமய நாகரிகம் பரவி நின்றது. பௌத்த மதம் பெரிதும் காணப்படவில்லை என்று தெரிகிறது. இவர் சைவ நெறியை அதன் சடங்காசாரங்களைக்கொண்டு புரோகிதமதம் என்று கூறுகிறார். இவர் தரும் தகவல் வரலாறு சம்பந்தப்பட்ட ஓர் உறுதியான செய்தியாகும்.

அப்பால் கி. பி. 671ஆம் ஆண்டு மற்றோர் சீன யாத்திரைக்காரர் இட்சிங் (I-tsing) இந்தியாவிற்குச் செல்லும்பொழுது ஃபோ - ச்சே (Fo-che) என்ற இடத்தைக் குறிப்பிட்டுள்ளார். அது பாலம்பாங் என்ற சுமத்திராத் தீவில் உள்ள இடமாகும். அங்கு அப்பொழுது புத்தமதம் நன்றாகப் பரவி இருந்தது என்று தெரிகிறது. ஃபோ - ச்சே இந்து நாகரிகத்தின் மைய நிலையமாகக் காணப்பட்டது. எனினும், அங்கு அவர் வடமொழி இலக்கணம் பயிலும் பொருட்டு ஆறு மாதம் தங்கியதாக அவருடைய எழுத்துக்களின் மூலம் தெரிகிறது.

பிரஞ்சுப்-பேராசிரியர் டாக்டர் ஜியார்ஜஸ் கோயிட்டஸ் மேற்குச் சாவக நாட்டின் வரலாற்றில் கி. பி. 500ஆம் ஆண்டு முதல் 1300ஆம் ஆண்டு வரை புதைந்து கிடந்த அரும்பெரும் நிகழ்ச்சிகளையெல்லாம் ஆராய்ந்து உலகிற்கு உணர்த்தினர். இவரது ஆராய்ச்சி வெளிவருமுன் மேற்குச் சாவகத்தைப் பற்றி ஒரு சிறிதுதான் உலகத்திற்குத் தெரியும். மலாய்த் தீபகற்பத்தின் மேற்குப் பகுதியில்

வலிமை மிக்க இந்து மலாய் கப்பற்படை வெற்றிமுரசு கொட்டி நின்றது. இந்த ஆட்சியே ஸ்ரீவிஜய ஆட்சி என்று கூறப்படும். அது சைலேந்திர அரச மரபினர்க்கு உரியதாக இருந்தது. இந்தத் தீபகற்பத்தின் வரலாறு வேறு எந்த வரலாற்றையும்விடக் கவர்ச்சிமிக்கதாயும் நினைத்தால் பெரும் உள்ளக்கிளர்ச்சியை ஊட்டுவதாகவும் உள்ளது. அறிஞர் கோயிட்டஸ் ஆராய்ச்சி வெளிவந்து உலகிலுள்ள பல அறிஞர்களின் உள்ளத்தை ஈர்த்தது. எனவே அவரது ஆராய்ச்சியை உறுதிப்படுத்தவும் அவரால் விடப்பட்ட பல நிகழ்ச்சிகளை மேற்கொண்டு ஆராயவும் அதற்கான ஆதாரங்களைத் தேடவும், முன்னர்க் கண்ட பல செய்திகளோடு புதிதாய்க் கண்ட உண்மைகளை இணைத்தும் சாவக வரலாற்றை ஒரு நிறைவான வரலாறாகத் திகழும்படி செய்ய முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டது. கோயிட்டஸ்* அவர்களைத் தவிர குரோயென்வெல்ட் (Groeneveldt)† பெல்லியட் (Pelliot)‡ பெர்ராண்ட் (Ferrand),$ குரோம் (Krom)§ ஸ்டட்டா

---

* Professor Dr. Georges ceodes, "Le Royaume de Crivijaya" (Bulletin del' Ecole Francaise 'd' Extreme Orient XVIII, 1918 "On the Origin of the Sailendras of Indonesia" (Journal of the Greater India Society vol 1, P 61 et Seq.) 1934.

† W. P. Groeneveldt, "Notes on the Malay Archepelago and Malacca" (1877).

‡ P. E. Pelliot "Deux Itineraires de chine en Inde" (Bulletin de I' Ecole Francaise d' Extreme Orient IV, 131 et Seq.) 1934.

$ Gabriel Ferrand, "Relations de Voyage et Textes geographiques Arab - Persans et Tuiks relatifs a 1' Extreme Orient" 1914.

§ Prof Dr N. J. Krom, "De Sumatraansche Periods der Javaansche geschiedenis (1919) "Hindoe - Javaansche geschiedenis" & edition 1931.

ஹெய்ம் (Stutterheim)*, மசும்தார் (Mazumdar) II. பிரிசிலஸ்கி (Przyluski) போன்ற அறிஞர்கள் சாவக வரலாற்றை நுணுகி ஆராய்ந்து இந்தக் காலகட்ட வரலாற்றிற்குப் புதிய வெளிச்சத்தை அளித்தனர். இஃதன்றி இதற்குப் பின் அண்மைக் காலத்தில் பல அறிஞர்கள் சாவக வரலாற்றை மேற்கொண்டும் ஆராய்ந்து அதை அபிவிருத்தி செய்ய முன்வந்தனர். அவர்களின் பெயர்களை முன்கூறிய அறிஞர்களின் பட்டியலோடு இணைத்துக் கொள்வது இன்றியமையாதது. அவர்களுள் குறிப்பிடத் தக்கவர் ஜே. எல். மோயன்ஸ் என்பவராகும். அவர் இத் தீபகற்பத்தின் வரலாற்றில் முதல் ஆயிரம் ஆண்டுகளின் விரிவான மறுமலர்ச்சியை ஆராய முயன்றுள்ளார். இவர் சாவக நாட்டுச் செய்திகளைப்பற்றி ஆராய்ந்த வரலாற்று மாணவர்களில் சிறப்புமிக்கவராகும். அவர் கையாண்ட வழிகளால் திகைப்புத் தரும் முக்கியமான செய்திகள் அதிகம் இல்லாமற் போயிற்று. அவருக்கு முன் ஆராய்ந்த அறிஞர்களைப் போலன்றி மிகக் கண்டிப்பான உள்ளத்தின் விவேகமுள்ள முறையைப் பெற்றிருந்தார். இந்தப் பகுதிகளில் பயணஞ் செய்த பண்டைக்கால வழிப்போக்கர்களான அரேபியர்கள் சீனர்கள் ஆகியவர்களின் குறிப்புக்களிலிருந்து தொகுக்கப்பெற்ற நில இயல் பற்றிய செய்திகளின்

* Dr. W. F. Stutterheim, "A Javanese Period in Sumatran History" (1929).

II R. C. Majumdar M. A. PH. D, "The struggle betwhen the Sailendras and the Cholas" (Journal of the Greater India Society I P 71 et Seq) 1934 "Decline and Fall of the Sailendras") (ibid II P 12 et Seq) 1935.

H. J. Przyluski D. Litt. "Indian Colonization in Sumatra before the Seventh Century" (ibid I p. 92 et Seq.) 1934.

தொகுதி அறிஞர் மோயன்ஸின் வாதத்திற்கு முக்கியமான அடிப்படையாயிருந்தது.

சாவக நாட்டின் வரலாற்றைப்பற்றியும் மக்களின் நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், கலைகளின் மறு மலர்ச்சி ஆகியவைகளைப் பற்றியும் திரு. மோயன்ஸ் அவர்களின் திறமைமிக்க ஆராய்ச்சியின் பயனாய் உண்மை யான நிலை உலகிற்கு அறிவிக்கப்பட்டது.

அவரது ஆராய்ச்சியின் பயனாக இந்து - மலேய ஆட்சி மலேசியத் தீபகற்பத்தில் நிறுவப்பட்டிருந்தது என்று உறுதிப்பட்டது. தமிழகத்தில் நடைபெற்ற போர்களின் பயனாக இங்குப் பல நிகழ்ச்சிகள் எழுந்தன. வெற்றி பெற்றவர்கள் மலேயத் தீபகற்பத்தில் பல அகதிகளைக் குடியேற்றினர். இந்தக் கோட்பாட்டின் பயனாகக் கி. பி 300ஆம் ஆண்டில் மூலவர்மன் மரபினர் ஆட்சியின்கீழ் குடே ஆட்சி எழுந்தது. இது பல்லவ மன்னனால் இக்ஷ வாகு நாட்டைவிட்டு விரட்டப்பட்டதின் பயனாகும். இதே கருத்துப்படி மேற்குச் சாவகத்தில் தருமன் இராஜ்யம் வீழ்ந்தது. இந்திய சக்கரவர்த்தி சமுத்திரகுப்தனால் சாலங்காயன மன்னன் தோற்கடிக்கப்பட்டான். கி. பி. 518 ஆண்டுக்கு முன் பாலம்பாங் இராச்சியம் (பழைய மலையு போலி அல்லது மா - லி.) திடுமெனத் தொடர்பற்றது. கௌண்டினிய மன்னர்களின் கீழ் விஷ்ணுகுண்டின் என்ற ஆந்திர அரசனால் விரட்டப்பட்டு நாடுகடத்தப்பட்ட (பௌத்த) காந்தாரிஸ் மத்திய சாவகத்தில் 609 ஆண்டுகளுக் குப் பின் 616 ஆண்டுளுக்கு முன் போலி அல்லது பாடி என்ற இராச்சியத்தை நிலைநாட்டினான். இதன் பலனாகக் கலிங்கர் ஆட்சியினர் சாவகத்தைக் கைப்பற்றினர். கங்கா - கலிங்கர் ஆட்சி செலுத்தினன். 7ஆம் நூற்றாண்டுவரை இந்தியாவி

லுள்ள கலிங்கத்திலிருந்து வந்த சஞ்சயனின் முன்னோர்கள் மலக்காவில் கலிங்க ஆட்சிக்கு அடிகோலினர் என்று கலிங்காவின், சீனநகல் பிரதிகள் கூறுகின்றன.

724 - 8ஆம் ஆண்டில் கெடா (கடாரம்) வீழ்ச்சி அடைந்தது. அதன் பலனாக அகதிகள் எங்கும் மலிந்தனர். சஞ்சயன் சைலேந்திரரோடு கூடி அகதிகளுக்கு மத்திய சாவகத்தில் நல்ல உறைவிடம் கண்டான். இதன்மூலம் சைலேந்திர மன்னர்கள் தங்களுக்கு முன்போந்த பனன் காரன் சாண்டியக்கலசானைக் கட்டியதுபோல் 778ஆம் ஆண்டில் சாண்டிமெண்ட் என்ற நினைவுச் சின்னத்தைக் கட்டி முடித்தனர்.

சன் - போ - ட்ஸின் ஆட்சி சோழரோடு போராடி 1023 - 24; 1030ஆம் ஆண்டுகளில் தற்காலிகமாகத் தோல்வியுற்று மீண்டும் தலை தூக்கியது. அதுபோல எர்லாங்கா மீண்டும் தலைதூக்கவும் சைலேந்திரர் ஆட்சியை அகற்றிச் சாவகத்தில் அமைதியையும் ஒற்றுமையையும் நிலைநாட்டினன்.

இவைகளையெல்லாம் மோயன்ஸ் தம் ஆராய்ச்சியில் மிக விரிவாய் ஆராய்ந்து விளக்கியுள்ளார்.*

இவ்வாறு உலாந்தா, பிரஞ்சு, இங்கிலாந்து முதலிய நாட்டிலுள்ள பேரறிஞர்கள் பலர் சாவக நாட்டின் வரலாற்றை நன்கு ஆராய்ந்து பல கட்டுரைகளையும் நூல்களையும் வெளியிட்டுள்ளனர். மேலும் இந்த நாடுகளிலுள்ள புதைபொருள் ஆராய்ச்சித் துறையினைச் சேர்ந்த அறிஞர்கள் நாடு

---

* New Light on the early History of the Malay Archipelago by Dr. Jaap kunst E (Curator of the Colonial Museum Amsterdam) — INDIAN ART AND LETTER VOL. XIII. No. 2. (London) - 1938.

முழுவதும் காடு மலைகளையும் தேடித்திரிந்தும் பூமியை அகழ்ந்து ஆராய்ந்தும் கிடைத்த பல்வேறு கட்டிடப் பகுதிகளையும் சிலைகளையும், அணிகளையும், பாத்திரங்களையும் ஆயுதங்களையும் தங்கள் புதைபொருள்கள் சேகரித்து வைத்திருக்கும் கண்காட்சிச் சாலையில் வைத்து ஆராய்ந்து பல நூல்களையும் துண்டுப் பிரசுரங்களையும் வெளியிட்டுள்ளனர்.

இந்த ஆராய்ச்சித் துறையில் பங்கு கொண்டவர்கள் பெரிதும் அயல் நாட்டார்களாய் இருக்கின்றார்களே யொழிய இந்தியர்களோ, தமிழர்களோ, இந்தோனேசியர்களோ அதிகமாகக் காணப்படாமல் இருப்பது நாம் சிந்திக்க வேண்டிய தொன்றாகும்.

---

## 11. சாவகப் பாவைக்கூத்து

தமிழகத்தில் சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் வரை இந்தப் பாவைக்கூத்துக்கள் எங்கும் மிகப் பரவலாக நடைபெற்று வந்தன. கிராம மக்கள் இரவெல்லாம் விழித்திருந்து இந்தப் பாவைக்கூத்தைப் பார்த்து மகிழ்ந்து வந்தனர். இந்தப் பாவைக்கூத்து நிழற்படம் என்று கூறப்படும் பொம்மைகளை வைத்து ஆட்டுவதைப் பொம்மலாட்டம் என்றும் புகல்வர். இந்தப் பாவைக்கூத்து தெருக்கூத்து என்றும் கூறப்படும். ஒரு பெரிய தெருவின் ஓரத்தில் ஒரு சிறிய கொட்டகை போடப்பட்டிருக்கும். முன்பக்கம் ஒரு வெள்ளைத்துணி கட்டப்பட்டிருக்கும். உள்ளே ஒரு ஒளிமிக்க விளக்கு எரியும். கூத்தை நடத்துபவர் தயார் செய்யப்பட்டிருக்கும் கதைக்குரிய படங்களைக் கையில் வைத்துக்கொண்டு அதன் நிழல் துணியில் பிரதிபலிக்கும்படி செய்வர். படங்களின் மேலே நீண்டிருக்கும் குச்சுகளைப் பிடித்துக்கொண்டு படங்களை இயக்குவர். அவர்கள் கைகளோ அவர்கள் இருந்து இயக்குவதோ, பார்க்கும் மக்களுக்குத் தெரியாதவாறு அடிப்பக்கம் கருப்புத்துணி கட்டப்பட்டிருக்கும். இந்தக் கூத்தர்கள் கைகளில் பலபடங்களை ஒரே சமயத்தில்வைத்து இயக்குவர். படங்களின் கைகளும், கால்களும் ஏன்? தலைகள்கூட இயங்கும். படங்கள் முன்னும் பின்னுமாகக் கொண்டுபோகப்படுவது மூலம் பெரிதாகவும் சிறிதாகவும் காணப்படும். போர்கள், திருமணங்கள் முதலிய நிகழ்ச்சிகள் எல்லாம் அதிகச் சிறப்புடன் காட்டப்படும். இஃது இன்றைய சினிமாப் படம் போன்றதாக இருக்கும். சினிமா வந்து இந்தியாவில் இந்தக் கலையை அடியோடு அழித்துவிட்டது.

சாவகத்தில் பாவைக்கூத்தும் பொம்மலாட்டமும் இன்றும் சிறப்புடன் விளங்குகின்றன. இந்தக் கூத்தரங்கங் கள் பலவித அமைப்புகளை உடையனவாய்த் திகழ்கின்றன. மிகத் தொன்மையானவை வாயங்பெபர் என்று கூறப்படும். நிழலாட்டத்தை வாயங்புர்வர் என்றும் பொம்மலாட்டத்தை வாயங்கெடாக் வாயங்கிளிட்டிக் என்றும் கூறுவர். இந்தக் கதைகள் பெரும்பாலும் சாவக வரலாற்றைத் தழுவி இந்திய இதிகாசங்களான இராமாயணம்பாரதம் முதலியவைக ளோடு ஆரம்பமாகி மசாபாகித் மன்னர்களோடு முடி வடையும். இந்தப் பாவைக்கூத்து சீன நாட்டினின்று இறக்குமதி செய்யப்பட்டதா அல்லது இந்திய நாட்டி லிருந்து கொண்டுசெல்லப்பட்ட கலையா என்று அறிஞர்க ளால் அறுதியிட்டு உரைக்க முடியவில்லை. ஆனால், நம்மைப் பொறுத்தவரையில் திட்டவட்டமாக இந்தப் பாவைக்கூத்து இந்திய மூலத்தை உடையதென்று கருதுகிறோம். பொம்ம லாட்டம் பொம்மைகளைக் கயிற்றால் கட்டி மேலிருந்து இழுப்பதுமூலம் பொம்மைகளை இயக்குவதாகும்.

இன்று உலகமெங்கும் மக்கள் உள்ளங்களைக் கவர்ந்து நிற்பது ஒளி உருவப்படங்களேயாகும் (சினிமாவேயாகும்). முற்காலத்தில் வாழ்ந்த தமிழ்மக்கள் இந்தப் படக்காட்சிக்குப் பதிலாக நாடகங்களையே நடத்தி வந்தனர். அவைகளைக் கூத்து என்றும் கூறுவர். நாடகத்தில் ஆடலும் பாடலும் இணைந்திருந்தன. நாடக வளர்ச்சியில் துணையாகப் பல இசைக் கருவிகள் இணைக்கப்பட்டன. நாடக அரங்குகள் நாகரிக முறையில் எழுந்துள்ளன. நாடகத்தை நிறைவுடைய தாக்கப் பல வண்ணங்கள் தீட்டிய தட்டிகளும் திரைச்சீலைக ளும் தொங்கவிடப்பட்டன. திரைச்சீலைகளைப் பழந்தமிழர் எழினி என்றனர். இந்த எழினி, ஒருமுக எழினி, பொருமுக

எழினி, கரந்துவரல் எழினி என்று மூன்று வகைப்பட்டதாய் இருந்தது. இந்தத் திரைகளில் ஒரு பக்கம் ஒருமுக எழினியும், மற்றொரு பக்கம் பொருமுக எழினியும், மேலே கரந்துவரல் எழினியும் இருக்கும். ஒருமுக எழினி என்பது ஒரு பக்கமிருந்து மற்றொரு பக்கம்வரை தள்ளக்கூடிய திரை. பொருமுக எழினி என்பது இரண்டாகப் பிரிக்கப்பட்டு இரு பக்கங்களிலிருந்தும் தள்ளக்கூடிய திரை. கரந்துவரல் எழினி மேலே மறைவாய்ச் சுற்றிவைக்கப்பட்டிருக்கும் திரை. இதனைச் சுருள் சஞ்சிகை என்று பெருங்கதை கூறுகிறது. அரங்கின் உள்ளே அணி அணியாய் அழகிய நிலைவிளக்குகள் ஏற்றப்பட்டிருக்கும். அவைகள் மிகுந்த நுண்ணறிவுடன் விளக்கின் நிழல் ஆடுபவர்கள்மீதோ காட்சியைக் காண வந்திருப்பவர்கள்மீதோ விழாதபடி தக்க இடத்தில் வைக்கப்பட்டிருக்கும்.

"ஏற்ற வாயில் இரண்டுஉடன் பொலியத்
தோற்றிய அரங்கில் தொழுதனர் ஏத்தப்
பூதரை எழுதி மேல்நிலை வைத்துத்
தூண்நிழல் புறப்பட மாண்விளக் கெடுத்தாங்கு
ஒருமுக எழினியும் பொருமுக எழினியும்
கரந்துவரல் எழினியும் புரிந்துடன் வகுத்தாங்கு
ஓவிய விதானத்து உரைபெறு நித்திலத்து
மாலைத் தாமம் வளையுடன் நாற்றி
விருந்துபடக் கிடந்த வருந்தொழில் அரங்கத்து"

(சிலப். அரங். 105-113)

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. எனவே மிகத் தொன்மையான காலத்திலே தமிழகத்தில் நாடகக்கலை சிறந்து விளங்கியிருந்தது என்பதற்கு உறுதியான சான்றுகள் உண்டு. அந்தப் பழங்காலத்திலே விளக்கின்

வெளிச்சத்தில் உருவங்கள் தோன்றுவதையும் பெரிதாவதை-யும் அறிந்திருந்தனர். அதோடு நாடகத்தில் வரும் மக்கள் கதாபாத்திரங்களைத் தவிர ஆடுமாடு, யானை, புலி, சிங்கம், குரங்கு, கழுகு, மயில், புறு, கருடன், பாம்பு போன்றவைகளைப் பிடித்து அரங்கத்திலே கொண்டுவரமுடியாமல் இருந்ததால் பலகைகளில் அல்லது தோல்களில் விலங்குகள் அல்லது பறவைகள் உருவங்களைத் தீட்டி வண்ணமூட்டி அதை இயக்கி வந்துள்ளனர்.

நாடகம் மன்னர்களின் ஆதரவு பெற்ற ஓர் உயர்ந்த கலையாக மிளிர்ந்தது. கோயில்களில் நாடக அரங்குகள் கட்டப்பட்டு அதில் பெரிய அறிஞர்கள் நாடகங்களில் நடித்து வந்தனர். மன்னர்கள் அதைக் கண்டு சுவைத்து நடிகர்களுக்குப் பல பரிசுகள் அளித்து வந்தனர்.

ஆனால், பாவைக்கூத்து, (நிழலாட்டம்), பொம்மலாட்டம் என்னும் கலைகளைத் தமிழகத்தினர் அத்துணை உயர்ந்த கலையாக மதிக்கவில்லை. பாமர மக்களின் கலையாகவும் சிற்றூர்களில் ஏழைமக்கள் சுவைக்கும் கலையாகவும் இருந்தது. இது சிற்றூர்களில் தெருக்கோடியில் செலவின்றி ஒரு சிறு மேடை கம்புகளால் அமைத்துச் சுற்றிலும் மூன்று புறமும் மேற்புறமும் தென்னங் கீற்றினால் மறைக்கப்பட்டு முன்பக்கம் ஒரு பழைய வெள்ளைத்துணியைக் கட்டி உள்ளே விளக்கேற்றி வைத்துக்கொண்டு தோலினாலான உருவங்களின் மூலம் முன்பக்கமுள்ள துணியில் நிழலாகக் காட்டுவார்கள். இதன்வாயிலாகப் பெருங்கதைகளும் மிகச் சுலபமாக மக்களுக்குக் காட்டப்படும். மக்கள் விடியும் வரை அயராது கண்டுகளிப்பர். இது மக்களின் தெருக்கூத்துக்களில் ஒன்றாக மதிக்கப்பட்டு வந்தது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வரை-விளக்கமாகச் சொல்வதானால் சினிமாக் காட்சி

தலைதூக்கும் வரை இக் கலை தமிழ் நாடெங்கும் பரவி இருந்தது. சினிமாக் காட்சியின் மூலம் நாடகக் கலையும் பாவைக்கூத்தும் பொம்மலாட்டமும் காடேறிவிட்டன.

இந்தப் பாவைக்கூத்தை இயக்கும் சூத்திரதாரியின் திறமை வியக்கத்தக்கது. இந்தச் சூத்திரதாரி கயிற்றை இழுத்து இயக்குவதன் மூலம் கூத்து முழுவதும் நடைபெறுகிறது. இவனது இயக்குந் திறமை போற்றத்தக்கது. இந்தக் கலையில் ஒரு குடும்பம் முழுவதுமே ஈடுபடும். இசை உரையாடல் பலவிதமான ஒலிகளைக் கிளப்பல் முதலியவைகளுக்கு ஒரு குடும்பத்தில் உள்ள கணவன், மனைவி, மக்கள், அண்ணன், தம்பி முதலிய அனைவரும் ஈடுபட்டு வந்தார்கள். கிராம மக்கள் ஊரில் வரிவசூலித்துப் பாவைக்கூத்துக்காரர்களுக்கு உதவி வந்தனர். உணவு உடை முதலிய அன்பளிப்புகளும் அளித்து வந்தனர்.

பாவைகள் ஆட்டுத்தோல், எருமைத்தோல், மெல்லிய பலகை போன்றவற்றால் அமைத்து அவைகளுக் கேற்ற வண்ணந்தீட்டி ஆடைகளும் அணிகளும் பொலியக் கலைத் திறமையோடு நடத்திவந்தனர்.

ஆந்திர நாட்டில் உள்ள நாட்டுப்புறங்கள் பாவைக் கூத்திற்குரிய இடங்களாக நெடுங்காலமாக இருந்து வருகின்றன. குமாரசம்பவம், உத்தர ஹரிவம்சம், இரங்கநாத இராமாயணம், பல நாட்டின் வீரசரித்திரம், சம்போ பாக்கியானம், பாஞ்சாலிபரிணயம் என்னும் தெலுங்கு நூல்கள் இதைப்பற்றிக் கூறுகின்றன. இந்தக் கூத்தைச் சிவராத்திரி விழாவில் சிரிசைலம் போன்ற கோயில்களில் நடத்தினார்கள் என்றும் மகாபாரதம் போன்ற காவியங்களி லிருந்து எடுத்த கதைகளே இதன் கருவாக இருந்தன

என்றும் பால்குறிகி சோமநாதர் இயற்றிய பண்டிதாராத்ய சரித்திரம் தெரிவிக்கிறது.

"ஆந்திர நாட்டிலும் கர்நாடக நாட்டிலும் சூத்ரத கொம்பே (நிழலாட்டம்) சக்கலத் கொம்பே (பொம்மலாட்டம்) என்பவற்றின் நிலைக்களமாக யட்சகானம் என்ற இசை நாடகம் உபயோகப்படுத்தப்படுகிறது. இரு நாடுகளிலும் யட்சகான இலக்கியங்கள் வளமுடையனவாய் இருக்கின்றன.

"உண்மையில் இதற்காகவே தெலுங்குக் கவிகள் யட்சகானங்களை எழுதினார்கள். மரிங்கண்டி பட்டரு இராமநுசாச்சாரியார் (கி. பி. 1850) இயற்றிய சிரி இராம நாடகம் என்ற யட்சகானம் பொம்மலாட்ட இராமாயணம் என்று புகழ் அடைந்திருக்கிறது.

ஆந்திர நாட்டில் நெடுங்காலமாக இந்த ஆட்டம் குடும்பக் கலையாகி விட்டது. இராயல சீமா நெடுங்காலமாகப் பாவைக்கூத்தாடும் குடும்பத்தினருக்கு நிலைக்களமாக இருந்து வருகிறது. அத்தகைய குடும்பத்தினர் மன்னர்களிடம் வரிசை பெற்றார்கள்; இனாம் கிராமங்களை அடைந்தார்கள். இராயல சீமையில் பொம்மலாட்டம என்ற பெயரோடு ஓர் ஊரே இருக்கிறது. அங்கே பல கவிஞர்கள் இருந்து விளங்கினார்கள். அவர்களில் ஒருவராகிய பொம்மலாட்ட ஸாம்பையா என்பவர் (கி. பி. 1710) தெலுங்கில் கிராதார்ச்சுனீயம் என்ற யட்சகானத்தையும் கன்னடத்தில் இரண்டு யட்சகானங்களையும் இயற்றினார்.

ஆந்திர நாட்டில் உள்ள பொம்மலாட்டக்காரர்கள் மகாராஷ்டிர தேசத்தினின்று குடியேறியவர்கள். அவர்கள் காகதீயப் பேரரசின் ஆதரவில் கலையின்பம் வழங்கினார்கள். சிலர் தெலிங்கானாவிலும் சிலர் இராயல சீமையிலும் ஆந்திர

தேசத்துக் கடற்கரையோரப் பகுதிகளிலும் குடியேறினர்கள். சிலர் கன்னட நாட்டிற்கும் சிலர் கேரள நாட்டிற்கும் சென்றனர்கள். ஜாவா முதலிய தீவுகளுக்குச் சென்றவர்களும் உண்டு. அவர்களாலேதான் பொம்மலாட்டம் ஜாவாவில் வளர்ந்து வருகிறது போலும் என்ற கருத்துப்பட டாக்டர் எஸ். வி. ஜோகராவ் அவர்கள் ஆந்திர நாட்டிலுள்ள திரிவேணி பத்திரிகையில் விரிவாக ஒரு கட்டுரை எழுதியுள்ளார்.*

இஃதன்றி நீண்டகாலமாக இந்தியாவில் பாவைக் கூத்து என்னும் நிழலாட்டம் மக்களுக்கு மகிழ்ச்சியூட்டக் கூடியதாகவும் நாட்டுப்புற மக்களின் கலையாகவும் இருந்து வந்துள்ளது என்று ஏ. பி. கீத் போன்ற அறிஞர்கள் கூறுகிறார்கள். அதனோடு மிக வளர்ச்சியடைந்து நாடெங்கும் பரவிநின்ற நாடகக் கலைக்கு "நிழலாட்டம்" அடிப்படையாக இருக்கிறது என்றும் கருதுகிறார்கள். கிறிஸ்தவ ஊழி எழுந்து ஆயிரம் ஆண்டிற்கு அப்பால்தான் இந்தியாவில் பிறந்து வளர்ந்த இந்த நிழலாட்டம் என்னும் கலையே வெளிநாட்டிற்குப் போயிருக்கலாம் என்று எண்ணப் படுகிறது. சீனநாட்டிலும் இக் கலை பரவி இருந்ததாக அறிஞர்கள் கூறுகின்றார்கள். சாவகத் தீவிற்கு இந்தியாவினின்றே இந்த நிழலாட்டக் கலை சென்றிருக்க வேண்டும் எனச் சில அறிஞர்கள் கருதுகின்றார்கள். முகமூடி அணிந்து ஆடும் ஒரு பேயாட்டம் சாவகத்தில் உண்டு. சீனத்திலும் இலங்கையிலுங்கூட இருந்தது என்று கூறப்படுகிறது. இந்தியாவில் இந்தக் கலையிருந்தது என்று சொல்வதற்கு ஏற்ற சான்றுகள் இதுவரை கிட்டவில்லை. அதனால்

---

* பாவைக்கூத்து—டாக்டர் எஸ். வி. ஜோகராவ் திரிவேணியில் எழுதிய கட்டுரை. (ஆங்கிலம் ஜனவரி 63) மசூலிப்பட்டினம் - மஞ்சரி தமிழ்மொழி பெயர்ப்பு.

இதனோடு நெருங்கிய தொடர்புள்ள பொம்மலாட்டம், நிழலாட்டம் (பாவைக்கூத்து) என்ற கலைகள் இந்தியாவிற் குரியனவல்ல என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள். யார் என்ன கூறினும் சாவகத்தில் நிலவிய பாவைக்கூத்து இந்திய மூலத்தை உடையது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. ஏனெனில் இராமகாதையும் பாரத இதிகாசமும் இசையும் இதற்கு உயிராக இருப்பதை நினைக்கும்பொழுது நமது உள்ளக் கிடக்கை சரி என்பதை மெய்ப்பிப்பதாக இருக்கிறது. எனவே இந்தியர்கள் இந்தியாவிலிருந்து சாவகத்திற்குப் பௌத்தம், சைவம் ஆகிய சமயங்களோடு இசையையும் கொண்டு சென்றனர். இராமாயணம் பாரதம் போன்ற இதிகாசங்களையும் இதை விளக்கும் சிற்பக்கலையை யும், பொம்மலாட்டம் என்ற புதுக்கலையையும் கொண்டு போனார்கள் என்று கூறுவதில் வியப்படைவதற் கொன்றும் இல்லை. அறிஞர் ஆனந்த குமாரசாமி பண்டைக்காலத்தில் இந்தியாவில் பாவைக்கூத்துக்கள் (பொம்மலாட்டங்கள்) இருந்தன என்பதற்குப் போதிய சான்றுகள் இல்லை என்று கருதுகிறார்கள். அவர் தம் கருத்தை ஏற்கும் அறிஞர் ஜி. சேக்கப் என்பவரின் கருத்தையும் மேற்கோளாக எடுத்துக் காட்டுகின்றார். சாவக நிழற் படங்களின் உருவங்கள் தோலினால் செய்யப்பட்டு இயங்கக்கூடிய கரங்கள், கால்கள், கழுத்துக்கள் இணைக்கப்பட்டுள்ளன. ஆனால், அவைகள் சீனாவைப் போல் ஒளிவீசுகிறதில்லை. பர்மா, தாய்லாந்து முதலிய நாடுகளில் எல்லாக் காட்சிகளும் இயற்கை நிலக்காட்சியோடு ஒன்றித்து அசைய முடியாத தாய் அமைந்திருக்கின்றன. சாவக நிழற்படம் உருவங்கள் குறிப்புக்களோடு கையினால் இயக்கப்படுகிறது. நிச்சயமாகப் பாவைக்கூத்து ஒரு பொழுது போக்கு விளையாட்டு என்பதை விட உயர்ந்ததாக மதிக்கப்படக் கூடியது ஆகும். பழைய

இனத்தவர்களின் அபிமானத்தில் இஃது ஓர் ஒழுங்கு முறையான சடங்காக இருக்கிறது. அவர்களின் உணர்ச்சி தோல்பொம்மையாகப் பிரதிபலிக்கிறது. உண்மையான பொம்மலாட்டம் (Wayang Golek) கைகளும் கால்களும் நன்ருக்வும் இயங்கக் கூடியனவாகப் பர்மாவில் இல்லாத விதமாய் உருவாக்கப்பட்டுள்ளன.

இறுதியாக உயிருடன் இருக்கும் நடிகர்கள் பங்கு கொள்ளும் விளையாட்டுகளும் காட்டப்பட்டன. முகமூடி விளையாட்டுகள் (Wayang openg) உயர்ந்த பழைமைச் சின்னமாக இருக்கின்றன. ஒழுங்கான அரங்கங்களின் ஆட்டங்கள் (Wayang Wong) நிழற்படங்களின் (பொம்மலாட்டங்களின்) போலி விளையாட்டாகும். இந்த மானுஷீக அரங்கம் முக்கியமாக எட்டாவது நூற்றுண்டின் உயர் குலத்தினரால் உற்பத்தி செய்யப்பட்டதாகும். ஆனால், இதன் துறைகள் எல்லாம் பழைய மூலங்களினின்று உருவானவை. பிரபுக்களின் ஆடைகள், காட்சிகள், பரம்பரை நாட்டியங்கள் அபிநயங்கள் எல்லாம் தொன்மையான முகத்தோற்றத்திலேயே நிகழ்கின்றன. இந்தப் பழம் பொருள்கள் எல்லாம் வரலாற்று ரீதியாக இல்லாவிட்டாலும் நிச்சயமாக உள்ளத்தால் நேரடியாக உணரப்படும் உண்மையாக இருக்கின்றன. சாவக அரங்கங்களில் இது உயிர் உள்ளதும் உணர்ச்சிவசமாக அறிவுறுத்தும் வீரத்தையும் காதலையும் எடுத்துக்காட்டும் படமாகவும இருக்கின்றது. நிலையான நடிகர் குழுக்கள் யோக்கியகர்த்தாவும் சுரகர்த்தாவும் அரசவையால் ஆதரிக்கப்பட்டு வந்தன. அரசகுடும்பத்தில் உள்ளவர்கள்கூட இதில் அங்கம் பெற்றிருந்தனர். சில முக்கிய சம்பவங்களில் நூற்றுக் கணக்கான நடிகர்கள் மாதக் கணக்காய்ப் பயிற்சி அளிக்கப்

பட்டு வந்தனர். சாவக அரங்கங்கள் ஆத்மீக உணர்ச்சியை யும் கலைப் பண்பையும் வளர்க்கும் உயரிய சின்னங்களாக இருந்தன. இதனோடு சப்பானிலுள்ள நோகாக்கு (No-gaku) ஒன்றே ஒப்பிடற்குரிய தாகும்.

சாவகத்தின் நாட்டியங்கள் நல்ல அரங்கில் நடைபெறு கின்றன. சிறப்பாக நடிகர்களின் நாட்டியத் தன்மை அரங்கின்மீது முதன்முதலாகத் தோன்றும் பொழுதே காட்டப்பட்டு விடுகிறது. இது தவிர அரசமூகத்தில் ஆடுவதற்காக இருக்கும் பெண்கள் செரிம்பில், பெடோயோ நாட்டியங்களை ஆடுவதில் கைதேர்ந்தவர்களாக இருக் கிறார்கள். அனேகமாக அரண்மனை நாட்டியங்கள் அனைத்தும் அலங்கார வகையாகவே இருக்கும். அபிநயங்கள் காட்டும் முறைகள் எல்லாம் தமிழகப் பாணியைத் தழுவி யனவாகவே இருக்கும். பழைய சிலைகளைப் பிரதிபலிக்கும் முறையில் ஆடும் நாட்டியங்கள் குறைவாகவே இருக்கும்.

சாவக நாட்டுத் தேசீயப் பாணியில் உள்ள பஞ்சாடை பாட்டிக் (Batik) என்பது தமிழக மூலத்தை உடையது என்பதில் எள்ளளவும் ஐயமின்று. பெரும்பாலான ஆடை களின் அலங்கார வேலைப்பாடுகள் சாவகத்தில் இஸ்லாமிய ஆட்சி எழுமுன் இருந்தவையேயாகும். ஏனையவைகள் சிறப் பாக வட்டமாகப்பூவேலை செய்யப்பட்டவைகளாகும். அவைகள் சாண்டிசிவோ வெளிச்சுவர்கள்மீது அலங்கரிக்கப்பட்ட பூவேலைப்பாடுகளைப் பிரதிபலிப்பதாக இருந்தன. மத்திய சாவகத்தில் நீலம், ஊதா (Brown) ஆகிய இருநிறங்கள் மட்டும் காணப்படும். மற்ற இடங்களில் சிவப்பும் பச்சையும் சேர்ந்திருக்கும். சாதாரணத் துண்டுகள் கேயன் பஞ்சாங் என அழைக்கப்படும். இவைகள் தமிழ்நாட்டு ஆண்கள் அணியும் ஆடைபோன்று இருக்கும். இதைக் கெய்ன்

சிலெண்டாங் என்பார்கள். பெண்கள் மார்பின்மீது அணியும் தாவணியாகவும் உபயோகப் படுத்தப்படும். தலையில் கட்டப் படும் ஒரு சதுரத் துணியைக் கெய்ன் கப்பாலா என்பார்கள். இது தலைப்பாகைபோல் மடித்துத் தலையில் அணியப்படும். இந்தத் தலைப்பாகையைச் சாவகத்தில் தலையில் இறுகப் பிணைத்திருப்பார்கள். மலேயாவிலும், மேற்குச் சாவகத்தி லும் சாரம் என்னும் அரை ஆடையை ஆண்களும் பெண்களும் அணிவர். பாலித் தீவில் பகட்டான ஆடைகள் (கெய்ன் ப்ரடா) இளவரசிகளாலும் நடிகைகளாலும் அணியப் படும். சாவக ஆடைகள் (பட்டிரிக்) பொற்சரிகையினால் அலங்கரிக்கப்பட்டிருப்பதோடு அச்சும் அடிக்கப்பட்டிருக்கும். இந்த ஆடையின் வேலைப்பாடுகள் சுத்தமான அசல் இந்தியப் பாணியாகவே இலங்கும். ஒருசில ஆடையின் அலங்கார முறைதான் சினத்தைத் தழுவி இருக்கும் பட்டு மிகக் குறைவாகவே பயன்படுத்தப்படுகிறது.

இஃதன்றி அழகிய பஞ்சாடைகள் சுமத்திரா தீவின் டோபர் பாட்டாக் என்ற இடத்தில் பிற்போக்குள்ள சில இனத்தவர்களால் செய்யப்படுகின்றன. போர்னியோவிலும் இன்னும்பல சிறு தீவுகளிலும் பஞ்சாடைகள் அழகாக செய்யப்படுகின்றன. அவைகள் எல்லாம் இந்திய பாரம்பரியத்துவம் உடையனவென்று அறிஞர்கள் அனைவரா லும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. சாவக மகளிர் முகச் சாயலும் நடையும் ஆடைகளும் நாகரிகமும் பண்பும் தமிழகத்தோடு மிக நெருங்கி நிற்பதை இன்றும் காணலாம். சாவகர்கள் மங்கோலி மரபினர் என்று கூறப்பட்டாலும் திராவிட இனத்தவர்களின் முகச்சாயல் அவர்களிடம் பெரிதும் பிரதிபலிக்கிறது. உடையில் நடையில் உணவில் குணத்தில் தமிழ்ச் சாயல் நன்கு காணப்படுகின்றது.

# 12. முடிவுரை

"தமிழகம், மக்கள் இனத்தின் தொட்டில்" என்றார் செர்மன் நாட்டின் மண்ணூல் அறிஞர் ஹெக்கல் அவர்கள். "உலகில் மிகத் தொன்மையான மொழி தமிழ், இன்றும் தன் இளமை குன்றாது கன்னித் தமிழ், எழில் பெற்று இலங்குகிறது. இம்மொழி பிறமொழியின் துணையின்றித் தனித்தியங்கவல்லது" என்று புகழ்மாலை சூட்டியுள்ளார் கிறிஸ்தவ சமயப் பெரிய குருவாகிய இராபர்ட் கால்டுவெல் அவர்கள். பழந்தமிழ்ப் புலவர் கணியன் பூங்குன்றனார் அவர்கள்,

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" (புறம். 192: 1.)

என்று தமிழர்களின் பண்பாட்டை எடுத்துக் காட்டியுள்ளார்.

இதன் மூலம், தமிழகம் உலக மக்களின் தாயகம்; தமிழ் உலக மக்களுக்கு உரித்தான தொன்மை வாய்ந்த மொழி; தமிழ் மக்களுக்கு உலகனைத்தும் சொந்தம்; உலகினர் அனைவரும் அவர்களின் உறவினர் என்று நன்கு தெரிகிறது.

இந்த எண்ணம் - இந்த உணர்ச்சி, தமிழ் மக்களிடம், அறிந்தோ அறியாமலோ உள்ளத்தில் உறைந்து கிடக்கிறது. எனவே அவர்கள் மிகத் தொன்மையான காலத்திலே உலகி லுள்ள எல்லா இடங்களிலும் சென்று குடியேறினர். கடல் கடந்து பல்வேறு தீவுகளிலும் போய் வாழ்ந்தனர். அப்பால், மொழிகளும், நாடுகளும் பிரிந்து, நிறமும், அறமும், பண் பாடுகளும் வேறுபட்ட பின்னரும் தமிழர்கள் பல்வேறு

நிலப்பகுதிகளுக்கும் சென்று குடியேறினர். தீவுகளிலும், தீபகற்பங்களிலும் போய் வாழ்ந்தனர். அங்குள்ள மக்கள் தங்களின் வழியினர் என்ற வுணர்வோடு அவர்களோடு இணைந்து சகோதர நேயத்தோடு வாழ்ந்தனர். அவர்களோடு கொள்வனை கொடுப்பனை செய்து இரண்டறக் கலந்து இன்புற்று வாழ்ந்தனர். அவர்களின் சமயத்தையும் கலைகளையும் பண்பாட்டையும் இணைத்து நல்லறம் பேணும் நானில மக்களாய் வாழ்ந்தனர். அவர்கள் குடிபுகுந்த நாடுகளி லெல்லாம் தங்கள் சமயத்தையும் கலைகளையும் பண்பாட்டை யும் பரப்பினர்.

கிழக்கிந்தியத் தீவுகள் பலவற்றில் கிறிஸ்தவ சகாப்தம் துளிர்ப்பதற்கு முன்னரே இந்தியர்கள் - வங்கர்கள், கலிங்கர்கள், ஆந்திரர்கள், குசராத்தியர்கள், தமிழர்கள் போன்றவர்கள் குடியேறியுள்ளார்கள் என்று உலக வரலாறு கூறுகிறது. ஆனால் இங்குக் குடியேறிய மக்களுள் பெரும்பாலோர் திராவிடப் பெருங்குடிமக்கள். ஏன்? அவர்களி லும் சிறப்புமிக்கவர்கள் தமிழர்களே. தமிழர்களின் வரலாற்றை ஆராய்ந்தவர்கள் அவர்கள் ஐயாயிரம் ஆண்டு களுக்கு முன்பே நனிசிறந்த நாகரிகத்தைப் படைத்தவர்கள்; கட்டிடக் கலையில் கை தேர்ந்தவர்கள்; ஆழ்கடலில் அழகிய மரக்கலங்களில் ஆயிரக்கணக்கான கல் தொலைவிற்குச் சென்று பல்வேறு நாடுகளைக் கண்டவர்கள். ஞாயிறு ஒளியினைக் காணாது மரஞ் செடி கொடி முதலியவைகள் அடர்ந்து புதர்களாய்க் காட்சி அளித்த காடுகளை யெல்லாம் கண்டு, காடுகளைந்து நாடுகளாக்கியும் வீடுகள் கட்டியும், கழனிகளாகத் திருத்தியும் புதிய நாகரிகங்களை உருவாக்கிய வர்கள். கிறிஸ்து பிறப்பதற்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே மொழிகளையும் அதற்கு வரிவடிவங்களையும்

வகுத்தவர்கள்; நாடு பெயர்ந்து செல்லத் தெரிந்தவர்கள் என்றெல்லாம் கூறியுள்ளனர். தமிழர்களின் முன்னோர்கள் என்று கூறப்படும் திராவிடர்களே ஆதியில் சுமேரிய நாட்டினின்று இந்தியாவிற்கு வந்து சிந்து ஆற்றின் அருகே குடியேறி ஐயாயிரம் ஆண்டிற்கு முன்னர் மொகஞ்சதாரோ, அரப்பா என்னும் நகரங்களை எழுப்பிப் பழம்பெரும் நாகரிகங்களை வளர்த்தவர்கள் என்று சிந்து நதிப்பகுதியில் நிலத்தை அகழ்ந்து ஆராய்ந்து கண்ட ஐரோப்பியப் பேரறிஞர்கள் முடிபுகட்டியுள்ளார்கள். ''சுமேரிய நாட்டிலுள்ள 'உருக்' என்ற இடத்தில் அகழ்ந்து கண்ட பல பொருள்களுக்கும் சிந்து வெளியிற் கண்டெடுத்த பொருள்களுக்கும் அதிகமான ஒருமைப்பாடுகள் காணப் படுகின்றன. இதன்மூலம் தொன்மையான காலத்தில் 'உருக்' நாகரிகத்தை உருவாக்கக் காரணமாக இருந்த சுமேரியர்களே இந்தியா போந்து இந்தியாவிலிருந்து பண்டைய மக்களோடு கலந்து வாழ்ந்து வந்த இனத்தவராக இருக்க வேண்டும். அந்தக் கலப்பின் வழிவந்த மக்களே சிந்து வெளி மக்களாவார்'' என்று அறிஞர் மெக்கேய் அவர்கள் கூறியுள்ளார்கள்.*

சுமேரிய நாட்டினின்று பலுச்சிஸ்தானம், அரப்பா, மொகஞ்சதாரோ முதலிய இடங்களில் குடியேறிய மக்களே திராவிடர்கள் எனப்பட்டனர்.† இவர்கள் பிற்காலத்தில் ஆரியத் திராவிடப் போரினாலோ அல்லது இயற்கைக் கோளாறினாலோ அங்கிருந்து பெயர்ந்து படிப்படியாகப்

* Further Excavation at Mohenjo - Daro—Mackay. Vol I p. 663.

† The Riddle of Mohenjo - Daro (an article in the New Review - April 1936.) by Dr. Hunter.

பல்லாண்டாகத் தெற்கு நோக்கித் திரும்பி வந்தனர். இவர்களில் சிலர் ஆங்காங்கே தங்கி நாடுநகரங்களை அமைத்து வாழ்ந்து வந்தனர். ஒரு சிலர் தெற்கு நோக்கி வந்து தென் கோடியில் தங்கினர். இவர்களையே இன்று நாம் தமிழர் என்கிறோம்.

சமயம் வந்தால் இவர்கள் தொன்று தொட்டு நாடு விட்டு நாடு சென்று குடியேறும் பண்பு வாய்ந்தவர்கள். இவர்கள் எவ்விதமான தட்பவெப்பநிலைகளையும் பொறுத்துக் கொண்டு வாழத் தெரிந்தவர்கள். ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக உயர்ந்த ஒப்பற்ற நாகரிகத்தை வளர்த்து வந்தவர்கள். இவர்கள் சுமேரிய நாட்டில் உருவாக்கிய நாகரிகத்தைவிடத் தலைசிறந்த நாகரிகத்தை அரப்பாவிலும் மொகஞ்சதாரோவிலும் உருவாக்கியவர்கள். அப்பால் இவர்கள் தென் இந்தியாவில் குடியேறி அங்கு அரப்பா, மொகஞ்சதாரோ நாகரிகத்தைவிடச் சிறந்த நாகரிகத்தை ஒப்பற்ற நாகரிகத்தைக் கட்டி வளர்த்தவர்கள். இந்தப் பண்பு வாய்ந்த மக்கள் ஈழம், மலேயா, கடாரம், சிங்கபுரம் தாய்லாந்து, கம்போசகம், சம்பா,போர்னியோ, பாலி, சாவகம், சுமத்திரா போன்ற நாடுகளிலெல்லாம் போந்து உலக மேதைகள் கண்டு வியக்கும் ஒப்பற்ற நாகரிகத்தை உருவாக்கியவர்கள். இயற்கையின் கோபத்தால் இவர்கள் வெளிநாடுகளில் வளர்த்த நனிசிறந்த நாகரிகங்கள் இன்று நலிவுற்றுக்கிடக்கின்றன. பல்லாண்டாகத் தமிழ் நாட்டில் எழுந்த அரசியல் விளைவுகளால் தமிழர்கள் தங்கள் இனத்தவர்கள் வாழும் சாவகம் போன்ற நாட்டோடு நெருங்கிய தொடர்பு கொள்ள முடியாமற் போய்விட்டது.

தமிழர்கள் பல்வேறு நாடுகளில் குடியேறி இருக்கின்றார்கள். என்றாலும் சாவக நாட்டின் குடியேற்றம்

மாண்பு மிக்கது. உலகில், தமிழர்கள் குடியேறிய நாடுகளில் சாவகம் தலைசிறந்த குடியேற்றமாகும். அவர்கள் அந்த நாட்டில் குடியேறி அந்நாட்டு மக்களோடு பாலில் சீனி கரைவதுபோல் இரண்டற இணைந்துள்ளார்கள். அதனோடு தங்களை அந்நாட்டுமக்களின் மொழி, கலை, பண்பாடு முதலியவற்றோடு இணைத்துக் கொண்டுள்ளார்கள். இன்று சாவகத்தில் வாழும் மக்களில் யார் அந்நாட்டின் பழமையான குடிகள் ? யார் தமிழ் நாட்டினின்று குடியேறிய மக்கள் ? என்று எவராலும் பிரித்துக் காணமுடியாதவாறு ஒன்றித்து வாழ்ந்து வருகின்றார்கள். அதேபோன்று தமிழ் நாட்டுக் கலை எது ? தமிழ் நாட்டு மொழி எது ? தமிழ் நாட்டு நாகரிகம் எது? என்று பிரித்துக் காணமுடியாதவாறு எல்லாம் சாவகத்தில் இணைந்துள்ளன. எனவேதான், டாக்டர் ஆனந்தக் குமாரசுவாமி போன்ற கலைவிற்பன்னர்கள் "சாவகத்தில் ஒளிர்வது இந்தியக் கலையென்றோ இந்தோ னேசியக் கலையென்றோ இந்தோ - சாவகக் கலையென்றோ கூறமுடியாது" என்று கூறியுள்ளார்கள். எனவே நாம் சாவகத்தில் வாழும் மக்களை இந்தோ சாவகமக்கள் என்றும் அங்குக் காணும் கலைகளை இந்தோ சாவகக் கலை என்றோ அல்லது திராவிட சாவகக் கலை என்றோ கூறலாம்.

இன்று அறிஞர்கள் கண்ட தெளிவான முடிவு சாவகத்தில் வாழும் மக்களில் பெரும்பாலோர் தமிழர்களோடு இரத்த சம்பந்தமான தொடர்புடைய மக்களாகும். அவர்கள் முன்னோர்கள் எல்லாம் சைவ சமயத்தைத் தழுவியவர்களாவார்கள். அவர்களின் கலைகள் எல்லாம் அப்பழுக்கற்ற தமிழ் நாட்டுக் கலைகளின் பிரதிபலிப்பேயாகும். ஒரு காலத்தில் சாவகத்தில் தமிழ் அரசாங்க மொழியாகக்கூட இருந்தது என்று பலர் எண்ணுகின்றார்கள். இன்றும்

அங்குள்ளோர்களிற் சிலர் பல்லவர் குடும்பம், பாண்டியர் குடும்பம், சோழர் குடும்பம், சேரர் குடும்பம் என்று சொல்லி வருகிறார்கள்.* மதுரை போன்ற ஊர்களும், சரசுவதியாறு போன்ற நதிகளும் இருக்கின்றன. தமிழ், வடமொழிச் சாசனங்கள் பல மேலும் மேலும் கிடைத்து வருகின்றன. பல்வேறு விதமான கோயில்களும், நினைவுச் சின்னங்களும் சிவபெருமான், சிவலிங்கம், பார்வதி, கொற்றவை, திருமால், மகாவிஷ்ணு, சத்தியபாமா, உருக்குமணி, நான்முகன், அகத்தியர் (சிவகுரு), கணபதி, சூரியன், வருணன், வாயு, குபேரன், இராவணன், இராமன், சீதை போன்ற திரு உருவங்கள் பல கல்லிலும், செம்பிலும், வெள்ளியிலும், பொன்னிலும் கிடைத்துள்ளன. தமிழர் கண்ட நாட்டியத்தின் மாற்றுவடிவு சாவகத்திலும் காணக்கிடக்கின்றது.† பெண்களும் ஆண்களும் பண்டையத் தமிழர்களைப்போல நேற்றுவரை அரையில் ஆடைகள் அணிந்து வந்துள்ளனர். தமிழ் நாட்டு விளக்கைப் போன்ற திருவிளக்குகள் அங்குக் கிடைத்துள்ளன. அந்நாட்டு ஆண் பெண் மக்கள் தமிழர்களைப் போல் அழகும் சாந்தமும் பொறுமையும், வாய்ந்தவர்கள். அவர்களிற் பலர் இன்று பௌத்தர்களா

---

* Dravidian tribal names are still to be found among the Batakas - India and the Pacific world; Kern recognised long ago that the earliest Indian Colonists of Sumatra were of Dravidian origin. Before the spread of Malays in different parts of the archipelago the Dravidian element was supreme. The Austric people of Cambodia mixed with Dravidians founded a peaceful kingdom long ago. Pre-historic Ancient and Hindu India - R. D. Banerji p. 30

† Ancient Indian Colonies in the Far East - Dr. R. C Mazumdar.

யும், இசுலாமியர்களாயும் இருந்தாலும் தமிழர் பண்பாட்டி னின்று மாறுதவர்களாய் நல்ல தமிழர்கள் போல் இருந்து வருகின்றனர். இதுவரை தமிழர்களாகிய நாம் நமது உறவினர்களான சாவக மக்களோடு தொடர்பு கொள்ளாம லும் அவர்கள் நாட்டிலுள்ள சைவ நெறியையும் அவர்களின் கோயில், தெய்வங்கள் முதலியவைகளையும் கண்டு களித்து ஆராயாமலும் இருந்துவிட்டோம். இனியாவது தமிழர்கள் சாவக நாட்டிற்குச் சமாதானத் தூது செல்லவும் கலைத் தொடர்பு கொள்ளவும் அரசியல் நட்பை வளர்க்கவும் முன்வர வேண்டும்.

---

## இந்நூல் எழுதத் துணையாக இருந்த நூல்கள்


1. Early Tamil Cultural Influences in the South East Asia. S. J. Gunasegaram M. A. (Lond.) 1958.
2. History of India and Indonesian Art - Dr. Ananda Coomaraswamy (London) 1929.
3. Indian Influence in the Far East— Prof. K. A. N. Sastry, M. A.
4. Pre-historic Ancient and Hindu India— R. D. Banerji.
5. Ancient Indian Colonies in the Far East— Dr. R. D. Mazumdar.
6. The Larger Leiden Plates of Rajarja I. Ep. Ind. Vol. XXII. No. 34.
7. Katalog des Ethnographische Reichsmuseums led V. Javanische Alter thumer—H. H. Juynboll.
8. Selected Examples of Indian Art — Dr. Ananda Coomaraswamy. 1911.
9. Hindu Javansche en Balische ereedienst in Bijdragow Col. de Taal Land - en Uolkenkunde Ned— Inde Part 1615.
10. Indian Sculptures and Paintings—E. B. Havell (Lond) 1908.
11. Brandes Beschrijving Von Tjandi Singasri (1909)
12. History of Fine Art in India and Ceylon— V. A. Smith (Oxford).

13. The Relation between the Art of India & Java
Dr. P. H. Vogel (Lond) 1925.

14. History of Indian and Eastern Architecture—
Fergusson (Lond) 1910.

15. Archeologie du Sud I' Inde—G. Jouveau Dubrail (Paris) 1914.

16. The Jataka or Stories of the Buddha's former births (Cambridge) E. B. Cowel 1. Vol. II (1913).

17. Buddhist art in India (Lond.) 1901.

18. The Stupa of Bharhut— A. Cunningham (London) 1870.

19. The Influences of Indian art— Dr. J. P. H. Vogel (London).

20. The Meaning of the Kala Makara Ornament—
W. F. Stutterheim (Indian Art & Letters article.)

21. Cultural relation between India and Java—
A. J. Bernet Kempers Ph. D.—Calcutta 1937.

22. Further Excavation at Mohenja - daro—
Mackay. Vol. I.

23. A short Guide to the ruined temples in the Perambanan the dieng and Gedong Sanga—
Dr. M. E. L. Van Goor 1922.

24. Indian Culture in Java and Sumatra
Dr. B. R. Chatterji M.A., Ph. D.

25. Evidences of South Indian Culture in Indonesia-
Prof. S. V. Visvanathan.

26. ஜாவா யாத்திரை (கடிதங்கள்) - இரவீந்திரநாத் தாகூர் (தமிழ்) 1952.

27. சைவத்தின் சமரசம் - திரு. வி. க. (சென்னை) - 1930

28. பிற்காலச் சோழர் சரித்திரம் - டி. வி. சதாசிவ பண்டாரத்தார்.

29. கலைக்களஞ்சியம் தொகுதி I - சென்னை. 1954.

30. புறநானூறு (கழக வெளியீடு).

31. பூர்வீக இந்தியாவும் ஜாவா சுமாதராத் தீவுகளும்-கட்டுரை ஒ. பி. தேசிகன்.

32. தேவாரம் - திருஞானசம்பந்தர்.

33. ,, திருநாவுக்கரசர்.

34. திருவாசகம் - மாணிக்கவாசகர்.

திங்கள் இதழ்கள் :

35. Indian art and letters vol. XXIII (London) 1939.

36. Rupam Calcutta (January 1920)—Article.

37. Modern Review, Calcutta 1927.